# தொல்காப்பியப் பொருளதிகாரம்

கருத்துரையும் ஆங்கில மொழி பெயர்ப்பும்

# PORULATIKARAM OF TOLKAPPIYAM

*An English Version*

Dr. A. A. Manavalan




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies

# தொல்காப்பியப் பொருளதிகாரம்

(கருத்துரையும் ஆங்கில மொழிபெயர்ப்பும்)

(அகத்திணை இயல் - புறத்திணை இயல்)

# Poruḷatikāram of Tolkāppiyam

*An English Version*

(Akattiṇai iyal and Puṟattiṇai iyal)

**Dr. A.A. MANAVALAN**




**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**

International Institute of Tamil Studies

இரண்டாவது முதன்மைச்சாலை

மையப் பல்தொழில் நுட்பப் பயிலக வளாகம்

தரமணி, சென்னை - 600 113

# BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | Poruḷatikāram Tolkāppiyam of (Akattiṇai iyal and Puṟattiṇai iyal) |
| Author | : | Dr. A.A. Manavalan<br>International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus<br>Chennai - 600 113 |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Tharamani, Chennai - 600 113<br>Ph:22542992 |
| Publication No | : | 556 |
| Language | : | Tamil & English |
| Year of Publication | : | 2005 |
| Edition | : | Second Edition; First : 1998 |
| Paper used | : | TNPL 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | Demy 1/8 |
| Printing Types | : | 10 Points |
| No. of Pages | : | XLVI + 122 |
| No. of Copies | : | 1000 |
| Price | : | Rs.50/- (Rupees Fifty only) |
| Printing | : | **Pavai Printers (P) Ltd.,**<br>142, Jani Jan Khan Road,<br>Royapettah, Chennai - 600 014.<br>Ph: 28482441, 28482973 |
| Subject | : | Tamil Grammar |

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை-600 113.

## அணிந்துரை

தொல்காப்பியம் தமிழின் தொன்மையையும், இலக்கிய வளத்தையும் எடுத்துக்காட்டும் ஆவணமாகும். இந்நூல் மொழிக்கு மட்டும் இலக்கணம் கூறாமல் மக்களின் வாழ்வியலுக்கும் இலக்கணம் கூறும் நூலாகவும் திகழ்கிறது.

தொல்காப்பிய எழுத்ததிகாரத்திலும் சொல்லதிகாரத்திலும் கூறப்பட்டுள்ள இலக்கணக் கூறுகள் மேலை மொழியியல் வல்லுநர்களும் வியந்து பாராட்டும் வகையில் அமைந்துள்ளன.

தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் காணப்படும் மெய்ப்பாட்டியல், உவமவியல், செய்யுளியல் , போன்ற இயல்கள் தொல்காப்பியர் காலத்திலும் அவருக்கு முன்பாகவும் வெவ்வேறு யாப்பு இலக்கணங்கள் பரந்து விரிந்த நிலையில் பயிற்சியிலிருந்தன என்பதை எடுத்துக் காட்டுகின்றன. அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல் போன்ற இயல்கள் மக்களின் செம்மாந்த இருப்பையும், அவர்களின் வாழ்வியலையும், உணர்வுபூர்வமான வாழ்க்கை நிலைகளையும் மிகச் சிறப்பாக எடுத்துக்கூறியுள்ளன. பொருளதிகாரத்தின் இறுதி இயலான மரபியல் உயிரினங்கள் மரபு வழியாக எவ்வாறு சொல்லப்பட்டு வந்தன என்பதை நமக்கு உணர்த்துகின்றது. மரபு என்று கருதும் நிலையில் அவை எத்தகு மரபுக்காலத்தைச் சேர்ந்தவை என்று சுட்டி அறுதியிட முடியாத நிலையில் மரபியல் கருத்துகள் மிகத் தொன்மை வாய்ந்தனவாகக் கருதப்படுகின்றன. எனவே மொழி, வாழ்வியல், உயிரினத் தொகுதி ஆகியவற்றின் கட்டமைப்பை வரையறுத்துக்கூறும் ஒரு முழுமையான இலக்கணமாகத் தொல்காப்பியம் விளங்குகிறது என்பதை அனைவரும் உணரலாம்.

தமிழின் முதல் நூலாக விளங்கும் இத்தகு இலக்கண நூலை உலகோர்க்குக் கொண்டுசேர்க்கும் வகையில் தலையாயதாக விளங்குவது இதன் மொழிபெயர்ப்பாகும்..

தொல்காப்பியத்தை அறிஞர் பலரும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளனர். தொல்காப்பியத்தின் சிறப்பு உலகெங்கும் ,

பரவுவதற்கு இம் மொழிபெயர்ப்புகள் பாலமாக அமைகின்றன என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

தொடர்ந்து மொழி ஆய்வுப் பணிகளையும், மொழிபெயர்ப்புப் பணிகளையும் மேற்கொண்டுவரும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் முன்பு வெளியிட்ட அரிய நூல்களை மீண்டும் மறுபதிப்புச் செய்வதிலும் ஆர்வம்காட்டி வருகிறது. அவ்வகையில் பேராசிரியர் முனைவர் அ.அ. மணவாளன் அவர்கள் முன்பு மொழிபெயர்த்த தொல்காப்பியம் பொருளதிகாரம் குறித்த உரையின் ஆங்கில மொழிபெயர்ப்பான அகத்திணையியல் புறத்திணையியல் எனும் நூலைத் தேவை கருதி மறுபதிப்புச் செய்ய இந்நிறுவனம் எண்ணியது. இதற்கு இசைவளித்த இந்நிறுவனப் பதிப்புக்குழுவிற்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முதல் பதிப்பில் காணப்பட்ட பல்வேறு பிழைகள் நூலாசிரியரால் செப்பம் செய்யப்பட்டுச் சீரிய பதிப்பாக இப்பதிப்பு இப்போது வெளிவருகிறது.

தொல்காப்பிய நூற்பாக்களின் மொழிபெயர்ப்பாக அமையாமல், கருத்தின் மொழிபெயர்ப்பாக இந்நூல் அமைந்திருப்பதால் அனைவரும் எளிதில் விளங்கிக் கொள்ளும் வகையில் இந்நூல் விளங்குகிறது.

இந்நூல் முதற்பதிப்பில் உள்ளதை அவ்வாறே ஒளிநகல் எடுத்து அச்சிடப்பெறாமல் மீண்டும் கணிப்பொறியில் ஒளிக்கோப்புச் செய்யப்பட்டுப் புதிய பதிப்பாக வெளிக்கொணரப் படுகிறது.

இந் நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு கல்வி மற்றும் வணிகவரித்துறை அமைச்சர் திருமிகு சி.வி. சண்முகம் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாடு-மற்றும் அறநிலையத் துறைச் செயலாளர் முனைவர் பு.ஏ. இராமையா இ.ஆ.ப., அவர்களுக்கும், சிறப்புச் செயலாளர் திருமிகு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப., அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு ஒளி அச்சுக்கோப்புச் செய்த கணிப்பொறி உதவியாளர் திருமதி பி. கௌசல்யாவுக்கும் திரு. சு. கண்ணனுக்கும் அழகுற அச்சிட்டுத் தந்த பாவை அச்சகத்தார்க்கும் பாராட்டுகள்.

சென்னை
29-11-2005

இயக்குநர்

முனைவர் ச.சு. இராமர் இளங்கோ
மேனாள் இயக்குநர்

## முதற் பதிப்பின் அணிந்துரை

வடவேங்கடம் தென்குமரி ஆயிடை தமிழ் கூறும் நல்லுலகில் வாழ்ந்த தமிழ் மக்களின் மொழிக்கு இலக்கணம் கூறும் நூல் ஒல்காப் பெரும்புலவர் தொல்காப்பியர் இயற்றிய தொல்காப்பியம்.

இந்நூல் தமிழ் மொழியின் தொன்மையையும், சிறப்பையும் எடுத்துரைப்பதற்கும், தமிழ் மக்களின் நாகரிகத்தை நவில்வதற்கும் நமக்கு அடிப்படைச் சான்றாதாரமாக விளங்குகிறது.

இத்தகைய சிறப்புப் பெற்ற தொல்காப்பியத்திற்கு உரைகள் கி.பி. ,10-ஆம் நூற்றாண்டுக்குப் பிறகுதான் எழுதப்பட்டன. தொல்காப்பியப் பெருமைக்கு உரையாசிரியர்களின் பங்களிப்பு சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. தொல்காப்பியத்திற்குப் பண்டைய உரையாசிரியர் உரைகளோடு இன்றுவாழும் அறிஞர்களும் உரை எழுதி வருகின்றனர். இத்தகைய பெருமை பெற்றது தொல்காப்பியம்.

தொல்காப்பிய உரைகள் அனைத்தையும் தொகுத்து ஒரே நூலாக வெளியிட வேண்டும் என்ற நோக்கில் திராவிடப் பல்கலைக் கழக இணைவேந்தரான வ.அய். சுப்பிரமணியம், ஆபிரகாம் அருளப்பன் ஆகிய இருவரும் சொல்லதிகாரத்தின் முதல் பகுதிக்கு முதன் முதலாக உரைவளம் வெளியிட்டனர்.

இம் முயற்சியைத் தொடர்ந்து உலகத் தமிழாராய்ச்சி நிறுவன மேனாள் இயக்குநர் முனைவர் ச.வே. சுப்பிரமணியன் அவர்கள் இந்நிறுவனத்தின் 'தொல்காப்பியத் திட்டப் பணிக்கு' வித்திட்டார். பேராசிரியர் ஆ. சிவலிங்கனார் அவர்கள் தொல்காப்பிய உரைகள் அனைத்தையும் தொகுத்து ஒவ்வொரு இயலையும் தனி நூலாக்கித் தந்து இத்திட்டத்தை வெற்றி பெறச் செய்தார். இந்நிலையில் 27 இயல்களையும் நிறுவனம் வெளியிட்டுள்ளது. இங்ஙனம் தமிழ் மொழியின் சீரிளமைத் திறத்திற்கு அடித்தளமாக அமைந்த தொல்காப்பியத்தைப் பரப்பும் பணியில் இந்நிறுவனம் நீண்ட காலமாகப் பணி செய்து வருகிறது.

மேலும் தமிழ் அறியாதவர்களுக்குத் தொல்காப்பியத்தின் பெருமையை அறிவிக்க நிறுவனம் ஆங்கிலத்திலும் நூல் வெளியிட்டுள்ளது. இந்நிறுவனத்தில் பணியாற்றிய பேராசியரிர் ஆல்பர்ட் அவர்கள் தொல்காப்பியம், எழுத்து, சொல் ஆகிய அதிகாரங்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார். அவரது

"Tholkappiyam-phonology, morphology" எனும் நூலை இந்நிறுவனம் 1985இல் வெளியிட்டுள்ளது.

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் மொழித் துறைத் தலைவராகப் பணியாற்றிய பேராசிரியர் முனைவர் அ.அ. மணவாளன் அவர்கள் நுண்மாண் நுழைபுலம் பெற்றவர். தமிழிலும் ஆங்கிலத்திலும் புலமை மிக்கவர். மொழியியல், ஒப்பிலக்கியம் முதலிய துறைகளில் ஆழ்ந்த புலமை மிக்கவர். இவர் இந்நிறுவனத்தின் தொடக்கக் காலத்தில் கல்விசார் அலுவலராகப் பணியாற்றி இந் நிறுவனத்திற்குப் பெருமை சேர்த்தவர். இவரது கட்டுரைகளும் நூல்களும் ஆழமும் தரமும் சிறப்பும் வாய்ந்தவை. Tamil Research Through Journals, **20ஆம் நூற்றாண்டு இலக்கியக் கோட்பாடுகள்** முதலிய நூல்களை இந்நிறுவனம் முன்னரே வெளியிட்டுள்ளது.

தொல்காப்பியப் பொருளதிகாரத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளியிட வேண்டும் என்னும் விழுமிய எண்ணத்தில் இந் நிறுவனத்தில் வருகைதரு பேராசிரியராகப் பணியாற்றிய முனைவர் அ.அ. மணவாளன் அவர்கள் '**தொல்காப்பியப் பொருளதிகாரம் கருத்துரையும் ஆங்கில மொழிபெயர்ப்பும்**' (அகத்திணை இயல்-புறத்திணை இயல்) எனும் திட்டப் பணியினைச் செய்து அளித்துள்ளார். இத்திட்டப்பணி இப்போது நூலாக வெளிவருகிறது.

நிறுவன வளர்ச்சியில் ஆக்கமும் ஊக்கமும் காட்டி வருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி-பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத் துறை அமைச்சர் முனைவர் மு.தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி-பண்பாடு மற்றும் அறநிலையத் துறைச் செயலாளர் திருமிகு. த.இரா. சீனிவாசன் இ.ஆ.ப. அவர்களுக்கும் எங்கள் உளங்கனிந்த நன்றி.

இந்நூலினை நல்ல முறையில் அச்சிட்டுத் தந்த பாவை அச்சகத்தார்க்கு எங்கள் நன்றி.

**முனைவர் ச.சு. இராமர் இளங்கோ**

# முன்னுரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் 1997–1998ஆம் ஆண்டில் வருகைதரு பேராசிரியராகப் பணியாற்றிய பொழுது நிறுவன இயக்குநர் டாக்டர் ச.சு. இராமர் இளங்கோ அவர்களின் கருத்துப்படி மேற்கொண்ட ஆய்வுத் திட்டத்தின் பயனாகத் "தொல்காப்பியப் பொருளதிகாரம் - கருத்துரையும் ஆங்கில மொழி பெயர்ப்பும்" என்னும் இந்நூல் வெளியிடப்படுகிறது. பொருளதிகாரத்திற்கு நிறுவனம் மூலமாக ஓர் ஆங்கில மொழிபெயர்ப்பு செய்யப்பட வேண்டும் என்னும் நோக்கத்தில் மேற்கொண்ட திட்டமாயினும் தமிழ் வடிவத்தையும் ஆங்கில வாசகர்கட்கு அளிக்க வேண்டுமென்னும் கருத்தாலும், தொல்காப்பிய நூற்பாக்கள் கருதும் பொருளைச் சுருக்கமாகத் தமிழில் தருவது தமிழ் வாசகர்கட்கும் பயன்படும் என்னும் எண்ணத்தாலும் இந்த நூலில் தமிழ், ஆங்கிலம் என்னும் இருவகை வடிவங்களும் தரப்பட்டுள்ளன. மேலும், மூலநூல் கருத்தை உள்ளவாறு எடுத்துரைக்கும் வாய்ப்பை மிகுதிப்படுத்தும் என்னும் மொழிபெயர்ப்புக் கோட்பாட்டிற்கு ஏற்பவும் இம்முறை மேற்கொள்ளப்பட்டுள்ளது.

பொருளதிகாரத்திற்கு இதுவரை பல ஆங்கில மொழி பெயர்ப்புகள் வெளிவந்துள்ளன. அவையாவன:

1. இ.எஸ். வரதராஜ அய்யர்.
   அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல் 1948.

2. பி.சா. சுப்பிரமணிய சாஸ்திரி
   அகத்திணையியல், புறத்திணையியல் 1950 களவியல், கற்பியல், பொருளியல் மெய்ப்பாட்டியல், உவமையியல், 1952. செய்யுளியல், மரபியல் 1956.

3. எஸ். இலக்குவனார், பொருளதிகாரம் முழுமையும் 1963.

4. நிர்மல் செல்வமணி. அகத்திணையியல் 1989.

இவை தவிர, R. வாசுதேவ சர்மாவும் வித்துவான் வடிவேல் பிள்ளையவர்களும் அகத்திணை, புறத்திணை இயல்களை முறையே 1933, 1934 ஆம் ஆண்டுகளில் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளதாக நிர்மல் செல்வமணி அவர்கள், மேற் குறிப்பிட்ட தம் நூலின் முன்னுரையில் குறித்துள்ளார். இவ் இரு மொழி பெயர்ப்புகளையும் காணும் பேறு எனக்கு வாய்க்கவில்லை. மேலே சுட்டிய நான்கு

மொழிபெயர்ப்புகளை மட்டும் ஆழமாகப் படித்துப் பார்க்கும் வாய்ப்பினைப் பெற்றேன். என்னுடைய இந்தச் சிறு மொழிபெயர்ப்புப் பணிக்கு இவை நான்கும் உடன்பாடு, எதிர்மறை என்னும் இரு நிலைகளிலும் பயன்பட்டுள்ளன. இம் முன்னோர்க்கு என் உளமார்ந்த நன்றி.

ஈரைந்து திங்களில் பகுதி நேரமாகச் செய்யப்பெற்ற இரண்டே இயல்களுக்கான இந்த மொழிபெயர்ப்பு பல்வேறு வகையான சிக்கல்களை இனங் காணும் வாய்ப்பினை எனக்கு நல்கியுள்ளது. "கம் விண்ட் கம் வெதர்" என்னும் விவிலியம் சார்ந்த விரிவுரையை மொழி பெயர்த்த போதும் (1961), வங்கியியல், வரலாறு ஆகிய துறைகளைச் சார்ந்த பாடநூல்களை மொழிபெயர்க்கும் பணியில் மொழியாசிரியனாகச் செயற்பட்டபோதும் (1963), சிந்தனையாழத்தின் சிகரமான அரிஸ்டாடிலின் "கவிதையியலை" மொழிபெயர்த்த போதும் (1976), சிலம்பு, மணிமேகலை, கம்பராமாயணம் ஆகிய காப்பியப் பகுதிகள் பலவற்றை ஆய்வு நோக்கில் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த போதும் (1979), தெலுகு மகா கவிகளுள் ஒருவராகிய போதனரின் கற்பனை சார்ந்த காப்பியம், தண்டகம் போன்ற நூல்களைப் பற்றிய திறனாய்வு நூலை மொழி பெயர்த்த போதும் (1981), சிலப்பதிகாரம், மில்டனின் 'துறக்கவீழ்ச்சி' ஆகிய காப்பியங்களின் முறையே ஆங்கில, தமிழ் பெயர்ப்புகளைச் சீர்தூக்கும் ஆய்வேடுகளுக்கு வழிகாட்டியாகச் செயற்பட்ட போதும் தோன்றாத் பல ஐயங்கள், எதிர் கொள்ளாத பல சிக்கல்கள் பொருளதிகார மொழி பெயர்ப்பின் போது என்னை மருட்டின. இந்த ஐயங்களைத் தெளிவித்துக் கொள்ளவும், சிக்கல்களை விடுவித்துக் கொள்ளவும் வேண்டித் தொல்காப்பிய அறிஞர்கள் சிலரையும், தொல்காப்பியம் பற்றிய ஆய்வுரைகள், நூல்கள் சிலவற்றையும் அணுகினேன் ஐயங்கள் சில அகன்றன. பல என்னைக் கண்டு இரங்கின. சிக்கல்கள் சில அவிழ்ந்தன; பல சிலந்தி வலைபோல மீண்டும் பின்னிக் கொண்டன. நான் சந்திக்க இயலாத அறிஞர்களாலும், நான் பார்த்துப் பயனடையாத சில நூல்களாலும், இனி வரும் மொழிபெயர்ப்பாளர்களாலும், தெளிவிக்கப்படலாம், தீர்க்கப்படலாம் என்னும் நம்பிக்கையின் அடிப்படையில், இப்பணியில் நான் எதிர் கொண்ட சிக்கல்களில் இன்றியமையாத சிலவற்றை மட்டும் இங்கே குறிப்பிட விரும்புகிறேன்.

## இருவகைச் சிக்கல்கள்

பொதுவாக மொழிபெயர்ப்புப் பணியில் இருவகையான செயற்பாடுகள் இடம் பெறுகின்றன. ஒன்று, தரு மொழிப் பாடத்தின்

பொருளை (மூலநூற்பொருளை) உள்ளவாறு உணர்ந்து கொள்ளுதல்; மற்றது, அவ்வாறு உணர்ந்து கொண்ட மூலப் பொருளை மற்றொரு மொழியின் வடிவத்திற்குப் பெயர்த்து (மாற்றி) அமைத்தல். இவற்றுள் மூல நூற்பொருளை உணர்ந்து கொள்வதில் எதிர்ப்படும் சிக்கல்களை மொழிபெயர்ப்புச் சிக்கல்கள் என்று கூறுவதில்லை. மொழிமாற்றி அமைப்பதில் ஏற்படும் சிக்கல்களே அவ்வாறு அழைக்கப்படுகின்றன. எனவே மூலநூலுக்குப் பொருள் காணுதல் (interpretation), கண்ட பொருளைக் கண்டவாறே பிற மொழிக்கு ஏற்றுதல் (translation) என்னும் இருவகைச் செயற்பாடுகளுக்கு ஒரு மொழி பெயர்ப்பாளன் இலக்காகிறான். இவ் இரு வகைச் செயற்பாடுகளிலும் நேரும் சிக்கல்களை எதிர் கொண்டு, அவற்றை விடுவித்துத் தன் பணியை நிறைவேற்றும் கடமையுடையவனாக மொழிபெயர்ப்பாளன் விளங்குகிறான்.

## தருமொழிப் பாடப் பொருளை உணர்ந்து கொள்ளுதல்

இப்பணி தருமொழிப் பாடத்தின் தன்மைக்கு ஏற்ப வேறுபடும் இயல்பினது. பாடப் பொருண்மை, நூலின் வடிவம் என்னும் இரு கூறுகளுக்கேற்பப் பொருள்காணும் பணி அமையும். தொல்காப்பியப் பொருளதிகாரத்தைப் பொறுத்த வரையில், இந்த இரு கூறுகளுமே பொருள்காணும் பணியைக் கடினமாக்குகின்றன. கால இடையீடு, ஏடெழுதுவோர், நூலின் வடிவத்தில் எதிர்ப்படும் கலைச் சொற்கள், பாடவேறுபாடுகள், பாடச் சிதைவு போன்ற பல காரணங்களால் பொருளதிகார நூற்பாக்கள் சிலவற்றிற்குப் பொருள் காணும் முயற்சியில் முழு வெற்றியைக் காண இயலவில்லை. கால இடையீடும், ஏடெழுதுவோரும், பாடபேதங்களும் இல்லாமல், வினையின் நீங்கி விளங்கிய அறிவினையுடைய முனைவனாகிய அழல் நிறக் கடவுளால் "சுடச் சுடத் தயாரித்து" வழங்கப் பெற்றது எனக் கருதப்படும் இறையனார் களவியலுக்கு உரை காண்பதில், ஒருமித்த கருத்தின்றி நாற்பத்தொன்பது உடன்காலப் புலவர்கள் இடர்ப்பட்டுக், காரணிகன் ஒருவனை வேண்டி நின்றனர் என்னும் தமிழில் எழுந்த முதல் உரைகாரரின் கூற்றை நோக்கும்போது, கால இடையீடு முதலான மூன்றும் நிறைந்த பொருளதிகாரத்திற்கு உரை காண்பதில் நேர்ப்படும் சிக்கல்களை எளிதில் உணர்ந்து கொள்ளலாம்.

## மூலபாடச் சிதைவுகள்

பொருள் தொடர்ச்சிக்குத் தேவையான நூற்பாக்கள் காணப்படாமை, நூற்பாக்களின் முறைவைப்பு கருத்தோட்டத்திற்கு இயையப் பொருந்தாமை, பொருளை விரித்துரைக்கும்

நூற்பாக்களிடையே சீர்மைத் தன்மை காணப்படாமை, நூற்பாக்கள் சிதைந்த நிலை, பல்வேறு பாட வேறுபாடுகளைக் கொண்டிருத்தல் எனப் பல நிலைகளில் பொருளதிகார மூலம் சிதைவுபட்டிருக்கக் காண்கிறோம். இத்தகைய சிதைவுகள் அகத்திணை இயலில் மிகுதியாகவும், புறத்திணை இயலில் சிலவாகவும் காணப்படுகின்றன. இத்தகைய நிலையில் உரைவேறுபாடுகள் தோன்றுவதைத் தவிர்க்க இயலாது. அகத்திணை முதலாக மரபியல் ஈறாக உள்ள ஒன்பது இயல்களின் முறைவைப்பில் உரைகாரர்களிடையே வேறுபாடு காணப்படவில்லை. நூற்பாக்களின் எண்ணிக்கையிலும், அவற்றிற்குப் பொருள் காண்பதிலும் கருத்து வேறுபாடுகள் மலிந்து காணப்படுகின்றன.

சிதைவுகளும், பாடபேதங்களும், மற்றொன்று விரித்தலும் குறைந்த அளவில் காணப்படுவதாலும், தொல்காப்பியம் முழுமைக்கும் தோன்றிய முதல் உரை என்பதாலும், கழகப் பதிப்பான (1953), இளம் பூரணர் பாடமும் உரையும் இந்த மொழிபெயர்ப்புக்கு அடிப்படைகளாகக் கொள்ளப்பெற்றன. இளம் பூரணரின் பாடப்படி, அகத்திணை இயலின் முதலில் உள்ள "கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய் முற்படக் கிளந்த எழுதிணை என்ப" என்னும் இந்த நூற்பா இந்த இயலின் தலைச் சூத்திரம் தானா, இதற்கு முன்னர் வேறு சில நூற்பாக்கள் இருந்தனவா என்னும் ஐயம் எழுகிறது. "முற்படக்கிளந்த" என்னும் தொடருக்குப் பொருள் காண்பதிலும் சிக்கல் ஏற்படுகிறது. உரையாசிரியர்கள் பலரும் இதனைத் தலைச் சூத்திரமாகவே கருதி", "முற்படக் கூறப்பட்ட (முதன் முதலாகக் கூறப்பட்ட) ஏழு திணைகள்" எனப் பொருள் கண்டுள்ளனர். நாவலர் சோமசுந்தர பாரதியார்,

> "பொருட்படலத்தின் முதலில், பொருள், அகம், புறம் என இருவகைப்படும் என்பதும், அவற்றுள். . . அகத்திணை ஏழாமென்பதும் அவ்வகத்திணையும் கைக்கிளை, அன்பினைந்திணை, பெருந்திணை என ஏழாக வகுக்கப்படுமென்றும், ஆகிய இவற்றைச் சுட்டிய சில சூத்திரங்கள் அகத்திணையின் முதற்கண் இச்சூத்திரத்திற்கு முன்னே ஆசிரியரால் அமைக்கப்பட்டிருத்தல் வேண்டும். . . "முற்படக் கிளந்த" என்னும் தொடருக்கு, "இதற்கு முன்னே ஆசிரியர் கூறிப்போந்த என்று அமையப் பொருள் காண்பதே பொருத்தமாகும்." என்று கூறுவதை நோக்க இது தலைச் சூத்திரம் தானா என்னும் ஐயம் வலுவடைகிறது. முற்படக் கிளத்தல் என்னும் சொற்றொடர் தொல்காப்பியத்துள்

சொல்லதிகாரத்தில்,

முற்படக் கிளவார் (38), முற்படக் கிளத்தல் (39)
முற்படக் கிளவார் (41) முற்படக் கிளத்தல் (279)

என நான்கிடங்களில் பயின்றுள்ளது. இந்த நான்கிடங்களிலும் "முன் கூறி, முன் சொல்லி" என்று இளம்பூரணர் பொருள் காண்கிறார். பொருளதிகாரத்தில்,

முற்படக் கிளந்த எழுதிணை (1)
முற்பட வகுத்த இரண்டு (178)

என இரண்டு இடங்களிலும் 'முற்கிளந்த' (486) என ஓரிடத்திலும் இத் தொடர் பயின்றுவரக் காண்கிறோம். இவற்றுள் 'முற்பட வகுத்த' என்பதற்கு முற்படக் (அகத்திணையியலுள்) கூறிய எனவும், 'முற்கிளந்த' என்பதற்கு மேற் சொல்லப்பட்டன என்றும் இளம்பூரணர் பொருள் காண்கிறார். இவ்வாறு ஆறு இடங்களில் முன் கூறிய, முன் சொன்ன, மேலே சொல்லப்பட்ட என்று பொருள் காணும் இளம்பூரணர், இந்த முதற் சூத்திரத்திற்கு மட்டும் அவ்வாறு பொருள் கொள்ளாமல் 'முதலில் கூறப்பட்டன' (பின்னர்க் கூறப்படுவன புறத்திணைகள்) என்று பொருள் காண்பது நம் சிந்தனைக்குரியதாக அமைகிறது. நாவலர் பாரதியார் "முன்னே சொல்லப்பட்ட" என்று பொருள் காண்கிறார். (காண்க.அடிக்குறிப்பு-1). எனவே இந்த நூற்பாவிற்கு முன்னர்ச் சில நூற்பாக்கள் இருந்திருக்க வேண்டும் என்னும் பாரதியாரின் கருத்து மேலும் வலுவடைகிறது. இதனை மறுத்து மு.அருணாசலம் தம் பதிப்பில் (பக்.35-36) கூறும் வாதங்கள் பொருத்தமானவையாகத் தோன்றவில்லை. பொருளதிகாரம் முழுவதையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ள பி.சா.சு. சாஸ்திரியார், 'முற்படக் கிளந்த' என்னும் தொடருக்கு, "முன்னோர்களால் பாகுபாடு செய்யப் பெற்ற" என்று பொருள் கூறி, இச் சிக்கலை விடுவிக்க முயல்கிறார். ஆனால் மொழிபெயர்க்கும் போது 'முன்னே கூறப்பட்ட' (mentioned before) என்று கூறுகிறார். 'என்ப' என்னும் பயனிலையே இப்பாகுபாடு தொல்காப்பியர்க்கு முந்திய இலக்கணிகளால் செய்யப்பெற்றது என்பதை வெளிப்படையாக உணர்த்துவதால் சாஸ்திரியாரின் விளக்கம் மிகையாகத் தோன்றுகிறது.

எஞ்சி யோர்க்கும் எஞ்சுதல் இலவே (45)

என வரும் அகத்திணைஇயல் நூற்பா, பிரிவின்கண் கூற்றுக்குரியரான நற்றாய், தோழி, கண்டோர், தலைவன் ஆகியோரின் கூற்றுகளைக்

கூறும் நூற்பாக்களை அடுத்து வைக்கப்பட்டுள்ளது. தலைவி கூற்றுகளைக் கூறும் தனி நூற்பா காணப்பெறவில்லை. எஞ்சியோர் என்னும் சொல் தலைவி, பாங்கன், பார்ப்பார், பாணன், கூத்தர் போன்றோரைக் குறித்து நிற்கிறது என நச்சினார்க்கினியர் முதலான பழைய உரையாசிரியர்களும், இக்காலக் காண்டிகை உரையாசிரியராகிய பால சுந்தரனாரும், உரைவளம் பதிப்பித்த மு. அருணாசலம் பிள்ளை அவர்களும் கருதுகின்றனர். இளம் பூரணர் தம்முடைய விளக்க உரையில்,

> பாங்கர் முதலாயினாரை இச் சூத்திரத்தாற் கூறுப;
> தலைமகள் கூற்றுத் தனித்துக் கூறல் வேண்டும்,
> இவரோடு ஒரு நிகரன்மையின் எனின், ஒக்கும்.
>
> தலைமகள் கூற்று உணர்த்திய சூத்திரம்
> காலப் பழமையாற் பெயர்த்தெழுதுவார் விழ எழுதினார்
> போலும்.
>
> ஆசிரியர், இச்சூத்திரத்தானும் பொருள் கொள்ள வைத்தமை
> யின், தலைமைகள் கூற்று வருமாறு:

என்று கூறுவதை நோக்கத் தலைவிக்கு இவ்விடத்தே தனிச் சூத்திரம் கூற வேண்டும் என்பதும், அத்தகைய சூத்திரம் ஒன்று இருந்து ஏடு பெயர்த்து எழுதுவோரால் விடப்பட்டிருக்க வேண்டும் என்பதும், அவருடைய துணிபுகளாகப் பெறப்படுகின்றன. நாவலர் சோம சுந்தர பாரதியாரும் இக்கருத்தை உடன்பட்டுக் கூறுகிறார் (மு. அருணாசலம் பிள்ளை, தொல்காப்பியம் – அகத்திணையியல், மதுரைப் பல்கலைக்கழகம் 1975, ப.486)

உடன் போக்கில் கூற்றுகள் நிகழ்த்தும் சிறுபான்மையோரில் தலைவியும் ஒரு பாத்திரமாகையால் அவள் கூற்றுகளைப் பற்றிய தனிச் சூத்திரத்தைத் தொல்காப்பியர் கூறவில்லை என்று மு. அருணாசலம் பிள்ளையவர்களும் (ப. 492), தலைவிக்குரிய பொதுக்கிளவிகள் அரியவாகலின் தலைவி கூற்றினை விதந் தோதவில்லை என்று பாலசுந்தரனாரும் (ப. 104) கூறி இளம் பூரணர் மற்றும் பாரதியாரின் கருத்துகளை மறுத்துள்ளனர். இங்கு அதிகாரப்படும் பொருள் உடன்போக்கு என்னும் அருணாசலம் பிள்ளையின் கருத்தை இந்நூற்பாவுக்கு முன்னுள்ள ஓதல் முதலான பிற பிரிவுகளைப் பற்றிய தலைமகன் கூற்றுகளே வலுவிழக்கச் செய்வதாலும், விதந்தோதப்பட்ட கண்டோர்க்குரிய கூற்றுகளுக்கு ஏழு சான்றுகள் காட்டும் பாலசுந்தரனார், இந்த நூற்பாவில்

தலைவிக்குரிய கூற்றுகளுக்கு ஆறு சான்றுகள் காட்டுவதாலும், இளம் பூரணர் தலைவி கூற்றுக்கு உரியனவாகப் பதினான்கு இலக்கியச் சான்றுகள் தருவதாலும், தலைவிக்குரிய பொதுக்கிளவிகள் அரியன என்னும் பாலசுந்தரனாரின் கருத்தும் வலுவற்றுப் போவதாலும், இவ் இருவரின் வாதங்கள் ஏற்றுக் கொள்ளக்கூடியனவாக அமையவில்லை. இனிப் புறத்திணை இயலின் முதற்கண் அமைந்துள்ள,

> அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர்
> புறத்திணை இலக்கணம் திறப்படக் கிளப்பின்
> வெட்சி தானே குறிஞ்சியது புறனே
> உட்குவரத் தோன்றும் ஈரேழ் துறைத்தே.

எனவரும் நூற்பாவும் சிதைவுற்றிருக்கலாமோ என்னும் ஐயம் தோன்றுகிறது. ஓர் இயலின் தலைச் சூத்திரம் அவ் இயலின் பொருண்மை பற்றிய விளக்கம் அல்லது வரையறை, வகை அல்லது பாகுபாடு போன்றவற்றைத் தரும் மரபினது என்பதைக் களவியல், கற்பியல், மெய்ப்பாட்டியல், உவமையியல், செய்யுளியல் என்னும் இயல்களின் முதற் சூத்திரங்களால் அறியலாம். இந்த நூற்பாவில் புறத்திணையின் வரையறையோ, பாகுபாடோ தரப்படவில்லை. மாறாக, எடுத்த உடனே வெட்சி குறிஞ்சியது புறன் என்றும் அதன் துறைகள் இத்துணையென்றும் நூற்பா கூறுகிறது. மேலும் வஞ்சி முதலாகிய பிற புறத்திணைகளைக் கூறுமிடத்து, அவை புறனாகும் அகத்திணைகளைக் குறிப்பிட்டு, அவ்வத்திணைகளின் ஒழுகலாற்றை வரையறுத்துப் பின்னர்த் துறை வகைகளைத் தொகுத்துக் கூறும் மரபு காணப்படுகிறது. இங்கு மட்டும் முதலில் வெட்சி குறிஞ்சிக்குப் புறன் என்றும், துறை பதினான்கு என்றும் கூறி அடுத்த நூற்பாவில் வெட்சியின் ஒழுகலாற்றைக் குறிப்பிடுவது நூல் செல்லும் நெறிக்குச் சற்று முரணாக இருப்பதைக் காண்கிறோம். (காண்க. சூ59, அடிக்.3).

மூல பாடத்தில் நேர்ந்துள்ள இச்சிக்கலை முதலில் உணர்ந்து விடுவிக்க முயன்றவர் பி.சா.சு. சாஸ்திரியார். புறத்திணை இயலின் முதற் சூத்திரத்தின் முதல் இரண்டு அடிகளுக்குப் பின்னர்ச் சிதைவு ஏற்பட்டது என்றும், அடுத்த சூத்திரத்தின் பகுதியை இதன் மூன்றாம், நான்காம் அடிகளாக வைத்து இரண்டையும் ஒரே சூத்திரமாக ஏடெழுதுவோரால் பின்னப்பட்டுள்ளது என்றும் அவர் கருதுகிறார். முதற் நூற்பா எவ்வாறு இருந்திருக்கலாம் என ஊகித்துச் சாஸ்திரியார் நூற்பாவின் மூன்றாம், நான்காம் அடிகளைக் கீழ்வருமாறு மீட்டுருவாக்கம் செய்கிறார்:

> * வெட்சி முதலாப் பாடாண் இறுவாய்
> முற்படக் கிளந்த எழுதிணை என்ப

தற்போதுள்ள இறுதி இரண்டடிகளை அடுத்த நூற்பாவாக ஆக்குகிறார். அகத்திணை இயல் முதற் சூத்திரத்தின் சாயலை இங்குக் காணலாம்.

தொல்காப்பிய உரைவள ஆசிரியராகிய சிவலிங்கனாரும் இச்சிக்கலை உணர்ந்து,

> அகத்திணையியலில். . கூறியது போலப் புறத்திணையியல் தொடக்கத்தில்,
>
> * **வெட்சி முதலாக் காஞ்சி யிறுவாய்ப்**
> **பிற்படக் கிளந்த எழுதிணை என்ப.**
>
> என்று கூறியிருத்தல் வேண்டும்.

என்று கூறுகிறார். அகத்திணையியல் நூற்பாவைப் பின்பற்றிச் சாஸ்திரியார் 'முற்படக்கிளந்த' என்று கூற, உரையாசிரியர் மரபினை ஒட்டிப், 'பிற்படக் கிளந்த' என்று சிவலிங்கனார் மீட்டுருவாக்கம் செய்கிறார். ஆயின் பாடாண் திணையை இறுதியாகக் கொள்ளாமல், "காஞ்சி யிறுவாய்" என்று கூறியது ஏன் என்று விளங்கவில்லை.

மேலே சுட்டிய இடங்களில் எல்லாம் மூலபாடம் சிதையவில்லை எனக் கருதும் பாலசுந்தரனார். 'வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்" எனத் தொடங்கும் புறத்திணைச் சூத்திரத்தை அடுத்து,

> * பொருதலைக் கருதிய புறத்திணை மருங்கின்
> மரபொடு வரூஉம் துறையு மாருளவே

என்றாங்கு ஒரு சூத்திரம் இருந்து மறைந்தது போலும் என ஐயுற வேண்டியுள்ளது" (ப. 142) என்று கூறுவதை நோக்கப் பாடச் சிதைவுகள் பொருளதிகார ஏட்டில் ஏற்பட்டுள்ளன என்னும் கருத்தை அவரும் ஏற்றுக் கொள்கிறார் என அறிகிறோம். இத்தகைய நூற்பா ஒன்று இருந்து மறைந்தது போலும் என்னும் பால சுந்தரனாரின் ஊகத்தைத் தி.வே. கோபாலையர் 'தக்கது' என்று கூறி ஏற்றுக் கொள்வதும் குறிப்பிடத்தக்கது. (ஆய்வு முன்னுரை, ப.XXX.)

## நூற்பாக்களின் முறைவைப்பு

பாடச் சிதைவுகளைப் போன்று நூற்பாக்களின் முறை வைப்பும் பொருள் காண்பதில் சிக்கல்களைத் தோற்றுவிக்கக் காண்கிறோம். சில நூற்பாக்கள் தம்மளவில் பொருள் உணர்த்தாமல்

தம் முறைவைப்புச் சூழலுக்கேற்பப் பொருள் உணர்த்தும் பாங்கில் அமைந்துள்ளன. காட்டாகக்,

> கலந்த பொழுதும் காட்சியும் அன்ன. (18)
>
> ஏவல் மரபின் ஏனோரும் உரியர்
> ஆகிய நிலைமை அவரும் அன்னர். (26)
>
> மன்னர் பாங்கின் பின்னோர் ஆகுப. (32)
> பொருள் வயின் பிரிதலும் அவர் வயின் உரித்தே (35)
>
> எஞ்சி யோர்க்கும் எஞ்சுதல் இலவே (45)
> முன்னைய நான்கும் முன்னதற்கு என்ப (55)

என வரும் அகத்திணையியல் நூற்பாக்களைச் சுட்டலாம். இந் நூற்பாக்களை இடம் மாற்றி அமைத்தால் அவை கருதும் பொருளும் மாறுபடும் என்பது வெளிப்படை. முதல் உரையாசிரியராகிய இளம்பூரணர் தம் உரையில் இம் முறைவைப்பு குறித்து எதுவும் கூறாமையின் பின்னர் வந்த உரையாசிரியர்களும் தற்போதுள்ள முறைவைப்பினை ஐயுறாமல் தத்தமக்குச் சரியெனத் தோன்றியவாறு உரைகண்டு தம்முள் முரண்படுவாராயினர்.

இத்தகைய மூலபாடச் சிக்கலைக் குறித்து அறிஞர்கள் முன்னரே சிந்தித்துள்ளனர். குறிப்பாக, மு. அருணாசலம் பிள்ளையவர்கள் தம்முடைய உரைவளப் பதிப்பில் கூறுவது சிந்திக்கத் தக்கது:

> ஆசிரியர் நூல் செய்து ஏறத்தாழ ஆயிரத்தைந்நூறு ஆண்டுகள் கழிந்த பின்னரே, இளம் பூரணர் முதலானோர் இந்நூலுக்கு உரையெழுத முற்பட்டனர். இவர்களுக்கு முன்னர் இந்நூலைக் கற்றோரும், கற்பித்தோரும், கையால் எழுதினோரும் ஆக எத்துணையோ ஆயிரவர் இருந்தனராதல் வேண்டும். அவ்விடைக் காலங்களில் தொல்காப்பிய நூற்பாக்களில் என்னென்ன மாற்றங்கள் நேர்ந்தன வென்று முழுதும் நம்மால் இப்பொழுது அறிய முடியவில்லை என்றாலும் உரையாசிரியர் காலத்திற்கு முன்பே சில பல நூற்பாக்கள் இடம் மாறியெழுதப்பட்டும் கோக்கப்பட்டுமிருந்தனவென்று எண்ண இடமிருக்கின்றது. அங்ஙனம் இடமாற்றம் பெற்ற நூற்பாக்களில், 'இருவகைப்பிரிவும்" என்ற இந்நூற்பா முதல், 'முதலெனப்

படுவது ஆயிருவகைத்தே' என்ற நூற்பா வரையுள்ள ஏழு நூற்பாக்களும் அடங்கும். களவியல், கற்பியல்களிலும் இவ்வாறு இடமாற்றம் பெற்ற நூற்பாக்கள் சில உள்ளன. . .

மாற்றி எழுதப்பட்டும் கோக்கப்பட்டும் ஏட்டில் இருந்தவாறே இளம்பூரணர் முதலானோர் உரையெழுதத் தொடங்கியமையால், ஆற்றொழுக்காக ஆசிரியர் அமைத்திருந்த நூற்பாக்களுக்கு இடர்ப்பட்டுப் பொருள் கூற வேண்டிய இன்றியமையாமை நேர்ந்தது. . . முன்னைய நூற்பாக்களோடு தொடர்பு படுத்திப் பொருள் கூறுதற்கேற்ப இவ்விடத்தில் இருக்க வேண்டிய இந்நூற்பா பதினேழாம் நூற்பாவாக ஏடுகளில் இருந்தமை கண்ட உரையாசிரியர்கள், இஃது இவ்விடத்தில் இருத்தற்கு யாதும் இயைபில்லையே என உணர்ந்து வைத்தும், ஏதோ ஒவ்வொரு வகையில் இயைபும் பொருளும் கூறுவாராயினர். . . அவையெல்லாம் ஆசிரியர் ஆற்றொழுக்காகத் தொடர்பு படுத்தி நூற்பாக்கள் அமைத்திருக்கும் முறைமைக்கு ஏற்றவையாகா. ஆகலின் இந்நூற்பா இவ்விடத்தில் இருத்தலே பொருத்தமாகும் *(அகத்திணையியல், பக். 138–140).*

பொருளதிகாரம் பல இடங்களில் பலவகையான சிதைவுகளுக்கு உட்பட நேர்ந்துள்ளது என்பதும் அதன் காரணமாகப் பல நூற்பாக்களுக்கு உரிய பொருள் காண்பதில் சிக்கல் ஏற்பட்டுள்ளது என்பதும் மேற்காட்டிய ஆய்வுரையால் விளக்கமடைகின்றன. இதில் வியப்பென்னவென்றால் ச.சோ. பாரதியார் சில இடங்களில் பாடம் விடுபட்டும் சிதைந்தும் இருக்கலாம் என்று கூறுவதைக் கருத்தளவிலேனும் வாங்கிக் கொள்ள மறுக்கும் அருணாசலம் பிள்ளையவர்கள், "இவ்விடத்தில் இருக்கவேண்டிய நூற்பா," என்றும், "இந்நூற்பா இவ்விடத்தில் இருத்தலே பொருத்தமாகும்" என்றும் வலியுறுத்திக் கூறுவதுதான். இங்கு இவர் குறிப்பிடும் முறையில்தான் தொல்காப்பியர் தம் நூற்பாக்களை அமைத்திருந்தாரா என்பதை நாம் உறுதிப்படுத்த இயலாது. வேறு வகையாகவும் அடைவுபடுத்த வேறொருவர் முயலலாம். எனவே அகத்திணையியலைப் பொறுத்த வரையில் தற்போதுள்ள முறைவைப்பு சில இடங்களில் ஆசிரியரின் கருத்தோட்டத்திற்கும், கருத்து வேறுபாடில்லாத பொருள் காண்பதற்கும் ஏற்ப அமையவில்லை என்பதே இங்குக் குறிப்பிட விரும்பும் செய்தியாகும்.

## இளம்பூரணர் உரையில் சிதைவுகள்

மூலத்திற்குக் கண்ட முதலுரை என்பதாலும், வேற்றுவரவால் மிகுதியாகப் பாதிக்கப்படாதது என்பதாலும் பொருள் காண்பதற்குரிய நேரிய உரை என்று கருதிப் பின்பற்றிய இளம்பூரணர் உரையும் பல இடங்களில் சிதைவுற்று இருக்கக் காண்கிறோம். பெயர்த்தெழுதுவார் விழ எழுதினார் போலும் என்று தொல்காப்பிய மூலத்தைப் பற்றிக் கருத்துரைத்த இளம்பூரணர், தம் உரையும் காலப்போக்கில் இவ்வாறு சிதைவுறலாம் என்று குறிப்பாகக் கூறுகிறாரோ என்னவோ தெரியவில்லை. இவரது உரையின் தற்போதைய நிலைக்குச் சில சான்றுகள்:

1. 98 ஆம் சூத்திரவுரையில் 'நன்னய முரைத்தல்' என்பதன்கீழுள்ள 'சேரல் மடவன்னம்' என்ற செய்யுளின் இறுதி அடியிலிருந்து 99ஆம் சூத்திரவுரையில் 'பெற்ற வழி மகிழ்ச்சியும்' என்பதன் கீழுள்ள 'நீங்கிற் றெறூஉம்' என்னும் செய்யுள் வரையும் காணும் பகுதி ஏட்டுப் பிரதியிற் காணப்பெறவில்லை; காலஞ்சென்ற த.மு. சொர்ணம் பிள்ளையவர்களுடைய கடிதப் பிரதியில் மாத்திரம் இருந்தது; நச்சினார்க்கினியரது உரையினின்றும் எடுத்துச் சேர்க்கப்பட்டுள்ளது எனக் கருதுவதற்கு இடமுண்டு.

   இதன் பின்னர் 'ஒடுங்கீரோதி' என்பதிலிருந்து 100 ஆம் சூத்திரவுரை முடியவுள்ள பகுதியிற் பெரும்பாலும் ஏட்டுப் பிரதியிற் பலவாறாகப். பிறழ்ந்து காணப்படுகிறது. இது பொருள் தொடர்பு நோக்கி ஒருவாறு செப்பஞ் செய்யப்பெற்றுள்ளது. (கழகப் பதிப்பு 1956, அடிக்குறிப்பு, ப.175)

2. இங்கிருந்து 1¾ பக்கம் ஏட்டில் எழுதப் பெறாது விடப்பட்டுள்ளது. 'புணர்ந்துடன் போகிய' என்ற சூத்திரமும், 'பெறற்கரும்' என்ற சூத்திரமும் அதன் முதலிரண்டு அடிகளின் உரையும் மறைந்து விட்டன போலும். இப்பகுதிக்கு நச்சினார்க்கினியத்தைத் தழுவி உரையெழுதி (இ.மு.சோ) சேர்த்திருக்கின்றனர். இங்கே தரப்படுவது அவ்வாறு சேர்க்கப்பெற்றதேயாம். 'குற்றமில்லாத் தலைமைகளைச் சுட்டிய தெய்வக் கடன் கொடுக்கவேண்டுமென்றலாம்' என்பது தொடங்கி ஏட்டுப் பிரதியிற் காணப்படுகிறது. (மு. நூல். ப. 282 அடிக்.).

3. முற்குறிப்பிட்ட கழகப்பதிப்பில் பக்கங்கள் 176, 177, 179 போன்று பல இடங்களில் இத்தகைய குறிப்புகள் காணப்படுகின்றன.

இத்தகைய அடிக்குறிப்புகளைப் பொறுப்போடு தந்துதவிய சைவ சித்தாந்தக் கழகம் பாராட்டுக்குரியது. இளம்பூரணர் கொண்ட தொல்காப்பியப் பாடமும் அவரது உரையும் பல இடங்களில் நச்சினார்க்கினியரின் பாடமும் உரையுமாக அமைந்துள்ள உண்மையை அறிய இந்தக் குறிப்புகள் பெரிதும் உதவுகின்றன.

4. ... இதற்குப் பொருள் கூறுதலில் இடர்ப்பாடு நேர்ந்தது. அதனால் இந்நூற்பாவிற்குப் (கலந்த பொழுதும் காட்சியும் அன்ன) பதவுரை கூறாது விடுத்தனர். வ.உ.சி. பதவுரையமைத்து அஃது இளம்பூரணர் எழுதிய குறிப்புகளைக் கொண்டு தாமே அமைத்தது என்பதனை யறிவித்தற்கு அதனை இருதலைப்பகரத்துள் அடக்கிக் காட்டினர். பின்னர் வந்த பதிப்புக்களில் அவ்விருதலைப் பகரம் எடுக்கப்பட்டமையின் அவ்வுரையும் இளம் பூரணர் எழுதியதே என்றெண்ணுமாறுள்ளது. இதுபோல் வனவற்றைப் பின்னர்ப் பலவிடங்களிலும் காணலாம். (அகத்திணையியல், ப.198)

மு. அருணாசலம் பிள்ளையவர்களின் இக்குறிப்பை நோக்க, இளம்பூரணரின் உரையாகத் தற்போது நமக்குக் கிடைத்திருப்பதில் பிற்காலத்தவரால் எழுதிச் சேர்க்கப் பெற்ற பகுதிகளும் அடங்கியுள்ளன என்னும் உண்மை புலப்படுகிறது. இனி, பொருள் கூறுவதில் இளம்பூரணர்க்கு இடர்ப்பாடு நேர்ந்தது. அதனால் இந்நூற்பாவிற்குப் பதவுரை கூறாது விடுத்தனர் என்னும் மேலைய கூற்று இளம்பூரணர் பதவுரை கூறாத நூற்பாக்களுக்கு எல்லாம் (காட்டாக, நூற்பா, 101, 102, 103, 106, 107, 108) பொருந்துமா என்பதும், அவர் உரையில் காணப்பெறும் பதவுரைகள் எல்லாம் அவருடையவை தாமா என்பதும், பிற்காலத்தே பதவுரை எழுதிச் சேர்த்தவர்கள் மேலே சுட்டிய நூற்பாக்களுக்கும் ஏன் பதவுரை எழுதிச் சேர்க்கவில்லை என்பதும் நம் சிந்தனைக்குரியனவாக அமைகின்றன.

இளம்பூரணரின் உரையைத் தழுவியே இந்த மொழிபெயர்ப்பில் கருத்துரை தரப்பட்டுள்ளது. எனினும் மேலே சுட்டிய சிதைவுகளின் காரணமாகச் சில இடங்களில், இளம்பூரணரின் உரை பொருத்தமாகக் காணப்படாததால் பிறருடைய உரைகளில்

பொருத்தமானவை என்று கருதப்பட்டவை தரப்பட்டுள்ளன. சான்றாக நூற்பாக்கள் 63,77,83 ஆகியவற்றுக்குத் தரப்பட்டுள்ள உரையையும் அவற்றிற்குரிய அடிக்குறிப்புகளையும் சுட்டலாம்.

தற்போதுள்ள உரைகளில் எதுவும் நூற்கருத்தோடும் தொல்காப்பியர் கால இலக்கியச் சூழலோடும் பொருந்தவில்லை என்று கருதிய நிலையில் இம்மொழிபெயர்ப்பாளரின் புதிய உரையும் அறிஞர்களின் சிந்தனைக்காக அடிக்குறிப்பில் தரப்பட்டுள்ளது. சான்றாக, நூற்பா 82 ஐயும் அதற்குரிய 39ஆம் அடிக்குறிப்பையும் குறிப்பிடலாம். தற்போதுள்ள முறைவைப்பின் அடிப்படையில் உரையாசிரியர்கள் உரை காண்கின்றனர் என்பதற்கும் முறை வைப்பு மாற்றப்பட்டால் உரையும் மாறுபடும் என்பதற்கும் இதுவுமோர் (நூ. 82) சான்றாக அமைகிறது.

## உரை காண முடியாத தனிச் சொற்களும், தொகைச் சொற்களும்

தனிச்சொற்கள் : பாடச் சிதைவுகள், பாட வேறுபாடுகள், உரை வேறுபாடுகள் தவிரச் சில தனிச் சொற்களும், தொகைச் சொற்களும் கூட மூல பாடப் பொருளை உணர்ந்து கொள்வதில் சிக்கலை விளைவிக்கின்றன. சான்றாகச் சிலவற்றைப் பார்க்கலாம்.

ஏனோர் (நூ. 24, 26, 30, 34, 81)
உயர்ந்தோர் (நூ. 28, 33, 36,); அமரர் (79)
மேலோர் (19); கந்தழி, கொடிநிலை, வள்ளி (85)
புறனே (நூ. 59, 62, 64, 66, 70, 73, 76, 78, 130, 245)

இத் தனிச் சொற்களுக்குப் பொருள் காண்பதில் உரையாசிரியர்களும் திறனாய்வாளர்களும் மிகுதியும் வேறுபடுகின்றனர். ஒன்றுக்கு மேற்பட்ட இடங்களில் இவை பயிலும்போது வெவ்வேறு பொருள்தருவதாக உரைகாரர்கள் கருதுகின்றனர் (இந் நூற்பாக்களுக் குரிய அடிக்குறிப்புகளைக் காண்க). புறவயப்பட்ட தரவுகள் (objective data) இல்லாத நிலையில் இச் சொற்களின் பொருள்களை உறுதிப்படுத்த இயலவில்லை.

### புறனே

புறன் என்னும் சொல் தொல்காப்பியத்துள் பொருளதிகாரத்தில் மட்டும் பயின்று வந்துள்ளது. புறத்திணை இயலில் எட்டு இடங்களிலும், களவியல், மெய்ப்பாட்டியல்களில் ஒவ்வோர் இடத்திலுமாக மொத்தம் பத்து இடங்களில் வழங்கும் இச் சொல் களவியலிலும் மெய்ப்பாட்டியலிலும் புறத்தே (வெளியே)

என்னும் பொருளில் ஆளப்பட்டுள்ளது. அதாவது புறம் என்னும் சொல்லுக்கு இணையாக, அகராதிப் பொருளில் ஆளப்பட்டுள்ளது. புறத்திணை இயலில் வழங்கும் எட்டு இடங்களிலும் கலைச்சொல்லாகப் பயன்படுத்தப் பெற்றுள்ளதாகத் தெரிகிறது.

ஒவ்வொரு புறத்திணையையும் குறிப்பிட்டு அதனோடு ஒவ்வோர் அகத்திணையையும் புறனே என்னும் சொல்லால் இணைத்துக் கூறப்பட்டுள்ளது. இங்குப் புறனே என்னும் சொல்லால் உணர்த்தப்படும் கருத்து அல்லது கருத்தீடு (concept) இன்னதெனத் தெளிவாக விளங்கவில்லை. உரையாசிரியர்கள் அனைவரும் புறன் என்னும் சொல்லுக்குப் புறம் என்றே பதவுரை தந்துள்ளனர். புறம் என்னும் சொல்லை இவர்கள் எந்தப் பொருளில் வழங்குகின்றனர் என்று அறிய இயலவில்லை. அதனை வெளிப்படைச் சொல்லாகக் கருதினார்கள் போலும். ஒவ்வொரு புறத்திணையும் எந்தெந்த வகையில் ஒவ்வோர் அகத்திணையோடும் இணையாகின்றது என்பதை எல்லா உரையாசிரியர்களும் பேரார்வத்துடன் விளக்கிச் செல்கின்றனர். அவ்விளக்கங்கள் எல்லாம் அவை முதல், கரு, உரிப்பொருள்களால் எவ்வாறு ஒத்த தன்மையினவாய் அமைகின்றன என்று மட்டுமே கூறுகின்றன. முதல், கரு, உரி என்னும் பாடல் அமைப்பு முறை அகத்திணைக்கு மட்டுமே ஓதப்பட்டது என்பது இங்கே நினைவு கூரத்தக்கது.

இந்தச் சமன்பாடு அல்லது வாய்பாடு, அதாவது, 'இதற்கு இது புறன்' என்னும் இலக்கண வரையறை, மறுதலித்து மொழியுங்கால் (அத்தகையதொரு இலக்கண மரபு இல்லை)- அதாவது,

* குறிஞ்சி தானே வெட்சியது அகனே.

* பாலை தானே வாகையது அகனே.

எனக் கூறினால், இதே கருத்தீட்டை அல்லது கோட்பாட்டை உட்கொண்டதாக அமையுமா என்னும் வினா (ஐயமோ, அறியாமையோ) எழுகிறது. இணையானவை என்று உரைகாரர்களால் விளக்கப்படுவதால் இத்தகைய வினா எழுகிறது. தொல்காப்பியமும் வாளா புறனே என்று கூறுகிறதேயன்றி, புறனாதல் என்றால் என்ன என்றோ, எவ்வாறு என்றோ கூறவில்லை. எனவே இக்கருத்தீட்டின் கோட்பாட்டு நுட்பத்தை உணர இயலவில்லை.

மேலும், "அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர்" என்று கூறி அகத்திணை மரபைத் தமது புறத்திணைக்

கோட்பாட்டிற்கு அடித்தளமாக வகுத்துக் கொள்ளும் தொல்காப்பியர், "கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்" என நிறுத்திய வகையில் புறத்திணைகளைக் கூறாமல், வெட்சி முதலாகிய புறத்திணைகளை அடியாக நிறுத்திக் கூறுவானேன் என்னும் வினாவும் எழுகிறது. அதிகாரப் படும் பொருள் புறப்பொருளாதலின், புறப்பொருள் நிகழ்ச்சிகளின் தொடர்ச்சியைக் கருத்தில் கொண்டு, வெட்சி, வஞ்சி என நிரல்படுத்திக் கூறுவதுதான் பொருத்தமானது என்பதில் ஐயமில்லை. எனினும், பொருளதிகாரம் காட்டும் திணை அடைவு வெட்சி முதல் வாகை ஈறான ஐந்தனது பொருண்மைக்கு மட்டுமே பொருந்துவதாகத் தோன்றுகிறது. காஞ்சி, பாடாண் என்பன முன் பின்னாக மாறியிருப்பினும் முரண்பாடு எதுவும் விளையும் என்று தோன்றவில்லை. எனவே பலர் செலச் செல்லாப் பெருமையுடைய நிலையாமையை விளக்கும் காஞ்சித் திணையை ஏழாவதாக வைத்திருப்பின் பெரிதும் பொருத்தமாக இருக்கும் என்று யதார்த்த நிலைப் பார்வையில் கருதுவதும் கூடும். ஆகப் புறத்திணை அடைவும் அவற்றிற்குரியனவாகக் கூறப்படும் அகத்திணை அடைவும் இதற்கு முன்னர்க் கூறியுள்ள (நூ. 1,5,11) முறைவைப்புகளோடு ஐயத்திற்கு இடமின்றிப் பொருந்துவனவாகத் தோன்றவில்லை.

புறத்திணைகள் பன்னிரண்டு என்னும் கோட்பாடு ஒன்று இருந்து, அதன் பொருந்தாமை கண்டு, அதனை மறுத்துப் புறத்திணைகள் ஏழே என்னும் கோட்பாட்டை நிறுவ முனையுமிடத்து, அகத்திணைகள் ஏழு என்னும் கோட்பாட்டை அடிச்சட்டகமாகக் கொண்டு தொழிற்படும் முயற்சி மேற்கொள்ளப்பட்டிருப்பதை இங்கே காணலாம்.

இந்த விவாதம் குறித்து அண்மையில் எழுந்துள்ள ஆய்வுக் கண்ணோட்டம் ஒன்றினைச் சற்று விரிவாகச் சுட்டுவது இங்கே கடமையாகிறது:

> பாடலை அலகாகக் கொண்டு பார்க்கும்பொழுது, அகத்திணையில் முதல், கரு, உரி தொழிற் படுவது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. . . புறத்திணைப் பாடல்களுக்கு இத்தகைய ஒரு கொள்கை சுட்டப்பெறவில்லை. எனினும் பல்வேறு போர்நிலைகளும் வீரப்புகழ்ச்சி நிலைகளும் தரப்படுகின்றன.
>
> புறத்திணை பற்றிய இயலிற் காணப்படும் மிக முக்கியமான அம்சம் தொல்காப்பியம் "புறன்" என்பதை இனங்கண்டு கொள்ளும் முறைமையாகும். வெட்சி தானே குறிஞ்சியது

புறனே (1). . . பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே (30). இவ்விடங்களிற் "புறன்" என்பது இயைபு காரணமாகக் கூறப்படும் "இணை நிலைச் சேர்ப்பு" (pairing) ஆகும். அதாவது ஒரு அகத்துக்கு ஒரு புறம் உண்டு என்பது.

நில அடிப்படையைக் கொண்ட அக-புற இணைப்புக்களைப் பார்க்கும்பொழுது, ஒவ்வொரு நிலத்திலும் காணப்படக் கூடிய ஆண்-பெண் உறவுக்கான சமூகச் சூழலுக்கும் அதே நிலத்துக் குரியதான போர் முறைகளுக்கும் ஓர் இயைபு இருப்பது இயற்கையானதே. குறிஞ்சியில் நடைமுறையிலுள்ள சமூக அதிகார ஒழுங்கு முறைகளுக்கும், வெட்சிக்குரியதான போர் முறைமைக்கும் ஓர் இயைபு காணப்படுவது உண்மையே. இது முல்லை, மருத நிலங்களுக்கும் பொருந்தும். . .

பாலைக்கும் நெய்தலுக்கும் இத்தகைய ஓர் இயைபினைக் காணமுடியாதுள்ளது. நெய்தற் பிரதேசத்திலே தோன்றக்கூடிய அதிகார முறைமைக்கும் இறுதிவரை போராகும் தும்பைக்கும் தொடர்பு காண்பது சிரமம். இத்தகைய "விடாப்பிடிப்" போருக்கான வாய்ப்பு விளைச்சற் சாத்தியப்பாடுகள் அற்ற வெற்று நிலம். பாலையில் உண்டு.

வாகைபற்றித் தொல்காப்பியம் கூறுவனவற்றை நோக்கும்போது அங்கு முற்றிலும் கருத்து முதன்மையானதும் (idealistic) வாகையின் பொருளியல் யதார்த்தத்துக்கும் அப்பாலானதுமான ஒரு கொள்கையாக்கமே (theorisation) காணப்படுகிறது. . .

இதற்கும் மேலாகக், கைக்கிளையையும் பாடாணையும், பெருந்திணையையும் காஞ்சியையும் இணைத்து நோக்குவது ஒரு முரண்நிலைப்பாட்டைக் காட்டுகின்றது. கைக்கிளை பற்றித் தொல்காப்பியம் தரும் விவரணமானது அது ஒரு திரிபு நிலப்பட்ட பாலியல் நிலை என்பதைக் காட்டும். . . இதனை ஆளுமைப் பொலிவைப் பாடும் பாடாணுக்குப் புறனாகக் கொள்ளுதல் வாய்பாடு மயப்படுத்திப் பார்க்கும் ஒரு நோக்காகவே காணப்படுகின்றது. இதே போன்றதே பெருந்திணை- காஞ்சி இணைப்பும். . .இதனை "நில்லா உலகம் புல்லிய நெறித்தே" எனக் காஞ்சியோடு இணைத்தல் பொருத்தமற்றதாகவே காணப்படுகிறது. . .

வாகையை விவரிக்கும் பொழுது கூறும் கருத்துக்களை நோக்கும் பொழுதும் (நூற்பா.புறத்-16) தொல்காப்பியத்திற் காணப்படும் அக-புற இணைப்புக் கொள்கையாக்கம் பொருந்தாது என்பது தெரிகிறது.

வடமொழிச் சமூக இலக்கியப் பாரம்பரியங்கள் சிலவற்றையேனும் முற்றிலும் தமிழ்நாட்டுக்குரியனவான நடைமுறைகளிலே காணும் ஒரு நோக்கினையே காஞ்சி-பெருந்திணை இணைப்பு காட்டுகின்றது.

*(கார்த்திகேசு சிவத்தம்பி, "தமிழ்க் கவிதை வரலாற்றில் தொல்காப்பியக் கவிதையியல் - சில வினாக்களும் சிக்கல்களும்",* **தொல்காப்பிய இலக்கியக் கோட்பாடுகள்,** *(ப.ஆ) செ. லாரன்ஸ் மற்றும் கு.பகவதி, சென்னை: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1998 பக்70-73).*

## தொகைச் சொற்கள்

நால்வர் (31) நாலிரு வழக்கு (74) நாலிரண்டு (78), நான்கு (55) அறுவகை (79). எட்டுவகை (75) என்னும் தொகைச் சொற்களுக்குப் பொருள் காண்பதிலும் உரைகாரர்களிடையே கருத்து வேறுபாடுகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. இந்த நூற்பாக்களுக்குரிய அடிக்குறிப்புகளில் இவ் வேறுபாடுகள் விரிவாக ஆராயப் பெறுகின்றன. கால இடைவெளியாலும், பண்பாட்டுக் கலப்பினால் ஏற்பட்ட மாற்றங்களாலும், தொல்காப்பியர் காலச் சமுதாய மரபுகள், வழக்குகள், ஆகியவற்றை இன்று நாம் அறிய உதவத் தக்க குறிப்புகளோ, வரலாற்றுத் தன்மைபெற்ற நூல்களோ இல்லாமையாலும், இது போன்ற தொகைச் சொற்களுக்குப் பொருள் காண்பதில் ஒருமித்த கருத்து தோன்ற வழியில்லாமற் போயிற்று. மிகவும் தொன்மை வாய்ந்த நூல்களிற் பயிலும் சொற்கள் சிலவற்றிற்குப் பொருள் காண்பதில் கருத்துவேறுபாடுகள் தோன்றுவதைப் பழமைசான்ற கிரேக்கம் முதலான மொழிகளிலும் காண்கிறோம். அரிஸ்டாடிலின் கவிதையியலில் வழங்கும் 'கெதார்சிஸ்', அமார்ஷியா', ஆக்ஷன்' என்னும் சொற்களுக்குப் பொருள் காண்பதில் சென்ற நூற்றைம்பது ஆண்டுகளாக இருந்துவரும் கருத்து வேறுபாடுகள் இன்னும் தீர்ந்த பாடில்லை என்னும் செய்தியை இங்கே நினைந்து பார்ப்பது நல்லது.

இவ்வாறு கருத்து வேறுபாடுகள் மலிந்த இடங்களிலெல்லாம் எந்த ஓர் உரையாசிரியரையும் தொடர்ந்து பின்பற்றாமல், நூற்பாவின்

சூழலுக்கு ஏற்றது என்று இந்த மொழிபெயர்ப்பாளன் இன்றைய அறிவுநிலையில் கருதும் பொருள் கருத்துரையாகவும், மொழி பெயர்ப்பாகவும் தரப்பட்டுள்ளது. தக்க புறவயத் தரவுகள் எதிர்காலத்தே கிடைக்கும் வாய்ப்பு ஏற்படின், அறிதோறும் அறியாமை கண்டற்றால் என்னும் வாய்மொழிக்கிணங்க பிறிதொரு பொருள் கொள்ளவும் கூடும்.

## சில சங்கடமான சொல்லாட்சிகள்

மூலபாடப் பொருளை உணர்ந்து கொள்வதில் சிக்கலை விளைவிக்காவிடினும், பொருளதிகாரத்தில் ஆளப்பட்டுள்ள சில சொற்கள் வழக்காற்றுச் சிக்கலை உண்டு பண்ணுவனவாய் அமைந்துள்ளன. அவற்றுள் முக்கியமாகப் பெரியவர் (75), தாபதப்பக்கம் (75), தாபத நிலை (77), மூதானந்தம் (77), தபுதார நிலை (77) என்பனவற்றைக் குறிப்பிடலாம்.

## பெரியவர்

'பெரியவர்' என்னும் சொல் தொல்காப்பியத்தில் ஓர் இடத்தில் (75) மட்டும் வந்துள்ளது. இங்கே இச் சொல் உயர்திணைப் பன்மையாகக் (பலர்பால்) கையாளப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்துள் நற்றிணையில் மட்டும் ஒரே இடத்தில் (266) வரும் இச்சொல் உயர்வுப் பன்மையாக ஆளப்பட்டுள்ளது. அதன்பின்னர் நாலடியாரில்தான் 'பெரியவர்' என்னும் சொல் 'பலர் பாலாக' வழங்குகிறது. குறிப்பு வினையாலணையும் பெயர்கள் வகர மெய் பெற்று வழங்குதல் தொல்காப்பியர்கால மொழிவழக்கிற்கு உரியதுதானா என்பது நுட்பமாக ஆராயத் தக்கது.

## தாபதப் பக்கம், தாபத நிலை

இத் துறைகள் கருதும் புறத்துறைப் பொருண்மைக்கு உரியனவாகப் பல பாடல்கள் புறநானூற்றில் (248-252) கோக்கப்பட்டுள்ளன. நிகழ்ச்சி தமிழ்ப் பண்பாட்டிற்கு உரியதாக இருக்க, இதனைக் குறிக்கும் கலைச்சொல் மட்டும் பிறமொழி கலந்த தொகை நிலையாக உருவானது எவ்வாறு, எப்போது என்னும் வினாக்கள் எழுகின்றன. சங்க இலக்கியத்துள் எங்கும் தாபதன், தாபதர் என்னும் சொற்கள் வழங்கியதாகத் தெரியவில்லை. முதன் முதலாகச் சிலப்பதிகாரத்தில்தான் (26:9, 27:179) இவை வழங்குகின்றன. கீழ்க்கணக்கு நூல்களிலும் இச் சொற்கள் காணப்படவில்லை.

## மூதானந்தம்

'மூதானந்தம்' என்னும் சொல்வழக்கு தொல்காப்பியத்துள் ஓர் இடத்தில் மட்டும் காணப்படுகிறது. தொகையாக வழங்கும் இக்கலைச்சொல் தமிழ் இலக்கிய வரலாற்றில் பிற்காலச் சோழர் காலத்திற்கு முன்பு வழங்கியதாகத் தெரியவில்லை. இச் சொல் கருதும் பொருளுக்குரிய நிகழ்ச்சி (கணவன் இறந்ததும் மனைவி உடனுயிர்துறத்தல்) சிலப்பதிகாரத்தில் இடம்பெற்றிருந்தும் இக்கலைச்சொல்லின் வழக்கு இலக்கியத்திலோ, இலக்கணத்திலோ இடம்பெறாமையும் சிந்திக்கத் தக்கது. இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் இத்துறைக்குப் பு.வெ. மாலைச் செய்யுளை எடுத்துக்காட்டாகத் தருகின்றனர். இக்கால உரைகாரருள் சோம. இளவரசு மட்டும் சிலப்பதிகாரப் பகுதியை (காதை 20) எடுத்துக்காட்டாகத் தருகிறார். பாலசுந்தரனார் சிலப்பதிகாரச் செய்தியைச் சுட்டுவதோடு அமைந்து, பு.வெ. மாலைச் செய்யுளையே காட்டாகத் தருகிறார்.

இத்தொகையின் பிற்கூறாகிய ஆனந்தம் என்னும் சொல் திருவாசகத்தில் முதன் முதலாக இடம்பெற்றுள்ளது. ஆனந்தம் என்பதை முற்கூறாக்கிப் பையுள் என்னும் தமிழ்ச் சொல்லோடு சேர்த்துத் தொகையாக ஆனந்தப்பையுள் என்னும் துறையைப் பு.வெ. மாலை காட்டுகிறது. இத்துறை மூதானந்தம் என்னும் துறையினின்று வேறுபட்டது.

தமிழும் வடமொழியுமாகத் தொக்குவரும் சொல்மரபு தமிழ் மொழியில் எக்காலத்தில் தோன்றியது என்று கணிப்பதற்குரிய தரவுகள் இப்போது நம்மிடையே இல்லை. செய்யுட்கு உரியனவாக வடசொற்கள் தமிழில் இடம் பெறலாம் என்று இலக்கணம் வகுத்த தொல்காப்பியர் இத்தகைய கலப்புத் தொகை நிலைகள் (hybrid compounds) பற்றி எதுவும் கூறவில்லை. தபுதாரம் என்பதும் இவ்வாறு அமைந்த மற்றொரு தொகைநிலை. தாரம் தபுநிலை என்றிருக்கற்பாலது தபுதார நிலை என முன்பின்னாகத் தொக்குநின்றது என்று விளக்கம் கூறும் பாலசுந்தரனாரும் சோம. இளவரசும் இருமொழித் தொகைநிலையின் அமைப்பு (structure) குறித்து எதுவும் குறிப்பிடவில்லை. மேலும் முன் பின்னாகத் தொக்கு வருவது (முன்றில் போல) தமிழ் மொழிக்குக் கூறப்பட்ட இலக்கணம் என்பதும் குறிப்பிடத்தக்கது.

## தபுதார நிலை

தொல்காப்பியத்துள் ஒரேயொரு இடத்தில் மட்டும் வழங்கும் மற்றொரு சொல் தபுதார நிலை (77) என்பதாகும். மூதானந்தம்

என்னும் சொல்லைப் போன்றே இதுவும் தமிழ் - வடமொழித் தொகைநிலையாக ஆளப்பட்டுள்ளது. இதில் வரும் தாரம் என்னும் சொல் 'மனைவி' என்னும் பொருளில் இங்கு வழங்குகிறது. இச் சொல் சங்க இலக்கியத்துள் மிகப் பரவலாக வழங்குகிறது.

*பெரும்.361; மதுரைக்.290,697; மலை.170,513*
*நற்.135; பதிற்.48,88; பரி.12; அகம். 171, 282;*
*புறம் - 343.*

மேற்குறித்த இடங்களிலெல்லாம் இச் சொல் பொருள், பண்டம், அரிய பொருள் என்னும் பொருள்களில் பயன்படுத்தப் பெற்றுள்ளது. சிலப்பதிகாரத்தில் பல இடங்களில் (3 : 72, 76; 6:153; 10:106; 10 கட்டுரை - 15; 17: 48, 53) பயின்றுவரும் இச் சொல் இசை நரம்பு, யாழ் நரம்பு, யாழிசை வகை என்னும் பொருள்களில் வழங்கக் காண்கிறோம். ஆகச் சங்க இலக்கியம், சிலப்பதிகாரம் என்னும் இருதிறத்து இலக்கியங்களிலும் பரந்து வழங்கும் இச்சொல் 'மனைவி' என்ற பொருளில் எங்குமே ஆளப்படவில்லை.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் சிலவற்றில்தான் தாரம் என்னும் சொல் முதன் முதலாக 'மனைவி' என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளது (நாலடி. 81,82; ஆ. கோவை. 95; சிறு பஞ்ச. 81; முதுமொழிக். 41,42).

நாலடியாருக்கு மிக விரிவாகவும் ஆழமாகவும் விரிவுரை எழுதியுள்ள செம்பூர் வித்துவான் ஆறுமுகம் சேர்வையவர்கள், "தாரம் - தாரா: என்னும் வடசொற்றிரிபு" என்று குறிப்பிடுகிறார். (நாலடி. 81). சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி (Tamil lexicon), தாரம் dāra என்னும் சொல்லின் தமிழ்வடிவம் என்று குறித்து, மனைவி என்னும் பொருளில் தொல். பொருளதிகாரத்தில் வரும் 'தபுதார நிலை'யில் வழங்குகிறது என்று பதிவு செய்துள்ளது.

dāra என்னும் ஆண்பாற் பன்மைச்சொல், 'மனைவி - மனைவியர்' என்னும் பொருளுடையது என்றும், கால அடைவில் முதன் முதலாக முறையே கிருஹ்ய சூத்திரம், மனுநீதி நூல், மகா பாரதம் ஆகிய நுல்களில் இச்சொல் வழங்கியுள்ளது என்றும் மோனியர் வில்லியம்ஸ் தமது வடமொழி - ஆங்கில அகராதியில் பதிவு செய்துள்ளார்.*

---

* M. Monier - Williams, **A Sanskrit - English Dictionary** (Oxford University Press 1899; rpt. Delhi: Motilal Banarasidass, 1995).

எனவ தற்போதைய தரவு நிலையில், தாரம் என்னும் சொல் 'மனைவி' என்னும் பொருளில் பொருளதிகாரத்தில் வழங்கப்பட்டுள்ளது என்பதும் இப்பொருளில் இச் சொல் சங்க நூல்களிலும் சிலப்பதிகாரத்திலும் வழங்கப்படவில்லை என்பதும் தெளிவாகின்றன.

தபுதார நிலை என்னும் துறைப் பொருண்மைக்குரிய பாடல்கள் புறநானூற்றில் காணப்படுகின்றன; எனினும் புறநானூற்றுக்குத் திணை, துறை வகுத்தோர் தபுதார நிலை என்னும் துறையை எந்தப் பாடலுக்கும் வகுக்கவில்லை. இதனோடு தொடர்புடைய தாபத நிலை என்னும் துறையைப் புறப்பாடல்களுக்குக் காட்டியுள்ளனர். இளம்பூரணர், நச்சினார்க்கினியர் ஆகிய இடைக்கால உரையாசிரியர்களும், இக்கால உரைகாரராகிய பாலசுந்தரனாரும் சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதையின் "யாங்குப்பெரிதாயினும் நோயளவு எனைத்தே" எனத் தொடங்கும் புறப்பாடலைத் (245) தபுதார நிலை என்னும் துறைக்கு எடுத்துக்காட்டாகத் தந்துள்ளனர்.

இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் பயன்படுத்திய புறநானூற்று ஏடுகளில் திணை, துறைகள் வகுக்கப்படவில்லையா, அல்லது வகுக்கப்பட்டிருப்பினும் அக்குறிப்புகளை இவ் இரு உரையாசிரியர்களும் ஏற்றுக்கொள்ளவில்லையா என்னும் சிந்தனை நம் உள்ளத்தில் எழுவதைத் தடுக்க இயலவில்லை. புறப்பொருள் வெண்பா மாலையில் தபுதார நிலை என்று ஒரு துறையே குறிப்பிடப்பெறவில்லை என்பதும், ஆனால் தாபத நிலை ஒரு துறையாகக் கொள்ளப்பட்டுள்ளது என்பதும் இதன் தொடர்பில் சிந்திக்கத் தக்கனவாக அமைகின்றன. (காண்க : நூற்பா 82, அடிக் குறிப்பு 39).

மேலே இனங்காட்டிய பெரியவர், ஆனந்தம், தாரம், தாபதம் என்னும் தனிச் சொற்களுக்கும், மூதானந்தம், தபுதார நிலை, தாபத நிலை, தாபதப் பக்கம் என்னும் புறப்பொருள் சார்ந்த கலைச் சொற்களுக்கும் பாடவேறுபாடுகளே இல்லை என்பதும், தொல்காப்பியத்திற்கு உடன் காலத்தனவாகச் சிலராலும், பிந்தியனவாகப் பலராலும் கருதப்படும் சங்க இலக்கியங்களில் இத் தனிச் சொற்களின் ஆட்சி காணப்பெறவில்லை என்பதும் இணைத்துச் சிந்திக்கத் தக்கன. மேலும் மூதானந்தம், தபுதார நிலை என்னும் துறைகளைப் புறப்பாடல்களுக்குத் திணை, துறை வகுத்தோர் காட்டவில்லை என்பதும் புறப்பொருள் வெண்பா மாலையில் இந்த

இரு துறைகளும் குறிப்பிடப்பெறவில்லை என்பதும், ஆனால் பு.வெ. மாலை குறிப்பிடும் ஆனந்தப் பையுள் போன்ற பிற்காலத்துறைகள் பல புறநானூற்றுப் பாடல்களுக்கு வகுக்கப்பட்டுள்ளன என்பதும் இங்கே தொகுத்துச் சிந்திக்கத் தக்கன. தொல்காப்பிய மூல பாடம் பற்றிய சில ஐயங்களைத் தூண்டுவனவாகையால் இவை இங்கே சற்று விரிவாக ஆராயப்பெற்றன.

மூல பாடச் சிதைவுகள், பாடவேறுபாடுகள், நூற்பாக்களின் வைப்பு முறை, பலவாறாகப் பொருள் கொள்ள இடமளிக்கும் தனிச் சொற்கள், தொகைச் சொற்கள், உரை வேறுபாடுகள் என்னும் பல்வேறு நிலைகளில் தருமொழிப் பாடப்பொருளை உணர்ந்து கொள்வதில் எதிர்ப்பட்ட சிக்கல்கள் குறித்து இதுவரை கூறப்பட்டது. இளம்பூரணர் உரையைத் தழுவியே பெரும்பாலும் கருத்துரைகள் அமைக்கப்பட்டிருப்பினும், சில இடங்களில் பிற உரையாசிரியர்களின் உரைகளும் ஏற்றுத் தரப்பட்டுள்ளன என்பதும் விளக்கப்பட்டது.

## மொழிபெயர்ப்புச் சிக்கல்கள்

மூலபாடக் கருத்தை உணர்ந்து கொண்ட பின்னர் அதனை வேறு மொழியில் கூறுமிடத்துத் தோன்றும் சிக்கலை மொழி பெயர்ப்புச் சிக்கல் என்று கூறுகிறோம். தொல்காப்பியப் பொருளதிகார மொழிபெயர்ப்பைப் பொறுத்தவரையில் மூலபாடப் பொருளை உணர்ந்து கொள்வதைவிடக் குறைவான சிக்கல்களே அதனை மொழிபெயர்ப்பதில் தோன்றுகின்றன எனலாம். இலக்கியப் புலத்தோடு தொடர்புடையதாயினும், பொருளதிகாரம் ஓர் இலக்கண நூலாதலின் கற்பனை, அணிகள், இறைச்சி போன்ற வெளிப்பாட்டு உத்திகள் என்னும் முருகியல் சார்ந்த பகுதிகள் இதில் இடம்பெறவில்லை. ஒரு பழமையான பண்பாட்டின் இலக்கிய மரபுகளை விளக்கிச் செல்லும் பாங்கில், இலக்கணம், இலக்கியம், சமுதாய வழக்காறுகள், பண்பாட்டு மரபு ஆகியன பற்றிய கலைச் சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. நூல் கூறக் கருதுவது இலக்கியம் பற்றிய கோட்பாடுகள். எனவே புறவயப்பட்ட கருத்துகளும், பண்பாட்டுச் சிறப்புடைய சொற்களும், கலைச்சொற்களும்தான் இங்கு மொழிபெயர்க்கப்பட வேண்டியவை.

மொழிபெயர்ப்புப் பொதுமை (translation equivalence) கொண்ட சொற்களை அதாவது, கருத்தும் சொல்லும் இருமொழியிலும் காணப்படும் தன்மையுடைய சொற்களை மொழிபெயர்ப்பதில் சிக்கல்கள் தோன்றுவதில்லை. மொழி

பெயர்ப்பாளனுக்கு இருமொழிப் புலமை நிரம்பியிருந்தால் போதும். ஆனால் பண்பாட்டுச் சிறப்புடைய கருத்துகள் மற்றும் கலைச் சொற்களை மொழிபெயர்க்குமிடத்துச் சிக்கல்கள் தோன்றும். இது போன்ற சிக்கல்கள் இந்த மொழி பெயர்ப்பின் கண்ணும் தோன்றின.

அகம், புறம் என்னும் இலக்கியப் பாகுபாட்டுச் சொற்கள், கைக்கிளை முதலிய திணைப் பெயர்கள், முதுகாஞ்சி, மூதானந்தம் போன்ற துறைப் பெயர்கள், முதல், கரு, உரி என்னும் திணைப் புலப்பாட்டுச் சொற்கள், கலிப்பா, பரிபாடல் போன்ற யாப்பு வடிவங்களைக் குறிக்கும் சொற்கள் போன்றவற்றை நேரடியாக ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க இயலவில்லை. பொதுத்தன்மை இன்மையால் இத்தகைய பண்பாட்டுச் சொற்கள் (culture specific terms) ஒலிபெயர்க்கப்பட்டுள்ளன. இவ்வாறு ஒலிபெயர்த்துக் கூறப்பட்ட சொற்கள் கருதும் பொருள் ஆங்காங்கே அடிக்குறிப்பாக ஆங்கிலத்தில் தரப்பட்டுள்ளது. காட்டாகக், 'கைக்கிளை' என்னும் கவிதையியற் கருத்தீடு ஆங்கிலக் கவிதையியல் மரபில் காணப்படாமையின், அதனை மொழி பெயர்க்காமல் 'Kaikkilai' என்றே மொழிபெயர்ப்புப் பகுதியில் தந்து, அடிக்குறிப்பில் அது கருதும் இலக்கணப் பொருள் ஆங்கிலத்தில் விளக்கப்பட்டுள்ளது. பொருளதிகாரம் முழுவதும் மொழிபெயர்க்கப்பட்ட பின்னர் பின்னிணைப்பாக இடம்பெறும் கலைச்சொல் அகராதியில் இத்தகைய சொற்கள் எல்லாம் பொருள் விளக்கத்தோடு தமிழிலும், ஆங்கிலத்திலும் தரப்படும். மொழிபெயர்ப்பின் படிப்பினிமை (readability) சிதையலாகாது என்னும் காரணத்தால் இவ்விளக்கங்கள் நூலினுள்ளே தரப்படவில்லை.

புறத்திணை இயலில் ஆளப்பட்டுள்ள புறனே என்னும் சொல் ஒரு கோட்பாட்டைக் குறிக்கும் கலைச் சொல்லாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இது கருதும் பொருள் இன்னதென்று தெளிவாக விளங்கவில்லை என்பது மேலே விரிவாக ஆராயப்பட்டுள்ளது. எனவே இதனை மொழிபெயர்க்க இயலாத நிலை ஏற்பட்டது. முன்னைய மொழிபெயர்ப்பாளர்கள் இதனை ஒலி பெயர்த்துக் கூறியுள்ளனர். ஆனால் அடிக்குறிப்பாகவோ பிற வகையிலோ விளக்கம் தரவில்லை. இலக்குவனார் தமது விளக்கப்பகுதியில் 'counterpart' என்னும் சொல்லை இதற்கீடானதாகக் கருதித் தந்துள்ளார் (ப. 450). உரையாசிரியர்களின் விளக்கத்தை அடியொற்றி இவ்வாறு மொழிபெயர்க்கப்பட்டது போலும். இரு கூறுகளும் ஒரே தன்மையினவாய், ஒரே தொழிற்பாடு உடையனவாய் இருக்கும் நிலையில் அவை ஒன்றுக்கொன்று 'counterpart' என்று

கூறுவது ஆங்கில மரபு. அகத்திணைகளும் புறத்திணைகளும் இத் தன்மையினவல்ல என்பது மேலே விளக்கப்பட்டது.

அகம், புறம் என்பன தமிழ் இலக்கிய மரபு கண்ட மானுட வாழ்க்கையின் இன்றியமையாத கூறுகள்; ஒன்றையொன்று அவாவி நிற்பன; எனினும் தொழிற்பாட்டால் வேறுபட்ட தன்மையின. எனவே 'counterpart' என்பதைவிட 'இணையானவை' என்னும் பொருளுடைய parallel என்னும் மொழிபெயர்ப்பு பொருத்தமாகலாம் என்று கருதி, 'அகம் அல்லாத இணை' என்னும் கருத்தை உட்கொண்ட "non - akam parallel" என்னும் தொடர் புறனே என்னும் சொல்லுக்குரிய மொழிபெயர்ப்பாகத் தரப்பட்டுள்ளது. இதைவிடப் பொருத்தமான மொழிபெயர்ப்பு எதிர்காலத்தே தோன்றுமாயின, இதனை மாற்றிக் கொள்ளலாம் என்னும் எண்ணத்தில் தற்போது இவ்வாறு மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

இதுவரை இம் முன்னுரையில் கூறப்பட்டதிலிருந்து, இம் மொழிபெயர்ப்பில் எதிர்கொண்ட சிக்கல்களில் பெரும்பாலன மூல பாடப்பொருளை உணர்ந்து கொள்ளுதல் தொடர்பானவை என்பதும், மொழிபெயர்ப்புத் தொடர்பானவை சிலவே என்பதும் பெறப்பட்டன. இம் மொழிபெயர்ப்புப் பணி காலங் கண்ணிய கடமையாதலின் அவ்வெல்லைக்குள் கிடைத்த தரவுகள், ஆய்வுகள் மற்றும் அறிஞர் பலரது கருத்துகள் ஆகியவற்றின் துணை கொண்டு இயன்றாங்கு செய்யப்பெற்றுள்ளது. இதிற் காணும் கருத்துகளும், மொழிபெயர்ப்பும் முடிந்த முடிபுகள் அல்ல என்பது வெளிப்படை. இதனைப் படிக்க நேரும் அறிஞர் பெருமக்களின் திறனாய்வுக் கருத்துகளும், ஆலோசனைகளும் நன்றியுடன் வர வேற்கப்படுகின்றன.

# நன்றியுரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் வருகைதரு பேராசிரியர் என்னும் பணிநிலைகளைத் தோற்றுவித்துத் தமிழாராய்ச்சிக்கு ஊக்கமும் ஆக்கமும் அளித்து வரும் நிறுவனத் தலைவரும், தமிழ் ஆட்சிமொழி மற்றும் பண்பாட்டுத்துறை அமைச்சருமாகிய மாண்புமிகு முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்கட்கும், அத்தகைய பேராசிரியருள் ஒருவராக என்னைத் தேர்வு செய்த உயர்நிலைக் குழு விற்கும் என் அன்பார்ந்த நன்றி உரியது.

வருகைதரு பேராசிரியராக நியமனம் பெற்ற பின்னர் எனக் குரிய ஆய்வுத் திட்டமாகத் தொல்காப்பியப் பொருளதிகார மொழி பெயர்ப்புப் பணியை அளித்து, அப்பணி செவ்வனே நிறைவேறத் தேவையான எல்லா உதவிகளையும் தயங்காமல் உடனுக்குடன் செய்து உதவிய நிறுவன இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்கட்கும், இந்நிலையில் அவர்க்குத் துணைநின்ற அலுவலர் கட்கும், வேண்டியபோது நூல்கள் தந்துதவிய நிறுவன நூலக அலுவலர்கட்கும் மிகவும் நன்றியுடையேன்.

பொருளதிகார நூற்பாக்கள் மற்றும் அவற்றின் உரை வேறு பாடுகளால் ஏற்பட்ட ஐயங்களும் குழப்பங்களும் என்னை அலைக் கழித்த போதெல்லாம் தொலைபேசி வழியாகத் தொடர்பு கொண்டு கொடுத்த தொல்லைகளையெல்லாம் பொறுத்துக் கொண்டு தேவையான விளக்கங்களையும் தீர்வுகளையும் சலிப்பின்றி அளித்துதவிய மூதறிஞர் பேராசிரியர் அ.ச. ஞானசம்பந்தன் அவர்கட்கும், பல்வேறு ஆய்வுச் சூழலில் உசாத்துணையாக நின்று விளக்கம் தந்து ஊக்கப்படுத்திய பேராசிரிய நண்பர் பொன். கோதண்டராமன் அவர்கட்கும், இந்நூலின் கையெழுத்துப் படியையும் அச்சுப்படியையும் படித்துத் திருத்தம் செய்து உதவிய நண்பர் பேராசிரியர் இ. சுந்தரமூர்த்தி அவர்கட்கும் எனது உளம்கலந்த மகிழ்வான நன்றி என்றும் உரியது.

ஆய்வுத்திட்டம் நிறைவேறிய நிலையில் இதனைச் சீர்தூக்கி வெளியிடுவதற்கான ஏற்பினை உவந்தளித்த பதிப்புக்குழு உறுப்பினர்கள் பேராசிரியர் இரா.இளவரசு, பொன். கோதண்டராமன், இ.சுந்தரமூர்த்தி ஆகியோர்க்கு என் மகிழ்வார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

அ.அ. மணவாளன்

சென்னை-20

24-11-1998.

## INTRODUCTION

This piece of translation of the first two chapters of the third book of Tolkāppiyam, called Porulatikāram is the result of a project work undertaken and completed by me during my tenure (1997-1998) as a visiting professor at the International Institute of Tamil Studies, Chennai - 600 113. Although the directions were to prepare an English version of Porulatikāram as in the case of the first two books of Tolkāppiyam, done earlier by the Institute, I preferred to enlarge the audience by choosing to provide a short and lucid commentary in Tamil, too. This decision was also taken in keeping with a modern theory of translation which recommends that as regards translation of ancient texts composed in verse form, it is better to first paraphrase the text in the source language and then to render the same into a target language to ensure greater fidelity on the one hand and effortless readability on the other.

There have been several attempts, as follows, at translating Porulatikāram into English in parts or in full:

1. E.S. Varadaraja Iyer
   **akattiṇai iyal, kaḷaviyal, kaṟpiyal and Poruḷiyal-1948.**

2. P.S. Subrahmanya Sastri
   **akattiṇai iyal, Puṟattiṇai iyal - 1950.**
   **kaḷaviyal, kaṟpiyal, Poruḷiyal - 1952.**
   **meyppāṭṭiyal, Uvamai iyal, ceyyuḷiyal, marapiyal- 1956.**

3. S. Ilakkuvanar
   **Poruḷatikāram - in full - 1963.**

4. Nirmal Selvamony
   **akattiṇai iyal - 1989.**

Nirmal Selvamony lists, in the introduction to his above work, two more scholars, R. Vasudeva Sarma and Vidwan Vativel Pillai as translators of akattiṇai iyal and Puṟattiṇai iyal (1933, 1934). I did not have the opportunity of perusing their translations. The above four, on the other hand, I have been perusing with great interst as and when needed and eventually have been benefited by them both as guides and deterrants. I owe every one of them a debt of gratitude for functioning as such.

This translation has offered me an opportunity of identifying several kinds of problems of translation. In spite of my experience as a translator of a religious discourse, "Come Wind Come Weather" (1961), Aristotle's 'Poetics' (1976), a critical study of 'Pothana', the Telugu epic poet (1981), as a language expert for translating text books on Banking and Political histories (1963), as a translator of portions of Cilappatikāram, Maṇimēkalai and Kambarāmāyaṇam in to English (1979) and as a supervisor - guide for M.Phil and Ph.D., dissertations evaluating three English translations of Cilappatikāram and two Tamil translations of Milton's 'Paradise Lost' - in spite of such varied experience, and adequate expertise in Tamil grammar and literature, I became diffident and felt inadequate for this uphill task beset with problems more of interpretation than of translation. Discussions with some senior scholars, traditional and modern, helped to dispel certain doubts and to unravel certain misty problems. Many of them, however, persisted and pitied me. I record hereunder some major problems which I encountered but could not solve satisfactorily, with a fond hope that discriminating readers of this translation or future translators of this work may be able to solve them to the satisfaction of all concerned.

**TWO ASPECTS OF TRANSLATION**

The process of translation entails two kinds of functioning; interpretation of ths SL text and rendering of the same into the target language. The success of a translation depends very much on the successful interpretation of the original in terms of the theory of fidelity. The success of interpretation depends in turn on the nature of the SL text, its content and form. The more ancient and cultural the original, the more difficult becomes the task of interpretation. Because, such texts are usually subjected to many forms of corruptions, such as emendations, interpolations and omissions, during the course of their transmission and successive reproductions. Poruḷatikāram, the SL text under discussion is considered a very old text (C. 4th c.B.C.) dealing with the poetics of the Tamil literary tradition, a socio - literary - cultural product and hence contains almost all the aspects of corruption mentioned above. This text admits therefore many interpretations, conflicting and contradictory, caused by alternative readings or emendations. Exact interpretation becomes in certain places, almost impossible and as a result the translation staggers and falters.

## PROBLEMS WITH THE SL TEXT

Preservation and transmission of the text of Tolkāppiyam was done through the medium of palm leaf manuscripts. Owing to passage of time and frequent copying by scribes the text got corrupted in several places. Loss of some leaves, jumbled order of some leaves, callous and unintelligent reconstruction of the missing words or portions of the text resulted in the loss of certain verses, reordering of the verses, spurious emendations, and in alternative readings.

Poruḷatikāram is structured into nine chapters each containing unequal number of verses, called cūttiram by the medieval and traditional commentators (Tolkāppiyam itself calls it cūttiram, **Porul**, 470-471, 644, 645, 647, 48, 49) and nūṟpā by the modern critics cum commentators. Since it deals with the grammar of Tamil literature, in other words, Tamil Poetics in terms of theories, concepts, norms, classifications, forms, techniques and usage in a closely knit method with frequent cross - references, back and forth, the order of verses and even that of lines and phrases within verses are very significant for following the run of the argument.

The present text of Poruḷatikāram was probably first fixed by Iḷampūraṇar, the first commentator who takes lot of efforts to explain the purport and order of the verses. The same was followed by the subsequent commentators till the dawn of this century, without questioning the order or purport of the verses. In spite of their hunch as to some discrepancy and disorder in the flow of thought, expressed in the form of doubts and queries by their students and contemporaries, the traditional commentators take pains to justify the existing order and readings. This was due to their reverent attitude towards the original, a common trend seen in almost all the sub-cultures of India towards ancient texts.

## LACUNAE

Loss of certain verses in the course of transmission has been noted in several places. (See Translation P. 3, n. 2 p. 31, n. 24; p. 43, n.4.) The present translator chooses to interpret the phrase, "muṟpaṭak kiḷanta" which occurs in the opening verse of akattiṇai iyal, as "mentioned before", in virtue of its occurrences in the same meaning elsewhere (Tol. II, 38, 39, 41, 279; III, 178, 486). In his opinion,

there should have been one or two verses, at the head of this chapter preceding the present opening verse, defining the term poruḷ, giving its classification into Akam and Pu̱ram and the divisions of tiṇai thereof. This pattern is followed in the first and second books of Tolkāppiyam. This point has been already noted by a modern commentator S.S. Bharatiyār.

Such lacunae in other places have also been noted by Iḷampūraṇar, (Translation p. 31, n. 24) M. Arunachalam Pillai (Tol. akattiṇai iyal, Maduraip palkalaik ka̱lakam, 1975, pp. 138-40) and Balasundaranar (p.142).

The first verse of Pu̱rattiṇai iyal witnesses a different kind of lacuna. (See Trans. p. 43, n. 4). It was first noted by P.S.S. Sastri in the course of his translation of the above verse. He observes:

> The lines 3 and 4 of this sūtra should, in my opinion, form the second, sūtra. The third and fourth lines of this sūtra should have been left out by mistake by the scribe. They may be reconstructed thus:
>
> **Veṭci mutalāp pāṭāṇ i̱ruvāy**
> **mu̱rpaṭak kiḷanta e̱lutiṇai e̱npa**

(were classified into seven by the predecessors beginning with veṭci and ending with pāṭāṇ)

This (was) suggested to me when I compared this sutra with the first sutra of Akattiṇai iyal.

**ORDER OF THE VERSES**

Change of order in the sequence of verses caused in the process of transmission also poses problems of interpretation. The order of verses assumes significance since the text frequently employs the technique of cross-reference in its exposition. Change of oder in certain contexts leaves the interpreter in the lurch. Verses 18, 26, 32, 34, 45 and 55 may be cited as examples of doubtful order. A classic example in this regard is the verse 55 which reads as follows:

mu̱ṉnaiya nā̱nkum mu̱ṉṇata̱r ke̱npa

(They say that the former four belong to the former)

None of the commentators, medieval and modern, has questioned the order of this verse. Even M. Arunachalam Pillai who has questioned the order of verses elsewhere justifies the present order of this verse. Let us see how they interpret this verse:

Iḷampūraṇar: The four stages preceding the four aspects of peruntiṇai belong to kaikkiḷai.

Naccin̲ārkkin̲iyar: The four stages preceding the first (Providential) union of the lovers belong to kaikkiḷai.

S.S. Bharatiyār: (refutes both the interpretations) The four verses preceding those on kaikkiḷai and peruntiṇai belong to kaikkiḷai.

M. Arunachalam Pillai agrees with Naccin̲ārkkin̲iyar and refutes the interpretations by Iḷampūraṇar and Bharatiyār.

S. Balasundaram: agrees with Iḷampūraṇar and refutes Naccin̲ārkkin̲iyar and Bharatiyār.

Sivalinganar : agrees with Naccin̲ārkkin̲iyar.

**TRANSLATORS**

P.S. Sastri: The stages preceding the four mentioned above belong to kaikkiḷai. (This is Iḷampūraṇar's interpretation. He also gives that of Naccin̲ārkkin̲iyar as a foot note.)

S. Ilakkuvanar: It is said that the former four belong to the former.

Nirmal Selvamony: The former four belong to the former, they say. Note: An event which causes one to think (Verse 45), speaking of an event and posturing (Verse 46), mingling elements in traditional manner (48), and employing similies (verses-48-51) are the 'former four' which belong to kaikkiḷai ('the former'). (This note follows S.S. Bharatiyār).

All the commentators and translators agree that **mun̲n̲atu** (former) refers to kaikkiḷai. With regard to **mun̲n̲aiya nān̲ku,** (the former four) there are three independent views by Iḷampūraṇar, Naccinārkkin̲iyar and S.S. Bharatiyār. Others follow any one of the three. S. Ilakkuvanar did not choose to elaborate. The present translator did not elaborate either. In his opinion, the present order of

the verse seems to be dubious. It should belong somewhere else or some other verse might have preceded it. Unless and until its order in refixed, which seems to be next to impossible in view of the absence any worthwhile data, it shall admit as many interpretations as possible and shall thus remain a crux.

**SOME WORDS AND PHRASES**

The burden of interpretation becomes heavier and more complex when it meets certain terms in the text which do not lend themselves to any agreeable gloss. The terms like

ēṉōr (verse 24,26,30,34,81), uyarntōr (28,33,36), mēlōr (19), kantaḻi, koṭinilai, vaḷḷi (85), amarar (79) and puṟaṉē (59, 62, 64, 66, 70, 73, 76, 78, 130, 245).

have been glossed variously by commentators and critics with hardly any agreement among them. Factors are several - textual, linguistic, thematic and cultural - which influence their interpretations. Although it is true that the translator is also an interpreter, he is not supposed to offer as many interpretations as probable; he has to decide on **an** interpretation from among the plethora of them before he starts translating, of course, recording other viable interpretations in the form of footnotes.

In addition to the above, the text abounds in words like nālvar (31), nāliru vaḻakku (74), nāliraṇṭu (78), aṟuvakai (79), eṭṭuvakai (75) and so on which defy interpretation agreeable to all. The text uses such words freely without any clues to gloss them. Translation of the above as the four, the eight, the six kinds, etc., without explanations as to what are the four, six, eight and so on, will hardly be worthwhile.

**CERTAIN DISTURBING USAGES**

There are certain other words in the text which do not have any direct bearing upon the issue of interpretation, but are crucial for a discussion on the authenticity of the text. As far as the first two chapters are concerned, we encounter words like Periyavar (75) tāpata nilai (77), taputāra nilai (77) and mūtāṉantam (77).

The word **'Periyavar'** occurs only once in Tolkāppiyam. It is employed here as a human plural noun. It does not occur in any of

the caṅkam works, except in Naṟṟiṇai (266) where it is used as an honorific plural. We meet this term as a human plural only in Nālaṭiyār, one of the eighteen kīḻkkaṇakku works of a much later period. There is no alternative reading for this word. All commentators have the same reading. The morphological forms of periyar, periyōr are quite in consonance with the contemporary usage of Tolkāppiyam and caṅkam works. But the form 'periyavar' with an infix of /V/, a labio - dental frictionless continuant appears to be something odd in the linguistic environment of Tolkāppiyam.

The phrase **tāpata nilai** is a subtheme of kāñcit tiṇai. The term tāpata does not occur either as a singular or plural noun, in any of the Caṅkam works nor does it in any of the eighteen ethical works. Though Cilappatikāram records two occurrences of this term (26:9;27: 179), they are used here in the sense of ascetic or sanyasi not in the sense of pitiable widowhood as the subtheme stands for. So the term in the Tolkāppiyar's sense does not enjoy currency until the end of the sixth century. It is strange that this compound made up of Sanskrit or some other northern dialect and Tamil, is used in Tolkāppiyam to record a puṟam theme, while there are several poems in Puṟanāṉūṟu (248 - 252) which describe the plight of bereaved women and men. The question is, how is it that a native theme has been given a non - native terminology.

**Taputāra nilai** is another subtheme of kāñcit tiṇai. Tapu tāram means 'loss of wife', pitiable condition of a widower. It is also a hybrid compound. In this case a reverse order Tamil - Sanskrit. The word tāram used in the sense of wife occurs only once in Tolkāppiyam (77). It occurs in many places in caṅkam works (perum. 361; maturaik. 290, 697; malai. 170, 513; Naṟ. 135; patiṟ. 48, 88; pari. 12; akam. 171, 282; puṟam. 343) and Cilappatikāram: 3:72, 76; 6:153; 10:106, 10 kaṭṭurai 15; 17: 48, 53). Caṅkam works use this word in the sense of products, rare things and material. In addition to these, it is used in Cilappatikāram to mean, a string in musical instruments like yāḻ (lute), and one of the seven melody types. This amounts to say that the word tāram has not been used in any of the works cited above in the sense of wife. When we traverse down the corridors of time, we meet its use in the sense of wife in Nālaṭiyār (81, 82) ācārak kovai (95), Ciṟupañcamūlam (81) and mutumoḻikkāñci (41, 42) all of them included in the eighteen works of kīḻkkaṇakku.

The commentator of Nālaṭiyār, Arumukam Servai says that the term tāram is a corrupt form of the Sanskrit word dāra. Tamil Lexicon recording the usage from Tolkāppiyam suggests its derivation from the Sanskrit word, dāra. Sir Monier M- Williams records the entry of dāra as a masculine plural meaning a wife (wives), and cites **Grihya Sūtra, Manu's Law - Book, Mahā Bhārata** as occurrences in that order. (**A Sanskrit-English Dictionary**, Oxford: OUP. 1899, Delhi: rpt. Motilal Banarasidass, 1995)

**Mūtāṉantam** is yet another disturbing usage. Used as a hybrid compound this is listed as a subtheme of kāñcit tiṇai which means, "Onlookers appreciating the wife who instantaneously dies on seeing her husband dead." This term does not occur anywhere else until very late in the history of Tamil literature. Saint Ramalingar uses this compound in a different meaning, "greater Bliss". This term, therefore, remains as such, a 'singular' occurrence, even though the human predicament captured by this subtheme has been treated in literature, some examples being, a poem in puṟanāṉūṟu (245) and the instance of the Pandya queen dying immediately on seeing her husband the king swooning to death (Cilappatikāram 20:78-81).

The second element of the compound āṉanda does not occur anywhere else until we come to Tiruvācakam where it is used in the sense of bliss and spiritual happiness, whereas it means 'death' in Tolkāppiyam.

Sir Monier M. Williams records **ānanda** as masculine gender meaning, happiness, joy, enjoyment and sensual pleasure and cites Rig Veda, Atarva Veda etc., as sources.

We have no means to know at present how the term, evidently being a non - Tamil word came to be used in Tolkāppiyam and that too as a hybrid compound in the meaning of 'death'.

It is worth noting that all these three terms, tāpata nilai, taputāra nilai and mūtāṉantam do not have alternative readings; and are given in the second set of ten subthemes under kāñcittiṇai, which are considered to have been added by Tolkāppiyar to the first ten drawn from his tradition. (See Trans.P.81). Though bears not directly on the present point of discussion, the following critical opinion of K. Sivathamby is worth considering:

> The linking of kāñci and peruntiṇais together, reveals an attitude to see in full atleast certain Sanskritic socio-literary traditions reflected or embedded in the unique traditions of the Tamils (P.73).
>
> Tolkāppiyam records the unique aspects of the literary ideologies of the Tamils and at the same time it seems to be attempting to describe the same from the standpoint of the Sanskrit culture. (p.87), translated from Tamil by this author) (**Tolkāppiya Ilakkiyak kōṭpāṭukaḷ** Essays on Tolkāppiyam, ed. Lawrence and Bhagavati, I.I.T.S. 1998).

**COMMENTARIES UNRELIABLE**

In view of its comparative proximity to the original, with less number of corruptions in the text and in view of its being the first, straight forward, non-sectarian commentary, this translator chose to base his text and interpretation on Iḷampūraṇar's commentary. Doubtless, it has stood him in good stead.

There are however, certain places where this translator feels that later commentaries are more relevant to the argument of the text than that of Iḷampūraṇar and in such instances, the later are followed. For example, see translation: P.51, n.8a and 8b., p.91, n.42).

The text of Iḷampūraṇar itself, as it has come down to us is corrupt in many places and the publishers in some cases caused to reconstruct some of such lacunae on the basis of Naccinārkkiniyar's commentary and in some cases they have been improvised by anonymous hands. Fortunately enough the kazhakam edition has mentioned certain cuts and their reconstructions. (See kazhakam edition, pp. 175, 176, 177, 179 and 282 and footnotes there under)

Mr. Arunachalam Pillai also mentions several instances of reconstructed portions in Iḷampūraṇar's commentary (See, Akattiṇai iyal, Madurai University, 1975, p. 198).

Much space has been spent so far to bring to the attention of discriminating scholars - readers and prospective translators, the various aspects of the problem of interpreting the source text before one attempts to translate it into a target language.

**PROBLEMS OF TRANSLATION**

Once proper interpretation of the text is arrived at, poruḷatikāram, as a text on poetics dealing with themes and techniques of more or less objective nature, does not present any serious problem of translation, except regarding terms and phrases which are culture specific and except at times, certain errors of style and expression, inelegant and clumsy, which a non-native writer is generally heir to.

Terms of thematic import such as akam, pur̲am, tiṇai, mutal, karu, etc., calender, months, (Vaikāçi, mārkaḷi etc.,) names of regions (mullai, marutam, etc.,) names of deities (Māyōn, Varuṇan̲, etc.) and so on, are not translated. They are instead transliterated in the body and explained, wherever needed, either in the paraphrase or in the footnotes. All the culture specific literary terms will be defined and explained in the glossary to be appended once all the nine chapters are translated.

**Pur̲an̲ē** is the one word that defies an exact translation into English. The reason is not one of absence of translation equivalence but one of the problems of correct interpretation. All the commentators have just repeated the term as 'puram' and left it at that. Perhaps they thought it was too evident to need a gloss. But they vie with each other to show how the akam and pur̲am tiṇais parallel closely in terms of mutal, karu and uripporuḷ. Since the theory of mutal, karu and uri relates to akam poetry (verse 3) and there is no verse that permits us to correlate this theory to pur̲am poetry, it is difficult to see any point in their efforts, except admiring their spirit of justifying the text as it is, to the best of their abilities.

This kind of yoking together the tiṇais of akam and pur̲am bristless with many theoretical difficulties. Even accepting the theory of parallelism between akam and pur̲am, such parallelism cannot be maintained in certain cases, for example, pālai and vākai and peruntiṇai and kāñci. A recent study has dealt in detail with this problem from a different point of view and has arrived at more or less a similar conclusion (K. Sivathamby, 73).

The translators have chosen, rightly, to transliterate this term rather than translate it, taking it perhaps as a theoretical construct. Since some sort of gloss or interpretation is needed for the reader to

follow the argument, an attempt has been made here to translate the term in the light of the commentaries. S. Ilakkuvanar who transliterates the term in the body of his translation, gives 'counterpart' as an equivalent of puṟaṉ in his critical discussion (pp. 450-52). The word counterpart is used to denote to persons or things which are identical in function or position. Here the main run of yoking akam and puṟam themes is one of parallelism, both of them functioning as two different aspects of one whole. Hence the present translator has chosen to translate the term tentatively as "(non-Akam) parallel to". The phrase "Vākai is the non-Akam parallel to pālai" means "Vākai is parallel to pālai and Vākai is a non-Akam tiṇai. Here the use of the word puṟaṉ or puṟam is avoided and is substituted by the phrase 'non-Akam' in the light of interpretations available at present. This translation may be substituted by a better term or phrase in future by prospective translators, should they be fortunate enough to come across or arrive at an exact interpretation of the term 'puṟaṉē.

This translation does not lay any tall claims to its achievements. Suffice it to say, that it does record, as shown in this introduction, that all possible efforts have been taken to arrive at fair and objective interpretations as far as the present fund of our knowledge permits, and to identify various problems of interpretation that a translator has to tackle and solve before he starts functioning as a translator.

This translator will be happy to acknowledge with thanks any suggestions and criticism from discriminating scholars and critics to improve the quality of this piece of translation in subsequent editions.

## ACKNOWLEDGEMENTS

I am most appreciative and thankful to Dr.M. Thamizhkkudimakan, the Honourable Minister for Official Language and Tamil Culture for creating visiting professorships at International Institute of Tamil Studies, Chennai-113 with a view to encouraging Tamil research. I am grateful to the chairman and members of the Selection Committee for selecting me as a Visiting Professor (1997-98) at the Institute.

My appreciative thanks are due to Dr. Ramar Ilango, Director I.I.T.S., for assigning and administratively helping with necessary infrastructure facilities for the project of preparing an English version of Poruḷatikāram; to his office staff for assisting him in furtherance of the project; and to the Librarian and her assistants at the Institute for making available to me all the books needed for the project.

I am deeply indebted to Prof. A.S. Gnanasambandan the doyen of Tamil Studies for the past five decades for dispelling certain teasing doubts and plaguing confusions in regard to the text of and commentaries on Tolkāppiyam; to Prof. Pon. Kothandaraman for his unfailing encouragement and helpful suggestions; and to Prof. E. Sundaramoorthy for doing the painful job of reading the manuscripts and the proofs and for his useful suggestions towards a better format and layout of this book.

I am equally grateful to the members of the Committee of Publications Professors Ira. Ilavarasu, Pon. Kothandaraman and E. Sundaramoorthy for their discriminating scrutiny and approval of this work for publication through the Institute.

**A.A. Manavalan**

Chennai - 600 020
24-11-1998

# உள்ளுறை

# CONTENTS

# அகத்திணை இயல்

**1. கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்**
**முற்படக் கிளந்த எழுதிணை என்ப.**

கைக்கிளைப் பொருள் முதலாகப் பெருந்திணைப் பொருள் இறுதியாக முற்படக்[1] கூறப்பட்டவை ஏழு திணைப் பொருள்கள் என்று கூறுவர்.

**2. அவற்றுள்**
**நடுவண் ஐந்திணை நடுவணது ஒழியப்**
**படுதிரை வையம் பாத்திய பண்பே.**

மேலே கூறிய ஏழு திணைகளுள் கைக்கிளைக்கும் பெருந்திணைக்கும் இடையில் நின்ற ஐந்திணைகளுள் நடுவாக நிற்கும் பாலைத்திணை ஒழிந்த ஏனை நான்கனுக்கும் நிலம் வரையறுத்துக் கூறுவது அகப் பொருள் மரபாகும்.

---

1. முற்படக் கிளந்த என்னும் தொடருக்கு 'முன்னதாகக் கூறப்பட்ட' என்னும் கருத்தில் பழைய உரையாசிரியர்களும், 'முதன்மையானவையாகக் கூறப்பட்ட' என்னும் கருத்தில் இக்கால உரையாசிரியர் ஒருவரும் பொருள் கொள்வர்.

   இளம்பூரணர் முதலானோர் இச்சூத்திரத்தை அகத் திணையியலின் தலைச்சூத்திரமாகக் கொள்ளுகின்றனர். எழுத்து, சொல் ஆகிய இரண்டு அதிகாரங்களின் முதற் சூத்திரங்களை நோக்க இதுதான் இவ்வியலின் முதற்சூத்திரமா என்பது மேலும் ஆராய்தற்குரியதாகத் தோன்றுகிறது. எழுத்து இத்துணை என்றும், சொல் இத்திணைகளின் மேற்செல்லும் என்றும் அவை கூறாநிற்க, பொருள் அகம், புறம், என இருவகைப்படும் என்னும் அடிப்படைக் கருத்தமைந்த நூற்பா இந்த அதிகாரத்தின் தொடக்கமாகக் காணப்படாதது ஏன் என்னும் ஐயம் எழுகிறது. பல ஆண்டுகளுக்கு முன்னரே சோமசுந்தர பாரதியார் இக்கருத்தை வெளியிட்டிருப்பதும் சிந்திக்கத் தக்கது.

## AKATTIṆAI IYAL

1. kaikkiḷai mutalāp peruntiṇai iṟuvāy
   muṟpaṭak kiḷanta eḻutiṇai eṉpa.[2]

They (the earlier grammarians) say that from kaikkiḷai through Peruntiṇai[3] are the seven divisions of Akam poetry described earlier.

2. avaṟṟul
   naṭuvaṇ aintiṇai naṭuvaṇatu oḻiyap
   paṭutirai vaiyam pāttiya paṇpē.

Of the seven tiṇais[4] the five placed between kaikkiḷai and peruntiṇai except pālai have been assigned geographical identities as per the Akam tradition. Pālait tiṇai placed in the middle of the five is not assigned any geographical identity.

---

2 (a) The phrase "muṟpaṭak kiḷanta" in this cūtra is glossed as "described first" by the medieval commentators and as "described as primary" by a modern commentator.

(b) All commentators treat this as the first cūtra of this book on Porul. When compared with the first cūtras of the books on eluttu and col which give the total number of the divisions of eḻuttu and col, the first cūtra of Poruḷ is normally supposed to give the classification of Porul as akam and puṟam, before getting down to the divisions of akattiṇai. One is therefore led to hold that this lacuna in the text might have been caused through some scribal error. Somasundara Bharatiyār has already drawn our attention to this lacuna.

3. Kaikkiḷai - an aspect of <u>Akam</u> love meaning unrequited love.
   Peruntiṇai - an aspect of <u>Akam</u> love meaning love incompatible.

4. <u>tiṇai</u> means (a) a geographical division (b) a classification of Akam and Puram poetry and (c) Propriety of the characters in Akam love.

**3. முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே**
**நுவலுங் காலை முறைசிறந் தனவே**
**பாடலுட் பயின்றவை நாடுங் காலை.**

சான்றோர் செய்யுட்களில் வழங்கும் அகப்பொருள் மரபை ஆராயுமிடத்து முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற மூன்றும் முறையே திணையுணர் காரணிகளாகக் காணப்படுகின்றன.

**4. முதல்எனப் படுவது நிலம்பொழுது இரண்டின்**
**இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே.**

முதல் என்று சொல்லப்படுவது நிலமும் காலமும் ஆகிய இரண்டினது இயைபினாலாகிய இயற்கை என்று உலகின் இயல்பினை யுணர்ந்தோர் கூறுவர்.

**5. மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்**
**சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே.**

மாயவனை விரும்பிய காடுசார்ந்த நிலனும், சேயவனை விரும்பிய மலைசார்ந்த பகுதியும், வேந்தனை விரும்பிய இனிய நீர்வளம் சார்ந்த நிலனும், வருணனை விரும்பிய பெருமணற் பகுதியும் (அக இலக்கியத்துள்) முறையே முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்னும் குறியீடுகளால் வழங்கப்பெறும். பண்டைத் தமிழர்தம் கடவுள் கோட்பாடு பற்றிய பல்வேறு கருத்து வேறுபாடுகட்கும், இந்நூலாசிரியரின் காலம் பற்றிய கருத்து வேறுபாடுகட்கும் இடந்தருவதாக இந்த நூற்பா அமைந்துள்ளது.

**6. காரும் மாலையும் முல்லை.**

ஆவணித் திங்களும் புரட்டாசித் திங்களுமாகிய கார்காலமும், மாலைப் பொழுதும் முறையே முல்லைத் திணைக்குரிய பெரும் பொழுதும் சிறு பொழுதும் ஆகும்.

3. mutalkaru uripporuḷ eṉṟa mūṉṟē
nuvalun kālai muṟaiciṟan taṉavē
pāṭaluṭ payiṉṟavai nāṭuṅ kālai.

Considering the literary usage, mutal porul, karupporul and uripporuḷ are the three important constituents by which in the above order of occurrence the tinai of an Akam poem is determined.

4. Mutaleṉap paṭuvatu nilampoḻu tiraṇṭiṉ
iyalpeṉa moḻipa iyalpuṇarn tōrē.

Expert poeticians and scholars say that aspects of space and time constitute the mutal porul.

5. māyōṉ mēya kāṭuṟai ulakamum
cēyōṉ mēya maivarai ulakamum
vēntaṉ mēya tīmpuṉal ulakamum
varuṇaṉ mēya perumaṇal ulakamum
mullai kuṟiñci marutam, neytaleṉac
colliya muṟaiyāṟ collavum paṭumē.

The forest region ascribed to Māyōṉ, the hilly region ascribed to Cēyōṉ, the fertile region ascribed to Vēntaṉ, and the littoral region ascribed to Varuṇaṉ are called in Akm convention, as mullai, kuṟiñci, marutam and neytal respectively. This cūtra admits various conflicting interpretations in terms of the gods referred to and by the same token remains a crux in fixing the date of Tolkāppiyam.

6. kārum mālaiyum mullai

The rainy season comprising the months of Āvaṇi and Puraṭṭāci and the evening are respectively the season and time assigned to mullaittiṇai.

**7. குறிஞ்சி,**
**கூதிர் யாமம் என்மனார் புலவர்.**

ஐப்பசித் திங்களும் கார்த்திகைத் திங்களுமாகிய கூதிர்க் காலமும், நள்ளிரவும் முறையே குறிஞ்சித் திணைக்குரிய பெரும் பொழுதும் சிறு பொழுதுமாகும் என்று கூறுவர் புலவர்..

**8. பனியெதிர் பருவமும் உரித்தென மொழிப.**

மார்கழித் திங்களும் தைத்திங்களும் கூடிய முன்பனிக் காலமும் குறிஞ்சித் திணைக்கு உரியது என்று கூறுவர்.

**9. வைகறை விடியல் மருதம்.**

இராப்பொழுதின் பிற்கூறாகிய வைகறையும், பகற் பொழுதின் முற்கூறாகிய விடியலும் மருதத் திணைக்குரிய சிறுபொழுதுகளாம்.

**10. எற்பாடு**
**நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும்.**

நெய்தல் திணைக்குரிய சிறு பொழுது எற்பாடாகும். (எற்பாடாவது பகற்பொழுதின் பிற்கூறு).

**11. நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு**
**முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே.**

ஐந்திணையின் நடுவணதாகிய பாலைத்திணைக்கு வேனிற் காலமும் நண்பகலும் முறையே உரிய பெரும்பொழுதும் சிறு பொழுதுமாம். (சித்திரை, வைகாசி என்னும் இரு திங்களும் கொண்டது இளவேனில்; ஆனியும் ஆடியும் கொண்டது முதுவேனில். நண்பகலாவது பகற்பொழுதின் நடுக்கூறு). பாலைக்கெனத் தனியே நிலம் விதந்து கூறாமையின், இப் பெரும்பொழுதும் சிறுபொழுதும் எந்த நிலத்தின் கண் (திணையில்) நிகழ்ந்தாலும் அது பாலையாகக் கருதப்படும் என்பது கருத்து. அதாவது, முதற்பொருள்கள் இரண்டனுள் பொழுதால் குறிபடுவது பாலைத்திணை என்றவாறு.

7. kuṟiñci,
kūtir yāmam eṉmaṉār pulavar.

According to the poeticians, the winter comprising the months of Aippaci and Kārttikai, and the midnight are respectively the season and time assigned to kuṟiñcit tiṇai.

8. paṉiyetir paruvamum urittena moḻipa.

They say that the early period of the dewy season comprising the months of Mārkaḻi and Tai, also, belongs to kuṟiñcit tiṇai.

9. vaikaṟai viṭiyal marutam.

The last part of the night and the dawn are assigned to marutat tinai.

10. eṟpāṭu
neytal ātal meypeṟat tōṉṟum.

The time sunset (the last part of the day) is assigned to neytal tinai.

11. naṭuvunilait tiṇaiyē nanpakal vēṉiloṭu
muṭivunilai maruṅkiṉ muṉṉiya neṟittē.

The summer season comprising the months of Cittirai, Vaikāci, Āni and Āti, and the midday (noontime) are assigned to the centrally placed pālait tiṇai. Since no land is specifically assigned to pālai, any land that occasions the summer and the meridian together is considered pālai.

**12. பின்பனி தானும் உரித்தென மொழிப.**

மாசித்திங்களும் பங்குனித்திங்களும் சேர்ந்த பின்பனிப் பருவமாகிய பெரும்பொழுதும் பாலைத்திணைக்கு உரியது என்று கூறுவர்.

**13. இருவகைப் பிரிவும் நிலைபெறத் தோன்றலும்
உரிய தாகும் என்மனார் புலவர்.**

தலைமகளைப் பிரிந்து செல்லுதலும், தலைமகளை உடன் கொண்டு அவளது சுற்றத்தாரைப் (தமரை) பிரிந்து செல்லுதலும் என்னும் இருவகையான பிரிவுகள் நிகழ்தலும் பாலைத்திணைக்குரிய பொருளாகும் என்று கூறுவர் புலவர். இது இளம்பூரணர் உரை. இனி நச்சினார்க்கினியர் முதலிய உரையாசிரியர்கள் நிலத்தின்வழிப் பிரிதல். நீரின்வழிப் பிரிதல் என்னும் இருவகைப் பிரிவுகளும் பாலைத் திணைக்குரிய பொருளாம் என்று இந்நூற்பாவிற்குப் பொருள் கூறுவர்.[5]

பிரிந்து செல்லுதலே யன்றிப் பிரிந்து செல்லக் கருதுகிறேன் என்று தலைவன் பிரிதற் குறிப்பினை உணர்த்தினாலும் பாலைக்குரிய பொருளாகக் கொள்ளலாம்.

**14. திணைமயக் குறுதலும் கடிநிலை இலவே
நிலனொருங்கு மயங்குதல் இல்லென மொழிப
புலன்நன் குணர்ந்த புலமை யோரே.**

ஒரு திணைக்குரிய முதற்பொருள் மற்றொரு திணையுள் வந்து மயங்குதல் குற்றமாகாது. எனினும் நிலங்கள் தம்முள் மயங்கும் மரபில்லை என்பர் இலக்கியக் கோட்பாடுகளை நன்குணர்ந்த அறிஞர். எனவே முதற்பொருள் இரண்டனுள் பொழுது மட்டும் மயங்கி வரலாம் என்பது பெறப்படுகிறது.

---

5. பெரும்பொழுது, சிறுபொழுது என்னும் இருவகைப் பொழுதுகளும் ஒருங்கு வந்து திணை குறித்தலே அன்றி ஏதேனும் ஒன்று மட்டுமே வந்து திணை குறித்தலும் உண்டு என்று இந்நூற்பாவுக்குப் பாலசுந்தரனார் பொருள் காண்பர்.

12. pin̲pani tān̲um urritten̲a mol̲ipa

The later dewy season comprising the months of Māci and Paṅkun̲i is also said to belong to pālait tiṇai.

13. iruvakaip pirivum nilaiper̲at tōn̲r̲alum
uriya tākum en̲man̲ār pulavar.

To part from his heroine for a time and to part from her relatives during his elopement with her -- these two kinds of parting (temporary separation) belong to pālait tiṇai, according to the grammarians. This nūr̲pā according to Iḷampuranar purports to say that the theme of pālait tiṇai is separation.[6]

Naccin̲ārkkin̲iyar and others hold that both the modes of parting namely, by the land and by the sea belong to pālaittiṇai.

Apart from actual parting, portrayal of incidents revealing the intention of parting on the part of the hero is also considered as a subtheme of pālait tiṇai.

14. tiṇaimayak kur̲utalum kaṭinilai ilavē
nilan̲oruṅku mayaṅkutal illen̲a mol̲ipa
pulan̲nan̲ kuṇarnta pulamai yōrē.

Portrayal of mutalporuḷ assigned to a particular region may blend with that of another region. This is not unacceptable. But blending of geographical regions is not acceptable, according to the opinion of the experts in literary theories. Which means blending of season and time is sanctioned.

6. Balasundaram, a modern commentator is of the opinion that either both the season and the time may occur in a text or any one of them may occur as the marks of identification of the tinai concerned.

**15. உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே.**

உரிப்பொருள் தவிர்ந்த முதற்பொருளும் கருப்பொருளும் தமக்குரியதல்லாத பிற நிலத்தும் மயங்கிவருதல் ஏற்றுக் கொள்ளப்பெறும்.[6a]

**16. புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்**
**ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை**
**தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே.**

புணர்தலும், பிரிதலும், இருத்தலும், இரங்கலும், ஊடலும், அவற்றின் நிமித்தமும் என்று கூறப்படும் இவை ஐந்திணைக்கு உரிய உரிப்பொருள்களாக ஆராய்ந்து அறியப்படும். ஆராய்ந்து அறிதலாவது இவை முறையே குறிஞ்சிக்கும் பாலைக்கும் முல்லைக்கும் நெய்தலுக்கும் மருதத்திற்கும் உரியன என்று புலனெறி வழக்கினைக் கொண்டு அறிந்து கொள்ளுதல்.

**17. கொண்டுதலைக் கழிதலும் பிரிந்தவண் இரங்கலும்**
**உண்டென மொழிப ஓரிடத்தான.**

தலைவியை உடன்கொண்டு பெயரும் உடன்போக்கும், உடன்போக்கில் தமர் வந்து தலைவியை மீட்டுச் சென்றவிடத்து இனைந்து வருத்துதலும் ஓரோவிடத்து நிகழும் என்று கூறுவர்.

**18. கலந்த பொழுதும் காட்சியும் அன்ன.**

தலைவன் தலைவியர் தம்முள் எதிர்ப்பட்டவிடத்தும் அதன் பின்னர்ப் புணருந்துணையும் நிகழும் நிகழ்வுகளும் ஓரோவிடத்து உண்டு.

**19. முதலெனப் படுவது ஆயிரு வகைத்தே**

முதற்பொருள் என்று சிறப்பித்துக் கூறப்படுவது நிலமும் பொழுதுமாகிய அவ் இருவகையினை உடையது.

---

6a. இந்நூற்பாவிற்கு நச்சினார்க்கினியரும் பாரதியாரும் பாலசுந்தரனாரும் கூறும் மாற்று உரைகள் இந்த நூலின் கருத்தோட்டத்திற்குப் பொருந்துவனவாகத் தோன்றவில்லை.

15. Urippouḷ allaṉa mayaṅkavum peṟumē.

Blending of those other than uripporul may be allowed.[6b]

16. puṇartal pirital iruttal iraṅkal
ūṭal avaṟṟiṉ nimittam eṉṟivai
tēruṅ kālai tiṇaikkurip poruḷē.

Union, separation, endurance, pining, sulking and their causes are the uripporuḷ pertaining to the five tiṇais namely kuṟiñci, pālai, mullai, neytal and marutam, respectively.

17. Koṇṭutalaik kaḻitalum pirintavaṉ iraṅkalum
uṇṭeṉa miḻipa ōriṭat tāṉa.

To elope with the heroine and to pine for her separation forced by her relatives during the elopment may also take place at times.

18. kalanta poḻutum kātciyum aṉṉa.

Likewise the mutual responses of the hero and the heroine both at their first meeting and at their consequential attempts to know each other closely, may also take place at times.

19. mutaleṉap paṭuvatu āyiru vakaittē.

Thus mutalporul comprises of the above mentioned two constitutes namely, space and time.

---

6b. The interpretations given to this nūṟpā by Naccinārk kiṉiyar, Bharatiyār and Balasundaram do not seem to be in tune with the geneal run of the present text of Tolkāppiyam.

**20. தெய்வம் உணாவே மாமரம் புட்பறை**
**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
**அவ்வகை பிறவும் கருவென மொழிப.**

தெய்வம், உணவு, விலங்கு, மரம், புள், பறை, தொழில், பண் ஆகியனவும் பூ, நீர், ஊர், போன்ற பிறவும் கருப்பொருள் என்று கூறுவர். (முதற் பொருளாகிய நிலமும் காலமும் பற்றி வருவன கருப்பொருள்கள். எனவே ஐவகைத் திணைகட்கும் உரிய கருப்பொருள்கள் வெவ்வேறாக அமையும் என்பது பெறப்படுகிறது).

**21. எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்**
**அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்**
**வந்த நிலத்தின் பயத்த வாகும்**

அகப்பொருள் இலக்கியத்தில் ஒரு திணைக்குரிய பூவும், புள்ளும் அத்திணைக்குரிய நிலத்தொடும் பொழுதொடும் பொருந்தி வந்திலவாயினும், அவை வந்த நிலத்துக்கும் பொழுதுக்கும் உரிய கருப்பொருள்களாகக் கொள்ளப்படும். இவ்வாறு வருதல் திணை மயக்கம் அன்று என்பது கருத்து.

**22. பெயரும் வினையுமென்று ஆயிரு வகைய**
**திணைதொறும் மரீஇய திணைநிலைப் பெயரே.**

ஐந்திணை நிலங்கள்தோறும் மருவிய திணையடிப்படையாக வழங்கும் பெயர்கள், அகப்பொருள் மரபினடிப்படையில் அவ்வந் நிலத்து மக்களுக்கு உரியனவாக வரும் பெயரும், அவர்கள் மேற் கொள்ளும் தொழில் பற்றி வரும் பெயரும் என இரு வகைப்படும்.

**23. ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப்பெயர்**
**ஆவயின் வரூஉம் கிழவரும் உளரே.**

ஆயர், வேட்டுவர் என்பன ஆடவர்க்குரிய வினை (தொழில்) பற்றிய திணைநிலைப் பெயர்களாம். அவ்வாறே அந்நிலங்கட்குரிய தலைமக்கள் பொதுவன், வெற்பன் போன்ற அகமரபுப் பெயர்களைப் பெறுதலும் உண்டு.

20. teyvam uṇāvē māmaram puṭpaṟai
ceyti yāḻiṉ pakutiyoṭu tokaii
avvakai piṟavum karuveṉa moḻipa.

Deity, food, animal, tree, bird, drum, occupation, music and such other things like flower, water and dwelling place are collectively called karupporuḷ. Being the products of the region and season these karupporuḷ are tiṇai specific.

21. eṉṉila maruṅkiṟ pūvum puḷḷum
aṉṉilam poḻutoṭu vārā vāyiṉum
vanta nilattiṉ payatta vākum.

Even if the flower and the bird (the flora and the fauna) characteristic of a region and season are not portrayed as appearing in that region and season, they will be considered proper to the region and season in which they are actually portrayed. This kind of portrayal is not considered as blending of tiṇais.

22. peyarum viṉaiyumeṉṟu āyiru vakaiya
tiṇaitorum maññiya tiṇainilaip peyarē.

The regional names of Akam characters are tiṇaispecific. They are of two kinds: those derived from the tradition and those derived from occupation.

23. āyar, vēṭṭuvar āṭūut tiṇaippeyar
āvayiṉ varūum kiḻavarum uḷarē.

Shepherds and hunters are the regional names of male persons derived from their occupation. As heroes of Akam tradition, they may also have names like potuvaṉ and veṟbaṉ respectively.

**24. ஏனோர் மருங்கினும் எண்ணுங் காலை**
**ஆனா வகைய திணைநிலைப் பெயரே.**

புலனெறி வழக்கின் அடிப்படையில் ஆராயுமிடத்து ஏனைய நிலத்துள்ள (பாலை, மருதம், நெய்தல்) மக்களுக்கு வழங்கப்படும் திணைநிலைப் பெயர்களும் அவ்வகையின. (மரபு பற்றியும் வினை பற்றியும் வரும்).

**25. அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்**
**கடிவரையில புறத்து என்மனார் புலவர்.**

பிறர்க்கு அடித்தொழில் புரிவோரும் குற்றேவல் செய்வோரும் அகத்திணை மாந்தர்களாகப் புலனெறி வழக்குப்படுவதற்குத் தடையில்லை. அந்நிலையில் அவர்களும் தத்தமக்குரிய திணைநிலைப் பெயர்களைப் பெறுவர். அதாவது நிலத்தோடொன்றாத புறத்தொழில்களை உடையரேனும் திணைநிலைப் பெயர்களையே பெறுவர் என்று கூறுவர் புலவர் என்றவாறு.[7]

**26. ஏவல்மரபின் ஏனோரும் உரியர்**
**ஆகிய நிலைமை அவரும் அன்னர்.**

பிறரிடம் புகுந்து குற்றேவல் செய்பவரும், தனித்துநின்றே அவ்வப்போது ஏவப்படும் தொழில் செய்வோரும் மேலே கூறிய அடியோர், வினைவலர் போன்று அகத்திணை ஒழுகலாற்றுக்கு உரியவராவர்.

---

7. அடித்தொழில் செய்வோரும், குற்றேவல் செய்வோரும் அகத்திணையொழுக்கத்தினின்று கடியப்படார். அவர்தம் ஒழுகலாறு ஐந்திணைப் புறத்தவாகிய கைக்கிளை, பெருந்திணை எனப் பெயர் பெறும் என இளம்பூரணரும் பிறரும் உரை காண்கின்றனர். இக்கருத்து மேலும் ஆய்தற்குரியது.

24. ēnōr maruṅkiṉum eṇṇuṅ kālai
āṉā vakaiya tiṇainilaip peyarē.

Considered in the light of literary usage, the tiṇai specific names of other regions (pālai, marutam and neytal) are also of the same nature (derived from tradition and occupation).

25. aṭiyōr pāṅkiṉum viṉaivalar pāṅkiṉum
kaṭivarai yila puṟattu eṉmaṉār pulavar.

Bonded labourers and attendants of dignitaries are not excluded from being portrayed in Akam poetry. Though engaged in duties extraneous to their respective regions, they will also have tiṇai specific names, according to the theorists.[8]

26. eval marapiṉ ēṉōrum uriyar
ākiya nilaimai avarum aṉṉar.

Even contract labourers and casual labourers belonging to any of the above tiṇais may be portrayed in Akam poetry, as in the case of bonded labourers and the attendants of dignitaries.

8. Iḷampūraṇar and other commentators hold that bonded labourers and attendants of dignitaries are not excluded from being portrayed in Akam poetry. But their portrayal as such shall belong to Kaikkiḷai and Peruntiṇai which are extraneous to the aintiṇai pattern. This interpretation bristles with some textual problems and hence deserves further discussion.

**27. ஓதல் பகையே தூதிவை பிரிவே.**

உயர்கல்வியின் பொருட்டுப் பிரிதல், போரின் காரணமாகப் பிரிதல், அரசர் மாட்டுத் தூது செல்லுதல் காரணமாகப் பிரிதல் ஆகிய இவை தலைவியை விட்டுப் பிரிந்து செல்லக் காரணமாக அமையும். பாலைத் திணைக்குரிய உரிப்பொருளாகிய பிரிவு இவ்வாறெல்லாம் நிகழும் என்பது கருத்து.

**28. அவற்றுள்,**
**ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன.**

மேற்கூறிய மூவகைப் பிரிவினுள் ஓதற்பிரிவும் தூதிற் பிரிவும் நானில மக்களுள் பிறரிடம் ஏவல் செய்யாமல் தன்னுரிமையாக வாழும் திணைநிலை மக்களாகிய உயர்ந்தோர்க்கு உரியன.[9]

**29. தானே சேறலும் தன்னொடு சிவணி**
**ஏனோர் சேறலும் வேந்தன் மேற்றே.**

தன் பகையின் மீது தானே சென்று பொருதலும், தனக்குற்ற துணையரசர்கள் போன்றோரோடு சென்று கூடிப் பொருதலும் என இருவகை நிலையிலும் வேந்தனுக்குப் பிரிவு நிகழும். தன் பகையின் மீது தான் சென்று பொருதலும், தன்னையொத்த அரசர்களுக்காக அவர்தம் பகைவர் மீது அவர்க்குத். துணையாகப் பொருதலும் என இருவகையிலும் வேந்தனுக்குப் பிரிவு நிகழலாம். இனி, தானே பகைகொண்டு ஓர் அரசன் மேற் செல்லுதலும், தன் மேற் பகை கொண்டு வந்த பிற அரசரொடு பொருதற்குச் செல்லுதலும் என இரு நிலையிலும் வேந்தனுக்குப் பிரிவு நிகழும் எனவும் மூவகையாகப் பொருள் கொள்ள இச் சூத்திரம் இடம் தருகிறது.[11]

---

9. இச்சூத்திரத்தில் வரும் உயர்ந்தோர் என்னுஞ் சொல்லுக்கு உயரையாசிரியரும் பிறரும் "வருணப் பாகுபாட்டில் உயர்ந்தோர்" எனப் பொருள் கொள்வர். மேலே தரப்பட்டிருக்கும் ச.சோ. பாரதியாரின் உரை பொருத்தமாகத் தோன்றுகிறது.

11. "ஏனோர் சேறலும்" என்னும் தொடருக்கு அரசனுக்காக அவனது படைகள் தனித்துப் பகைமேற் சேறல், அல்லது அவனுக்காக ஏனையோர் பகைமேற் சேறல் எனப் பொருள் கொள்ளுமிடத்து, அரசனுக்குத் தலைவியை விட்டுப் பிரிதல் நிகழாமையின், அது நூற்பாவின் கருத்தாகத் தோன்றவில்லை.

27. ōtal pakaiyē tūtivai pirivē.

Pursuit of higher education, going to war against an enemy and going to other kings or countries on ambassadorial mission are some of the causes of the hero's separation from the heroine.

28. avarruḷ,
ōtalum tūtum uyarntōr mēṉa.

Of the three, separation owing to pursuit of higher education and ambassadorial mission may be proper for the higher category of people living in all the four tiṇais, people who are not dependent on others for their livelihood.[10]

29. tāṉē cēṟalum taṉṉoṭu civaṇi
ēṉōr cēṟalum vēntaṉ mēṟṟē.

Separation from his ladylove in view of a king going on war shall occur in two ways: when he goes to war against his enemy either on his own or along with his friendly kings. Or, when he goes to war either against his enemy or his friend's enemy in support of them. Or, when he himself invades a country or when he is invaded by an enemy. Thus this nūṟpā allows three kinds of interpretation.[12]

---

10. Commentators differ in interpreting the term "Uyarntōr". The interpretation of S.S. Bharatiyār given above seems to be more relevant.

12. To interpret the phrase, "ēṉōr cēṟalum" as to mean (a) the army going on war on behalf of the king or (b) his friendly kings or chieftains going on war on his behalf is beside the mark, because others going on war on his behalf does not occasion the separation of the king from his lady love which is the theme of this cūtra.

**30. மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய**
**முல்லை முதலாச் சொல்லிய முறையான்**
**பிழைத்தது பிழையா தாகல் வேண்டியும்**
**இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவே.**

முல்லை முதல் நெய்தல் ஈறான நால்வகைத் திணைகளுக்கு உரியனவாக மேற் சொல்லப்பட்ட தெய்வங்கட்குரிய பூசனை முதலாயின முறையாக நடைபெறுதலையும் மற்றும் மக்கள் தத்தம் நிலைக்கேற்பப் பிழையின்றி நடந்து கொள்ளுதலையும் அறத்தின்வழி நெறிப்படுத்துதற் பொருட்டு மேற்கொள்ளும் காவற் பிரிவும், தாம் கருதிய பொருளை ஈட்டுதற்காக மேற்கொள்ளும் பொருள் வயிற் பிரிவும் பாலைத்திணைக்கு உரியனவாகும்.[13]

**31. மேலோர் முறைமை நால்வர்க்கும் உரித்தே.**

நால்வகை நிலன்களுக்கும் உரிய தெய்வங்களுக்குச் செய்யப் பெறும் பூசனை, விழா ஆகியனவற்றைப் பேணிக் காக்கும் அறங்காவற் பிரிவு நால்வகை மக்களுக்கும் உரியது.[15]

**32. மன்னர் பாங்கின் பின்னோர் ஆகுப.**

மக்களை நெறிப்படுத்துதற் பொருட்டு மேற்கொள்ளும் நாடு காவற்பிரிவு மன்னர்க்கேயன்றி அவர்க்குப் பின்னோராகிய வணிக வேளாளர்க்கும் உரியது.

---

13. கருத்து வேறுபாட்டுக்குரிய நூற்பாக்களுள் இதுவும் ஒன்று. திறை செலுத்தும் நாடுகளைக் காக்கும் காவற் பிரிவும், பொருள் வயிற்பிரிவும் எனப்பொருள் கொள்ளும் நச்சினார்க்கினியரும் ச.சோ. பாரதியாரும் இப்பிரிவுகளுக்கு இன்னார் என்றும் கூறுகின்றனர். இந்த நூற்பா இருவகைப் பிரிவுகள் கூறுகிறதே தவிரப் பிரிவுக்கு உரியாரைக் கூறுவதாகக் தோன்றவில்லை.

15. நால்வர்க்கும் என்பதை நான்கு வருணத்தோர்க்கும் என்று இளம்பூரணரும் நானில மக்களுக்கும் (அடியோர், கீழோரைத்தவிர்த்து) என்று ச.சோ. பாரதியாரும் பொருள்கொள்வர்.

30. mēviya ciṟappiṉ ēṉōr paṭimaiya
mullai mutalāc collya muṟaiyāṉ
piḻaittatu piḻaiyā tākal vēṇṭiyum
iḻaitta oṇporuḷ muṭiyavum pirivē.

Separation of the hero may also be caused in two other respects, namely (1) to go on duty to supervise and regulate the conduct of prayers and festivals at the temples of the various gods ascribed to the various regions from mullai through neytal and to go to various places with a view to maintaining law and order among the people and (2) to go to several places, far and near, to earn money.[14]

31. mēlōr muṟaimai nālvarkkum urittē.

The duty to supervise and regulate the conduct of prayers and festivals for the images of gods presiding over all the four regions rests with all the four classes of people.[16]

32. maṉṉar pāṅkiṉ piṉṉṉōr ākupa.

The duty of maintaining law and order among the people rests not only with the kings but also with the two classes of people next to the kings, namely, the merchant class and the vēḷāḷar, the agricultural class.

---

14. This is one of the nurpas which admit or are subjected to various interpretations. Commentators like Naccinārkkiṉiyar and S.S. Bharatiyār differ from Iḷampūraṇar whose interpretation is given above with a few modifications.

16. The term nālvar is interpreted as four castes by Iḷampūraṇar and as people of four regions, except the slaves (bonded labourers) and servants by S.S. Bharatiyār.

**33. உயர்ந்தோர்க் குரிய ஓத்தி னான.**

**34. வேந்துவினை இயற்கை வேந்தன் ஓரீஇய**
**ஏனோர் மருங்கினும் எய்திடன் உடைத்தே.**

உயர்ந்தோர்க்குரிய என்று ஓதப்பட்ட பிரிவுகளும் வேந்தனுக்கென்று கூறப்பட்ட பிரிவுகளும் மேலே கூறிய ஏனோர் (சூ.26) மாட்டும் நிகழ்தல் உண்டு.

**35. பொருள்வயின் பிரிதலும் அவர்வயின் உரித்தே.**

எஞ்சிநின்ற பொருள்வயிற் பிரிவும் ஏனோர்க்கு உரியதாகும்.

**36. உயர்ந்தோர் பொருள் வயின் ஒழுக்கத் தான.**

திணைநில மக்களுள் உயர்ந்தோர் பொருள்வயின் பிரியுமிடத்துத் தத்தம் ஒழுகலாற்றிற் கேற்றவாறு (தொழில் முறைக்கேற்றவாறு) பொருள் செய்யப் பிரிவர்.[17]

**37. முந்நீர் வழக்கம் மகடூவோடு இல்லை.**

மகளிரோடு கடல் கடந்து செல்லும் மரபு இல்லை.

**38. எத்திணை மருங்கினும் மகடூஉ மடன்மேல்**
**பொற்புடை நெறிமை இன்மை யான.**

பெண்மைக்குரிய பண்பாட்டிற்கு ஏலாமையின் தலைவி மடலேற விரும்புதல் தானும் கைக்கிளை முதலாய எந்தத் திணையிலும் இல்லை.

---

17. பிரிவுகள் பற்றியும் அவற்றிற்கு உரியோர் பற்றியும் கூறும் 28 முதல் 36 வரையிலான நூற்பாக்கள் பல்வேறு உரைகளைக் கொண்டுள்ளன. இந்நூற்பாக்கள் குறிக்கும் பொருளை விளக்குவதில் பண்டைய உரையாசிரியர்களுக்குள்ளும் இன்றைய திறனாய்வாளர்கட்கு இடையேயும் கருத்து வேறுபாடுகள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

33. uyarntōrk kuriya ōtti nānā

34. vēntuvinai iyarkai vēntan oriiya.
ēnōr marunkinum eytitan utaittē.

The causes of separation ascribed to uyarntōr and the king may also apply to ēnōr, mentioned in verse 26.

35. porulvayin piritalum avarvayin urittē.

Seperation on account of earning wealth (money) may also be appropriate to them.

36. uyarntōr porul vayin olukkat tāna.

When uyarntōr part from their lovers in order to earn money, they would do so in accordance with their avocations or calling.[18]

37. munnīr valakkam makatūuvōtu illai.

There is no sanction of tradition for the hero to take his lady love or wife on a (sea) voyage.

38. ettinai marunkinum makatūu matan mēl
porputai nerimai inmai yāna.

It does not become a lady love even to think of mounting a matal (palmyrrah horse) with a view to making public her love for a particular person, as it would tell up on the standards of feminine propriety.

---

18. The Cūtrās 28 through 36 which describe the various causes of separation and ascribe persons to the various kinds of separations have been interpreted in several ways. There is hardly agreement among either the old traditional commentators or the modern critics or commentators as to the correct meaning of these Cūtrās. Each one of them goes on his own.

**39. தன்னும் அவனும் அவளும் சுட்டி**
**மன்னும் நிமித்தம் மொழிப்பொருள் தெய்வம்**
**நன்மை தீமை அச்சம் சார்தல் என்று**
**அன்ன பிறவும் அவற்றொடு தொகைஇ**
**முன்னிய காலம் மூன்றுடன் விளக்கி**
**தோழி தேஎத்தும் கண்டோர் பாங்கினும்**
**போகிய திறத்து நற்றாய் புலம்பலும்**
**ஆகிய கிளவியும் அவ்வழி உரிய.[19]**

தலைவன் தலைவியரது உடன்போக்கினை அறிந்த நற்றாய் தன்னையும், தலைவனையும், தலைவியையும், குறித்துப் புள் முதலாகிய நிமித்தமும், விரிச்சியும், வேலன் முதலிய தெய்வக்கூற்றும்; சுரத்திடத்து நிகழத் தக்க நன்மை, தீமை, அச்சம், சார்பு போல்வனவற்றைத் தொடர்புறுத்திக் கூறும் கூற்றும், இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் முக்காலத்தும் தலைவியின் நிலையை விளக்கித் தோழியிடமும், வழியிடைக் கண்டோரிடமும் இரங்கிப் புலம்பும் கூற்றும் (கூற்றிடங்கள்) நற்றாய்க்கு உரியனவாகும்.

**40. ஏமப் பேரூர்ச் சேரியும் சுரத்தும்**
**தாமே செல்லும் தாயரும் உளரே.**

பாதுகாவல் மிக்க பேரூர்ச் சேரியிலும் தலைவி உடன்போகிய வழியிலும் தமரின் துணையின்றித் தாமே சென்று தலைவியைத் தேடும் தாயரும் உளர். தாயர் எனவே நற்றாய், செவிலித்தாய் இருவருக்கும் இவ் ஒழுகலாறு பொருந்தும் என்பது கருத்து.

---

19. (அ) களவின்கண் உடன்போக்கு நிகழ்ந்தவிடத்து நற்றாய் புலம்புவதாகக் கவிதை புனைவதற்குரிய நிக்ழவுக் களன்கள் இவை என்று இந்நூற்பா தொகுத்து உரைக்கிறது.

(ஆ) முக்காலம் என்பதற்கு இருவகை வேனிலும் பின்பனியுமாகிய மூவகைப் பருவம் எனக் கொள்வர் பாலசுந்தரனார். இவ்வகையிலும் சான்றோர் செய்யுட்கள் காணப்படுகின்றன.

39. taṉṉum avaṉum avaḷum cuṭṭi
mannum nimittam moḻipporuḷ teyvam
naṉmai, tīmai accam cārtaleṉṟu
aṉṉa piṟavum avaṟṟoṭu tokaii
muṉṉiya kālam mūṉṟuṭan viḷakki
tōḻi tēettum kaṇṭōr paṅkiṉum
pōkiya tiṟattu naṟṟāy pulampalum
ākiya kiḷaviyum avvaḻi uriya.[20]

Naṟṟāy, the mother of the ladylove is to be portrayed as bewailing in the following manner when she comes to know about the elopment of her daughter with her lover; she would share her thoughts of anguish concerning herself and the lovers with her friend and with those who had seen the lovers on the way; describing the good and bad things that may befall the lovers; fear that might grip her daughter on the eerie way; the help that might be available to the pair, referring to the omens, predictions from unknown neutral persons and from possessed priests like Vēlaṉ; and narrating the events that happened in the past, happening now or that might occur in future or feeling sorry for the plight of the lovers on the desert like route in quite an inhospitable climate of hot summer and the later dewy season.

40. ēmap pērūrc cēriyum curattum
tāmē cellum tāyarum uḷarē.

There are mothers, natural and foster, who go by themselves to well guarded towns and townships or venture through desertlike lonely regions in search of the ladylove who eloped with her lover.

---

20. (a) This cūtra identifies the probable contexts in which the mother would be bewailing the elopement of her daughter. As such poets may compose any number of poems on these sub-themes which are generic in nature and generative in function.

(b) The phrase "kālam mūṉṟu" is interpreted as "three times" by most of the commentators and as "three seasons" by a modern commentator S. Balasundaram. There are poems in Cankam anthologies which answer both these intrepretations.

**41. அயலோர் ஆயினும் அகற்சி மேற்றே**

தலைவன்-தலைவியர் வேற்றூர்க்கும் சுரத்திடத்தும் செல்லாமல், ஓர் ஊரின் கண்ணேயே அயல்மனையில் தங்கியிருத்தலும் பாலைத் திணையின் உரிப் பொருளாகிய பிரிவாகவே கொள்ளப்படும்.

**42. தலைவரும் விழும நிலையெடுத்து உரைப்பினும்
போக்கற் கண்ணும் விடுத்தற் கண்ணும்
நீக்கலின் வந்த தம்முறு விழுமமும்
வாய்மையும் பொய்ம்மையும் கண்டோற் சுட்டித்
தாய்நிலை நோக்கித் தலைப்பெயர்த்துக்
கொள்ளினும்
நோய்மிகப் பெருகித்தன் னெஞ்சுகலுழ்ந் தோளை
அழிந்தது களையென மொழிந்தது கூறி
வன்புறை நெருங்கி வந்ததன் திறத்தொடு
என்றிவை யெல்லாம் இயல்புற நாடின்
ஒன்றித் தோன்றும் தோழி மேன.**

தலைவன் தலைவியை உடன் கொண்டு போகாதவிடத்துத் தலைவிக்கு நேரும் துன்பத்தை எடுத்துக் கூறுவதாகவும், தலைவி உடன் போக்குக்கு ஒருப்பட்டாள் எனக் கூறி அவனுடன் அனுப்புவதாகவும், தலைவன் உடன்போக்கு மேற்கொண்ட வழி தலைவியைப் பாதுகாக்குமாறு கூறுவதாகவும், தலைவி தமரை நீங்கிப் பிரிதலால் தமக்குற்ற துன்பத்தைக் கூறுவதாகவும், வாய்மையும் பொய்ம்மையும் காணப்பட்ட தலைமகனைச் சுட்டிப் பேசுவதாகவும், தலைவியைப் பிரிந்த தாயின் வருத்தம் நீங்க அவளைத் தேற்றுவதாகவும், பிரிவுத்துன்பம் பெருகி வருந்திய தலைவிக்குத் தலைவன் முன்பு கூறிய வன்புறைகளைக் கூறி நின் வருத்தத்தைத் தவிர்வாயாக என்று கூறுவதாகவும் மேலும் இத்தகைய இடங்களிலெல்லாம் தோழி பேசுவதாகவும் அமைவது இலக்கண மரபாகும்.

41. ayalōr āyiṉum akaṟci mēṟṟē.

Even if the lovers stay in elopement in a nearby house in the same village or town, it is considered as separation, the theme of pālaittiṇai.

42. talaivarum viḻuma nilaiyeṭuttu uraippiṉum
pōkkaṟ kaṇṇum viṭuttaṟ kaṇṇum
nīkkaliṉ vanta tammuṟu viḻumamum
vāymaiyum poymmaiyum kaṇṭōṟ cuṭṭit
tāynilai nōkkit talaippeyarttuk koḷḷiṉum
nōymikap perukit taṉṉeñcu kaḻulntōḷai
aḻinatatu kaḷaiyeṉa moḻinatatu kūṟi
vaṉpuṟai neruṅki vantataṉ tiṟattoṭu
eṉṟivai yellām iyalpuṟa nāṭiṉ
oṉṟit tōṉṟum tōḻi mēṉa.

The lady in league (tōḻi), the intimate friend of the heroine will speak in the following thematic contexts: to tell the hero of the plight of the heroine if he were not to elope with her; to request him to elope with her; to inform him that the ladylove had agreed to elope with him; to advise him to take good care of her during their elopement; to describe the sorrows of the household when the heroine leaves them; to make the hero realize the inconsistencies in his speech and conduct towards the heroine; to console the mother affected by the elopement of her daughter; to console the ladylove suffering from the pangs of separation by citing the promises and anecdotes of his constancy narrated by the lover earlier and in such other contexts related to this theme.

**43. பொழுதும் ஆறும் உட்குவரத் தோன்றி**
**வழுவின் ஆகிய குற்றம் காட்டலும்**
**ஊரது சார்பும் செல்லும் தேயமும்**
**ஆர்வ நெஞ்சமொடு செப்பிய வழியினும்**
**புணர்ந்தோர் பாங்கிற் புணர்ந்த நெஞ்சமொடு**
**அழிந்தெதிர் கூறி விடுப்பினும் ஆங்கத்**
**தாய்நிலை கண்டு தடுப்பினும் விடுப்பினும்**
**சேய்நிலைக்கு அகன்றோர் செலவினும் வரவினும்**
**கண்டோர் மொழிதல் கண்டது என்ப.**

தலைவியும் தலைவனும் உடன்போக்கு செல்லும் காலம் மற்றும் வழியினது பொருத்தமின்மையையும் கடுமையையும் கூறித் தங்கிச் செல்வதற்கு அருகிலேயே ஓர் ஊர் உண்டென்றும் தாங்கள் செல்லக்கருதும் தேயம் மிகவும் சேய்மைத்தென்றும் அவர்கள்பால் அன்புகொண்டு கூறுவதாகவும்; இணைந்து செல்லும் காதலர்பால் அருள் உள்ளம் கொண்டு இனி இதற்கு மேலும் செல்ல வேண்டாம். இவ்வூரிலேயே இருங்கள் அல்லது மீண்டு செல்லுங்கள் என்று அறிவுறுத்துவதாகவும்; தலைவியைத் தேடிச் சுரத்தின்கண் சென்ற செவிலியை மேற்கொண்டு செல்லவேண்டாம் எனத் தடுத்து அறிவுறுத்துவதாகவும்; அவர்கள் சென்றவழி இதுதான் என்று கூறிச் செவிலியைப் போகவிட்டதாகவும்; அவர்கள் நெடுந்தொலைவு உடன்போக்கில் சென்றதாகவும்; மீண்டு வந்ததாகவும் கூறுதல் போன்றன கண்டோர்க்குரிய கூற்றுநிகழ் இடங்களாகப் புலனெறி வழக்கில் காணப்படுகின்றன என்று கூறுவர்.

**44. ஒன்றாத் தமரினும் பருவத்தும் சுரத்தும்**
**ஒன்றிய மொழியொடு வலிப்பினும் விடுப்பினும்**
**இடைச்சுர மருங்கில் அவள்தமர் எய்திக்**
**கடைக் கெண்டு பெயர்தலின் கலங்கு அஞர் எய்திக்**
**கற்பொடு புணர்ந்த கௌவை உளப்பட**
**அப்பாற் பட்ட ஒரு திறத்தானும்,**
**நாளது சின்மையும் இளமையது அருமையும்**
**தாளாண் பக்கமும் தகுதியது அமைதியும்**
**இன்மையது இளிவும் உடைமையது உயர்ச்சியும்**

43. poḻutum āṟum uṭkuvarat tōṉṟi
valuviṉ akiya kuṟṟam kaṭṭalum
ūratu cārpum cellum tēyamum
ārva neñcamoṭu ceppiya vaḻiyiṉum
puṇarntōr pāṅkiṟ puṇarnta neñcamoṭu
aḻintetir kūṟi viṭuppiṉum āṅkat
tāynilai kaṇṭu taṭuppiṉum viṭuppiṉum
cēynilaikku akaṉṟōr celaviṉum varaviṉum
kaṇṭōr moḻital kaṇṭat eṉpa.

They (the grammarians) say that the literary tradition has witnessed the folloing thematic contexts in which kantor (those who meet the lovers on their way in elopement) speak; to discourage and advise out of compassion, the lovers in elopement to stay in the nearby place since their destination is far off, the sun is already set and their route is forbiddingly dangerous; to persuade them to give up their journey and stay in their village or return to their own; to forbid the foster mother who has set out in search of the pair from pursuing them further; to guide the foster mother by giving her the details of the route and mood of the lovers in elopement to describe the long journey taken by the pair in elopement; and to inform that the lovers have returned from the elopement.

44. oṉṟāt tamariṉum paruvattum curattum
oṉṟiya moḻiyoṭu valippiṉum viṭuppiṉum
iṭaiccura maruṅkil avaḷtamar eytik
kaṭaikkoṉṭu peyartaliṉ kalaṅkuañar eytik
kaṟpoṭu puṇarnta kauvai uḷappaṭa
appāṟ paṭṭa orutiṟat tāṉum.
nāḷatu ciṉmaiyum iḷamaiyatu arumaiyum
tāḷāṇ pakkamum takutiyatu amaitiyum
iṉmaiyatu iḷivum uṭaimaiyatu uyarcciyum

(10) அன்பினது அகலமும் அகற்சியது அருமையும்
ஒன்றாப் பொருள்வயின் ஊக்கிய பாலினும்,
வாயினும் கையினும் வகுத்த பக்கமோடு
ஊதியம் கருதிய ஒருதிறத் தானும்
புகழும் மானமும் எடுத்துவற் புறுத்தலும்.
தூது இடையிட்ட வகையி னானும்
ஆகித் தோன்றும் பாங்கோர் பாங்கினும்,
மூன்றன் பகுதியும் மண்டிலத்து அருமையும்
தோன்றல் சான்ற மாற்றோர் மேன்மையும்
பாசறைப் புலம்பலும், முடிந்த காலத்துப்
(20) பாகனொடு விரும்பிய வினைத்திற வகையினும்,
காவற் பாங்கின் ஆங்கோர் பக்கமும்,
பரத்தையின் அகற்சியின் பிரிந்தோட் குறுகி
இரத்தலும் தெளித்தலும் என இரு வகையோடு
உரைத்திற நாட்டம் கிழவோன் மேன.

தலைவியின் சுற்றம் வரைவு உடன்படாத போதும், தலைவியைச் சந்திப்பதற்குரிய பருவம் வாய்க்காதபோதும், செல்லுதற்குரிய கடுமையான சுரத்தின்வழிப் போகத்துணிந்து தக்க மொழியால் தலைவியை உடன்படுவித்து அவளுடன் உடன்போக்கு மேற்கொண்டவிடத்தும், ஆற்றியிருப்பாள் எனக் கருதித் தலைவியை உடன்கொண்டு பெயராது தான்மட்டும் தனியே செல்லுமிடத்தும், உடன்போக்கு செல்கின்ற வழியிடையே தன் சுற்றத்தார் வந்து தன்னை மீட்டுச் செல்வரோ எனக் கலங்கித் தலைவி கற்பொடு பொருந்திய ஒழுக்கத்தை வெளிப்படுத்துமிடத்தும் தலைவனுக்குக் கூற்று நிகழும்.

மானுடவாழ்க்கை நிலையற்றது என்பதையும், இன்பத்திற்குரிய இளமை விரைவில் கழிவது, மீண்டும் பெறல் அரிது என்பதையும், பொருள் தேடல் பெரும் முயற்சியையும் இடர்ப்பாடுகளையும் உடையது என்பதையும், பொருள்மேல் பற்று உயர்ந்தோர்க்குத் தகாது என்பதையும், வறுமையால் விளையும் இகழ்ச்சி காரணமாகத் தோன்றும் கீழ்மையுணர்வையும், பொருள் உடையார்க்கு மேன்மேலும் அதன்மேல் பற்று செல்லுதல் தகாது என்பதையும், தனக்குச் சிறந்தார் (தலைவி) மாட்டு அன்பு எப்போதும் உடனிருத்தலை வேண்டுவது என்பதையும், தலைவியைப் பிரிந்திருப்பது மிகவும் துன்பமானது என்பதையும் ஆகிய இந்த எட்டினையும் - பொருட்படுத்தாமல்

(10) aṉpiṉatu akalamum akaṟciyatu arumaiyum
oṉṟāp poruḷvayin ūkkiya pāliṉum,
vāyinum kaiyiṉum vakutta pakkamōṭu
ūtiyam karutiya orutiṟat tāṉum
pukaḻum māṉamum eṭuttuvaṟ puṟuttalum
tūtu iṭaiyiṭṭa vakaiyi ṉāṉum,
ākit tōṉṟum pāṅkōr pāṅkinum,
mūṉṟaṉ pakutiyum maṇṭilattu arumaiyum
tōṉṟal cāṉṟa māṟṟōr mēṉmaiyum
pācaṟaip pulampalum, muṭinta kālattup
(20) pākaṉoṭu virumpiya viṉaittiṟa vakaiyiṉum
kāvaṟ pāṅkiṉ āṅkōr pakkamum.
parattaiyiṅ, akaṟciyiṉ pirintōṭ kuṟuki
irattalum teḷittalum eṉa iru vakaiyōṭu
uraittiṟa nāṭṭam kiḻavōṉ mēṉa.

The hero (lover) will speak on the following occasions:

When the parents of the heroine (ladylove) would not agree to his marriage with her, when there were no more chances of meeting her; when he decides to elope with her to a distant place along the desert like arid and eerie tract; when he leaves alone without taking the heroine with him; when the ladylove resolves to go with him expressing her sentiment of chasity, when she is scared that her relatives may threaten, during their elopement, to take her back home forcefully.

When he resolves to part from his ladylove in order to earn money and actually when he leaves in pursuit of wealth ignoring the following aspects of life, love and wealth; the span of life is very short; youth is evanescent and irretrievable; pursuit of wealth entails a lot of difficulties and dangers; desire for wealth not desirable; despondency issuing from a sense of misery caused by poverty; it is unbecoming for the rich to be avaricious; depth of love does not brook separation; separation from one's ladylove is unbearable.

புறக்கணித்துப் பொருள் தேடச் செல்ல நினைக்கும் போதும், செல்லும் போதும் தலைவனுக்குக் கூற்று நிகழும்.

மொழிவழி கற்கும் நூற் பயிற்சியின் பொருட்டும், கைவழி கற்கும் சிற்பம், படைக்கலப் பயிற்சி போன்றவற்றிற்காகவும் பிரியும் ஓதற் பிரிவினிடத்தும், இவற்றிற்காகப் பிரிந்து செல்லுதலால் விளையும் புகழையும், இவற்றின்மேற் செல்லாதவிடத்துத் தனக்கு உண்டாகும் குற்றத்தையும் தலைவிக்கும் தோழிக்கும் விளக்கிக் கூறுமிடத்தும் தலைவனுக்குக் கூற்று நிகழும்.

இருபெரு வேந்தர்க்கிடையே சந்து செய்வதற்காகத் தூதாகிச் செல்லும் போதும், தனக்கு நட்பாயினாருக்குத் துணையாகிச் செல்லும் நிலையிலும், தன்வலி, துணைவலி, வினைவலி என்னும் மூன்றுவகை[21] வலிமையாலும், எளிதிற் பற்ற இயலாத அரண்களை உடையது தம் நாடு என்னும் கருத்தானும் செருக்கு மீதூர்ந்து நிற்கும் பகைவர் மேல் செல்லுமிடத்தும் தலைவனுக்குக் கூற்று நிகழும். மேற்கூறிய காரணங்களுக்காக, அதாவது, தூதின் மேற் செல்லும்போதும், துணையாயினார்க்காகப் பிரியும்போதும், தன்பகைமேற் செல்லும் போதும் பாசறையின்கண் தங்க நேருங்கால் தனிமையில் புலம்புமிடத்தும் தலைவனுக்குக் கூற்று நிகழும் என்பதாகும்.

தான் மேற்கொண்ட வினை முடிவுற்ற பின்னர்த் தன்வினைத் திறத்தை விளக்கிப் பாசறையிலும், மீண்டு செல்லும் வழியிலும் பாகனொடும், ஒரோவழித் தன் நெஞ்சினொடும் தலைவன் பேசுவதாகக் கூற்றுகள் நிகழும். பல்வேறு வகையான காவலுக்காகப் பிரியுமிடத்தும், பரத்தையின்பால் பிரிந்துசென்ற தலைவன் தலைவியிடம் திரும்பி வந்து தன் குற்றத்தைப் பொறுத்துக் கொள்ளுமாறு வேண்டுமிடத்தும் தலைவியைத் தெளிவிக்குமிடத்தும் ஆகிய மேற்சுட்டிய இடங்களிலெல்லாம் தலைமகனுக்குக் கூற்றுகள் நிகழும்.

---

21. "மூன்றன் பகுதி" என்னும் தொடருக்கு இளம்பூரணர், நச்சினார்க்கினியர், ச.சோ. பாரதியார் ஆகிய மூவரும் மூவகையாகப் பொருள் கொள்கின்றனர். இளம்பூரணரை அடியொற்றி மேலே கண்ட உரை தரப்பட்டுள்ளது.

When the hero intends to go on studies and to equip himself with proper training in fine arts and martial arts; when he dilates to the heroine upon the benefits of such education and training and upon the drawback of not acquiring them in the fullness of time.

When he goes on duty as an ambassador; when he goes on an expedition in support of his friends, when he goes on against his enemies who pride over their own strength, that of their allies and over the high degree of viability of the tast ahead,[22] and over the inaccessibility of their forts and castles; when he feels lonely in the war camp on account of his separation from his wife during such occasions.

When, after accomplishing his mission, he explains about it to his charioteer in his warcamp or on his way back and when he asks him to go faster, when he sets out on duties regarding maintaining law and order in the country or regarding the supervision of temples and other places of worship.

When, on his return from his stay with the prostitutes, he seeks pardon of his wife and pacifies her finally.

These are all the occasions on which the hero is portrayed as speaking with others or to himself at times.

---

22. the phrase "munran pakuti" in line 17 is severally interpreted by the commentators from Ilampuranar through S.S. Bharatiyar. The interpretation given above is based upon that of Ilampuranar.

**45. எஞ்சி யோர்க்கும் எஞ்சுதல் இலவே.**

இதுவரை கூறப்பட்ட நற்றாய், கண்டோர், தோழி தலைவன் ஆகியோரைத் தவிரத் தலைமகள், பாங்கன், செவிலி, பார்ப்பார், பாணர், கூத்தர் முதலியோரும் கூற்றுகள் நிகழ்த்துதற்கு உரியர்.[23]

**46. நிகழ்ந்தது நினைத்தற்கு ஏதுவும் ஆகும்.**

முன்னர் நடந்த நிகழ்ச்சி ஒன்றைப் பின்னர் நினைவுக்குக் கொண்டுவந்து சிந்திப்பதாகவும் தலைவனுக்குக் கூற்று நிகழ்தல் உண்டு. இத்தகைய கூற்று பிரிவு பற்றியதாக அமையும்.

**47. நிகழ்ந்தது கூறி நிலையலும் திணையே.**

முன்பு நடந்த நிகழ்ச்சி ஒன்றைப் பின்னர் எடுத்துக் கூறிப் பிரிவு மேற்கொள்ளாமல் தலைவன் தவிர்த்தலும் பாலைத் திணைக்குரியதாகும்.

**48. மரபுநிலை திரியா மாட்சிய ஆகி
விரவும் பொருளும் விரவும் என்ப.**

அகத்திணை இலக்கிய மரபிலிருந்து மாறுபடாத தன்மையுடையனவாய் வந்து விரவத் தக்கனவும் அக மாந்தர் கூற்றாக விரவி வரும் என்பர்.

**49. உள்ளுறை உவமம் ஏனை உவமமெனத்
தள்ளாதாகும் திணையுணர் வகையே.**

உள்ளுறை உவமம், வெளிப்படை உவமம் ஆகிய இரண்டும் தப்பாமல் திணையுணர்தற்குரிய கருவிகளாகும்.

---

23. தலைவி கூற்று பற்றிய நூற்பா காலந்தோறும் ஏடு பெயர்த்து எழுதுவோரால் விடப்பட்டிருக்கலாம் என்ற இளம்பூரணர் கூற்று சிந்தித்தற்குரியது. இவ்வியலின் முதல் அடிக்குறிப்பைக் காண்க.

45. eñci yōrkkum eñcutal ilavē.

Akram characters, other than those mentioned above, like the ladylove, foster-mother, male companion, bards etc., are also eligible to speak in appropriate contexts.[24]

46. nikal̲ntatu nin̲aittar̲ku ētuvum ākum

An earlier incident may be later recalled and this may cause an occasion for speech by the hero.

47. nikal̲ntatu kūr̲i nilaiyalum tiṇaiyē.

Mentioning an earlier occasion and giving up the idea of parting from his ladylove also belong to pālaittiṇai.

48. marapunilai tiriyā māṭciya āki
viravum poruḷum viravum en̲pa.

They say that certain other things may also get included as occasions or contexts of speaking by the Akam characters provided such things do not contravene the Akam literary tradition.

49. uḷḷur̲ai uvamam ēn̲ai uvamamēn̲at
taḷḷā tākum tiṇaiyuṇar vakaiyē.

Two kinds of simile namely, the suggestive and the clear are definite means of identifying the tiṇai or the aspects of love dealt with in a poem.

---

24. The absence of a separate cutra for the ladylove is explained by Ilampuranar as caused by the negligence of the scribes who copied the age old manuscripts through the centuries. Coming from the first commentator this note is very significant. See the second footnote at the head of this chapter.

**50. உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலம் எனக்**
**கொள்ளும் என்ப குறிஅறிந் தோரே.**

கருப்பொருள்களுள் தெய்வம் நீங்கலாக ஏனையவற்றை நிலைக்களனாகக் கொண்டு உள்ளுறை உவமம் வரும் என்பர் இலக்கணம் அறிந்தோர்.

**51. உள்ளுறுத்து இதனோடு ஒத்துப்பொருள் முடிகென**
**உள்ளுறுத்து உரைப்பதே உள்ளுறை உவமம்.**

தான் புலப்படுத்தக் கருதிய பொருளைக் கூறப்பட்ட உவமப் பொருளோடு சார்த்தி உணருமாறு உள்ளுறுத்திக் கூறுவதே உள்ளுறை உவமமாகும்.

**52. ஏனை உவமம் தானுணர் வகைத்தே.**

வெளிப்படை உவமம், உய்த்துணர வேண்டிய அவசியமின்றி, உவமம் இது, பொருள் இது எனத் தெளிவாகத் தானே உணர்த்தும் தன்மையது.

**53. காமம் சாலா இளமை யோள்வயின்**
**ஏமம் சாலா இடும்பை எய்தி**
**நன்மையும் தீமையும் என்றுஇரு திறத்தான்**
**தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்துச்**
**சொல்எதிர் பெறாஅன் சொல்லி இன்புறல்**
**புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே.**

காமம் நிரம்பாத இளையவளிடத்து அவளையன்றி வேறு மருந்தில்லாத காம நோய்வயப்பட்டுத் தன்னைப் புகழ்ந்தும், தனக்கு அருளாமையால் அவளையும் அவளது தமரையும் பழித்தும் அவளொடு சொல்லாடி எதிர் மாற்றம் பெறாதவனாய்த் தனக்குத் தானே சொல்லி இன்புறும் ஒழுக்கம் கைக்கிளையின்பாற் படும்.[25]

---

25. *இனி, 'நன்மையும் தீமையும்', என்பதற்கு, 'அவளைப் புணர்வதனால் தனக்கு விளையும் மகிழ்ச்சியையும், புணராவழி அவளால் தனக்கு உண்டாகும் வருத்தத்தையும் எடுத்துக்கூறி" எனப் பொருள் கொள்ளலும் உண்டு.*

கைக்கிளையாவது ஒருபாற் கேண்மை, இது தலைவன்மாட்டு மட்டுமே பொருந்தித் தோன்றும். தலைவிமாட்டுக் கைக்கிளைக் குறிப்பு தோன்றுவதாகக் கூறும் அக இலக்கிய மரபு தமிழில் இல்லை.

50. uḷḷuṟai teyvam oḻintatai nilameṉak
koḷḷum eṉpa kuṟiaṟin tōrē

Both the vehicle and the tenor of the suggestive simile shall be drawn on any of the karupporuḷ except the deities listed above in cūtra twenty.

51. uḷḷuṟuttu itaṉōṭu ottupporuḷ muṭikeṉa
uḷḷuṟttu uraippatē uḷḷuṟai uvamam.

The suggestive simile is that which is structured in such a way as to enable the reader to infer the intended meaning from the described simile.

52. ēṉai uvamam tāṉuṇar vakaittē.

The clear simile is that wherein the vehicle obviously refers to the tenor, without entailing any inference.

53. kāmam cālā iḷamai yōḷvayiṉ
ēmam cālā ïṭumpai eyti
naṉmaiyum tïmaiyum eṉṟuiru tiṟattāṉ
taṉṉoṭum avaḷoṭum tarukkiya puṇarttuc
coletir peṟāṉ colli iṉpuṟal
pullit tōṉṟum kaikkiḷaik kuṟippē.

Kaikkiḷait tinai, the first division of Akam poetry has the following aspects: the hero approaches a girl who is not emotionally mature enough to respond to his inflicting and incurable passion of love; tries to build up a conversation with her describing his distress, and her indifference but does not get any response yet indulges himself in such a talk.[26]

26. Such an aspect of love is called kaikkilai, which may be termed as unreciprocated love or love unrequited. Only the hero is portrayed as indulging in such an aspect of love. There is no literary convention in Tamil Akam tradition portraying a lady as indulging in kaikkiḷai aspect of love.

**54. ஏறிய மடல்திறம் இளமை தீர்திறம்**
**தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்**
**மிக்க காமத்து மிடலொடு தொகைஇ**
**செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே.**

மடலூர்வேன் என்று கூறுமளவில் நில்லாமல் மடலேறும் பாங்கும், இளமை நீங்கிய அகவை நிலையும், தெளியமாட்டாத அளவிற்குக் காமம் முதிர்ந்த பாங்கும், கரைகடந்த காமத்தால் தன்னொடு மேவோம் என்பாரையும் வலிதிற் புல்லும் பாங்கும் ஆகிய நான்கும் பெருந்திணைக்குரிய பண்புகளாகும்.[27]

**55. முன்னைய நான்கும் முன்னதற் கென்ப.**[29]

முன்னர்க் கூறப்பட்ட நான்கும் முன்னதற்குரிய என்று கூறுவர்.

---

27. (அ) இவற்றுள் மடலூர்தலும், வலிதிற் புல்லுதலும் தலைமகனுக்கே உரியவை. இளமை தீர்திறமும், தேறுதல் ஒழிந்த காமமும் இருபாலார்க்கும் உரியவை. மகளிர் மடலேறும் மரபு தமிழில் இல்லை. ஆடவர் மடலேறுதலும் அருகிய வழக்கே.

(ஆ) தமர் வரைவு உடன்படாதபோது, பனங்கருக்காற் செய்த குதிரையின் மீது ஏறி நாற்சந்தியில் நின்று தன் களவுக் காதலை எல்லோர்க்கும் புலப்படுத்தி வரைவுக்குத் தமரை உடன்படச் செய்ய மேற்கொள்ளும் முயற்சியை மடலேறுதல் என்பர்.

29. நேரடியாகப் பொருள் காண முடியாத நூற்பாக்களுள் இதுவும் ஒன்று.

பெருந்திணைக் குறிப்புகளாகக் கூறப்பட்ட நான்கிற்கும் முற்பட்ட நிலைமைகளாகிய ஏறாமடல்திறம், இளமை தீராத்திறம், தேறுதல் ஒழிந்த காமத்து மிகாத்திறம், மிக்க காமத்தின் மாறாகாத் திறம் என்ற நான்கும் முற்கூறப்பட்ட கைக்கிளைக்கு உரியனவாம் என்ப என்று இளம்பூரணர் இந்நூற்பாவிற்குப் பொருள் காண்கிறார். இயற்கைப் புணர்ச்சிக்கு முன் நிகழ்ந்த காட்சி, ஐயம், தெரிதல், தேறல் ஆகிய நான்கும் முற்கூறிய கைக்கிளையாவதற்கு உரிய என்று கூறுவர் ஆசிரியர் என்று நச்சினார்க்கினியர் உரை காண்கிறார். கைக்கிளை, பெருந்திணை பற்றிய நூற்பாக்களுக்கு முன்னால் கூறப்பட்ட நிகழ்ந்தது நினைத்தல், நிகழ்ந்தது கூறி நிலையல், மரபுநிலை திரியாது விரவும் பொருள் விரவல், உள்ளுறை உவமம் திணையுணர் வகையாதல் என்ற நான்கும் கைக்கிளை, பெருந்திணை இரண்டனுள் முற்கூறிய கைக்கிளைக்காகும் என்று கூறுவர் புலவர் என்று ச.சோ. பாரதியார் உரை காண்கிறார். இவற்றுள் இளம்பூரணர் உரை செம்மையானது என இக்காலக் காண்டிகையுரையாசிரியர் பாலசுந்தரனாரும், நச்சினார்க்கினியர் உரை பொருத்தமானது எனத் தொல்காப்பிய உரைவள ஆசிரியர் சிவலிங்கனாரும் கருதுகின்றனர். மூன்றாவது உரை பொருத்தமற்றது என்பது பாலசுந்தரனார் கருத்து.

54. ēṟiya maṭaltiṟam iḷamai tīrtiṟam
tēṟutal oḻinta kāmattu mikutiṟam
mikka kāmattu miṭaloṭu tokaii
ceppiya nāṉkum peruntiṇaik kuṟippē.

The following four are the aspects of Peruntinai, the seventh division of Akam poetry: the act of mounting the horse made of palmstems; being in a state of past youth; being head over heels in lust beyond control; and forcefully taking a nonchalant lady owing to his overflowing passion.[28]

55. muṉṉaiya nāṉkum muṉṉataṟ keṉpa.[30]

They say that the former four belong to the former.

---

28. (a) Of the four, the aspects of mounting the palmyrahorse and that of forcefully taking a lady are ascribed only to the hero. The other two are common to both the lovers. Tamil tradition does not depict a lady in love as mounting the palm horse. In the case of the hero too, it is rarely resorted to.

(b) When the parents of the ladylove refuse to give her in marriage, the hero resorts to mounting the palmhorse to declare his premarital clandestine love to the public with a view to forcing them to agree to their marriage.

30. This is one of the cūtras which tease us out of thought. Iḷampūraṇar is of the opinion that the stage preceding the four aspects of peruntiṇai belong to kaikkiḷai. Nacciṉārkkiṉiyar holds that the four stages preceding the first union of the lovers belong to kaikkiḷai. S.S. Bharatiyār, the modern commentator refutes both the above interpretations and holds that the four cutras preceding those on kaikkiḷai and peruntiṇai belong to kaikkiḷai. The recent commentator Balasundaram agrees with Iḷampūraṉār while the variorum editor Sivalinganar with Naccinārkkiṉiyar. The objections raised by Bharatiyār to the Interpretations of Iḷampūraṇar and Naccinārkkiṉiyar hold good. His interpretation seems however irrelevant and far fetched besides the fact that there are six cūtras which precede those on kaikkiḷai and peruntiṇai, not four as he takes them to be. Thus this cūtra remains inscrutable if not enigmatic as it defies our attempts to arrive at in indisputable intrepretation.

**56. நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்**
**பாடல் சான்ற புலனெறி வழக்கம்**
**கலியே பரிபாட்டு ஆயிரு பாவினும்**
**உரிய தாகும் என்மனார் புலவர்.**

புனைந்துரையும் உலகியல் வழக்கும்[31] கொண்டு இயற்றப்பெறும் அகப்பொருள் இலக்கியம் கலிப்பா, பரிபாட்டு ஆகிய இரண்டு பாவகைகளுக்கும் உரியதாகும் என்று கூறுவர் இலக்கணப் புலவர்.

**57. மக்கள் நுதலிய அகன்ஐந் திணையும்**
**சுட்டி ஒருவர்ப் பெயர்கொளப் பெறாஅர்.**

முல்லை முதலாகிய ஐந்திணைக்கும் உரிய திணைநிலை மக்களை அகமாந்தர்களாகக் கொண்டு புலனெறி வழக்கம் செய்யுமிடத்து, அவ்வத் திணைசார்ந்த நிலப்பெயரானல்லது இயற்பெயரால் ஒருவரும் (தலைவன் முதலானவர்களுள் யாரும்) சுட்டி வழங்கப்படார்.

---

*இளம்பூரணர், நச்சினார்க்கினியர் ஆகியோர் உரைகளைப் பற்றிப் பாரதியார் எழுப்பும் தடைகள் பொருத்தமானவையாகத் தோன்றுகின்றன. எனினும் பாரதியார் கூறும் உரை பொருத்தமானதாகவோ தேவையானதாகவோ தோன்றவில்லை. அவர் கூற்றுப்படி நோக்கினும், கைக்கிளை, பெருந்திணைகளுக்கு முன்னால் ஆறு நூற்பாக்கள் உள்ளன. அவற்றுள் நான்கினை மட்டும் விதந்து கொள்ள வேண்டிய காரணம் விளங்கவில்லை. எனவே ஐயத்திற்கிடமற்ற உரைகாணக் கூடியதாக இந்த நூற்பா அமையவில்லை.*

31. *(அ) நேருக்கு நேர் பேசுவது நாடகவழக்கு; ஒருவர் ஒருவரிடம் கூறுவதாக அமைவது உலகியல் வழக்கு; இந்த இருவகைகளையும் உடையதாக அமையும் அகப்பொருள் இலக்கியம் கலிப்பா, பரிபாடல் என்னும் இருவகைப் பாக்களிலும் பாடுவதற்கு உரியதாகும் என்று இந்நூற்பாவிற்குப் பொருள் காண்பர் சிவலிங்கனார்.*

*(ஆ) பாடுபொருள், பாடல்வடிவம், என்னும் இரு கூறுகளுள் முன்னதை முன்னிரு அடிகளும் பின்னதைப் பின்னிரு அடிகளும் உணர்த்துவதாக இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் கொள்ள, நான்கு அடிகளும் பாடல் வடிவத்தையே கூறுவதாகச் சிவலிங்கனார் கொள்ளுகிறார்.*

56. nāṭaka vaḻakkiṉum ulakiyal vaḻakkiṉum
pāṭal cāṉṟa pulaṉeṟi vaḻakkam
kiliyē paripāṭṭu āyiru pāviṉum
uriya tākum eṉmaṉār pulavar.

Akam poetry which draws its sustenance from fiction and reality[32] has kalippā and paripāṭal as its appropriate metres, as per the authorities on grammar (poetics).

57. makkaḷ nutaliya akaṉain tiṇaiyum
cuṭṭi oruvarp peyarkoḷap peṟāar.

As a convention of Akam poetry, none of the human characters belonging to any of the five tinais from mullai through neytal, would be mentioned by his or her proper name.

---

32. (a) Sivalinganar takes "nāṭaka vaḻakku" to mean "dramatic dialogue" and "ulakiyal vaḻakku" to mean "narrative mode" and interprets that kalippā and paripātal which are suitable for dialogue and narration together, are the appropriate metres for Akam poetry.

(b) Both Iḻampūraṇar and Nacciṉārkkiṉiyar take the first two lines of the verse to refer to the subject matter of Akam poetry and the last two lines to the metrical forms thereof, while Sivalinganar takes the whole verse to refer to the mertircal forms of Akam poetry.

**58. புறத்திணை மருங்கின் பொருந்தின் அல்லது
அகத்திணை மருங்கின் அளவுதல் இலவே.**

ஒருவரை இயற்பெயர் சுட்டி வழங்குதல் புறத்திணைப் பகுதியில் பொருந்தி வருமே தவிர, அகத்திணைப் பகுதியில் பொருந்தி வருதல் இல்லை.[33]

---

33. *அதாவது இயற்பெயரால் ஒருவரைச் சுட்டும் மரபு கைக்கிளை, பெருந்திணை உள்ளிட்ட அகப்பொருள் வழக்காற்றில் இல்லை; அகப்பொருள் இலக்கியம் ஒருவரைச் சாராது மானுடப் பொதுமையாக வரும் என்பது கருத்து. புறத்திணையுள்ளும் காமம் பொருளாக வரும் பாடாண்பாட்டின்கண் மட்டுமே ஒருவரது இயற் பெயர் சுட்டப்பெறும் மரபு உண்டு. மற்ற இடங்களில் குடிப்பெயரால் வழங்குதலேயன்றி இயற் பெயர் சுட்டும் மரபு அங்கும் இல்லை.*

58. Puṟattiṇai maruṅkin poruntiṉ allatu
akattiṇai maruṅkiṉ aḻavutal ilavē.

Use of proper names would be appropriate in Puṟattiṇai but not so in Akattiṇai.[34]

34. This cūtra modifies the purport of the earlier cūtra, apart from laying down the norm for puṟattiṇai. As such, it stands to mean that proper names are not to be used even in kaikkiḷai and peruntiṇai. Even in purattiṇai proper names are used only in themes like Pāṭāṇtiṉai. Elsewhere only clanish names are used and not proper names.

# புறத்திணை இயல்[1]

59. அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர்
புறத்திணை இலக்கணம் திறப்படக் கிளப்பின்
வெட்சி தானே குறிஞ்சியது புறனே
உட்குவரத் தோன்றும் ஈரேழ் துறைத்தே.[3]

அகப்பொருள் இலக்கியம் பற்றிய முறைமைகளைக் குற்றமற உணர்ந்தவர்கள் புறப்பொருள் இலக்கியம் குறித்த இலக்கணக் கூறுகளைப் பாகுபடுத்திக் கூற முற்படின், அகப்பொருள் சார்ந்த குறிஞ்சித் திணைக்குப் புறனாய வெட்சித்திணை அச்சமுறச் செய்யும் பதினான்கு துறைகளை உடையது என்று கூறுவர்.[5]

---

1. ஒருவன்-ஒருத்தி என்னும் அகவொழுக்கத்திலிருந்து வேறுபட்ட மானுட ஒழுகலாறுகளை இலக்கியப்படுத்தும் முறைமைகளைக் கூறும் இலக்கணப்பகுதி புறத்திணை இயல் எனப் பெயர்பெற்றது. தலைவன் தலைவியரது இன்ப ஒழுக்கம் தவிர்ந்த ஏனைய(வீடு, சமுதாயம், நாடு எனப் பாகுபடும்) எல்லா மானுட ஒழுகலாறுகளும் புறம் எனக்கொண்டு இலக்கியம் படைப்பது பண்டைத் தமிழர்தம் பொருளிலக்கண மரபாகும்.

3. புறத்திணையியலின் தலைச் சூத்திரமாக அமைந்துள்ள இந்த நூற்பாவும் சிதைவுக்கு உட்பட்டதோ என்று கருதத் தோன்றுகிறது. களவு கற்பு, மெய்ப்பாடு, உவமை பற்றிய இயல்களின் தலைச்சூத்திரங்களை நோக்க. இந்த இயலின் தலைச்சூத்திரமும் புறத்திணை என்றால் இன்னது என்று வரையறுத்துக் கூறவேண்டும். அகத்திணையியலின் தலைச்சூத்திரமும் இத்தகைய வரையறையைக் கூறவில்லை என்பது முன்னரே கூறப்பட்டது. மேலும் அகத்திணையியலின் முதற் சூத்திரமாவது அகத்திணை ஏழு வகைப்படும் என்று கூறுகிறது. இச்சூத்திரம் அவ்வாறு திணைப்பாகுபாட்டையும் கூறவில்லை. இந்த இயலின் முதற்சூத்திரம் சிதைந்த நிலையில் அடுத்த சூத்திரத்தோடு சேர்த்து ஒரே சூத்திரமாக ஏடெழுதுவோரால் பெயர்த்தெழுதப்பட்டதோ என்னும் ஐயம் எழுகிறது. "எஞ்சியோர்க்கும் எஞ்சுதல் இலவே" என்னும் அகத்திணையியல் சூத்திர விளக்கஉரையில் இளம்பூரணர் குறிப்பிடும் ஐயத்தை நோக்க இக்கருத்து வலுப்பெறுகிறது. பி.சா. சுப்பிரமணிய சாஸ்திரியார் தம்முடைய பொருளதிகார ஆங்கில மொழிபெயர்ப்பில் முன்னரே இதனைச் சுட்டியுள்ளதும் சிந்திக்கத்தக்கது.

5. (அ) "அரில்தப உணர்ந்தோர் . . . கிளப்பின்" என்று முடிக்காமல், "உணர்ந்தோர் (கூறிய) புறத்திணை இலக்கணத்தைக் கூறின் என்று இயைத்துப் பொருள் கொள்வர் நச்சினார்க்கினியர்.

(ஆ) இந் நூற்பாவில் இடம்பெறும் புறனே என்னும் சொல்லுக்கு உரையாசிரியர் அனைவரும் "புறம்" என்றே பொருள் கூறுகின்றனர். "புறம்" என்னும் சொல்லை எந்தப் பொருளில் இவர்கள் வழங்குகின்றனர் என்று அறிய இயலவில்லை. வெளிப்படைச் சொல்லெனக் கருதுவார் போலும். அகத்திணைகளும் புறத்திணைகளும் ஒன்றுக்கொன்று எவ்வாறு புறனாகின்றன என்பதை

# PURATTINAI IYAL[2]

59. akkattiṇai maruṅkiṉ ariltapa uṇarntōr
puṟattiṇai ilakkaṇam tiṟppaṭak kiḷappiṉ
veṭci tāṉē kuṟiñciyatu puṟaṉē
uṭkuvarat tōṉṟum īrēḻ tuṟaittē[4]

When experts in the poetics of Akam poetry deal with that of Puṟam poetry (they hold) that veṭci is the non-Akam parallel to kuṟiñci and that it has fourteen aspects of subthemes of frightful nature.[6]

---

2. According to ancient Tamil poetics, Akam poetry deals with the physical union of the lovers, together with the aspects which contribute to or result from such a union. It is not concerned with their other activities whether domestic, social or professional all of which are dealt with in Puṟam poetry. Aesthetically speaking, Akam deals with an idealised form of love, while Puṟam deals with all the other aspects and emotions which inform the human life.

4. This cūtra also bristles with the problem of questionable authenticity. With reference to the first cutras of kaḷaviyal. karpiyal, meyppāṭṭiyaḷ, uvamaviyal and ceyyuḷiyal, one would expect that the first cutra of this chapter also defines its theme and enumerates the divisions there of. But it does neither. In all probability, the portion of the first cutra from the third line onwards might have been illegible and corrupt beyond correction or conjecture and the scribe would have telescoped the next cutra into the damaged portion and come with an improvised one in the present form. P.S.Sastri, the earliest known translator of Tolkāppiyam has already drawn our attention to this inference and Iḷampuranar, the first commentator on Tolkāppiyam has also drawn our attention to such a scribal error, in his commentary on the cutra, "enciyōrkkum eñcutal ilave".

6. (a) Nacciṉārkkiṉiyar brings in "Tolkāppiyar in first person" as the subject of the verb. 'kilappin' and glosses, "if we classify the grammar of Puṟattiṇai as described by the experts of Akattiṇai....", to get over the maze caused by the existing corrupt form of this cutra.

   b) The term Puṟaṉē in this cutra defies an exact translation into English. Neither the commentators provide a gloss on this word nor the translators have translated this word. S. Illakkuvanar's use of the term, "counterpart" does not solve the issue, either. The commentators vie with each other to show how both the

விளக்குமிடத்து எல்லா உரையாசிரியர்களும் முதல், கரு, உரிப்பொருள்களால் அவை எவ்வாறு ஒத்த தன்மையினவாய் உள்ளன என்று எடுத்துக்காட்டுவதில் ஆர்வம் செலுத்துகின்றனர். ஆயின் இவ்வளவு ஒற்றுமை உடைய இவை எவ்வாறு ஒன்றுக்கொன்று புறனாகின்றன என்னும் வினாவிற்கு உரைகளில் விடை காண இயலவில்லை.

அகப்பொருளை ஏழு திணைகளாக வகுத்துக் கொண்ட மரபுக்கேற்ப அவற்றிற்கு இணையாகப் புறப்பொருளையும் ஏழு திணைகளாகத் தொல்காப்பியர் வகுத்துக் கொண்டார் என்பது, “அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர். புறத்திணை இலக்கணம் திறப்படக் கிளப்பின்” எனவரும் புறத்திணை இயலின் தலைச் சூத்திரத்தால் விளங்குகிறது. வெட்சி முதலாயின புறத்திணைகள் என்பதும் வெள்ளிடை மலை. எனினும் வெட்சி முதலாயின குறிஞ்சி முதலாயினவற்றிற்கு ஒவ்வொன்றும் முறையே புறனாவது எவ்வாறு என்பதைத் தொல்காப்பியர் எங்கும் வெளிப்படையாகக் கூறவில்லை.

எனவே புறனே என்னும் சொல்லால் தொல்காப்பியர் தம் கவிதையியலின் எந்த அமைப்பை அல்லது கூறைச் சுட்டுகிறார் என்பது விளங்கவில்லை.

Akam and Puṟam tiṇais parallel closely in terms of Mutal, karu and *uripporul*. Hence the present translator has chosen to translate the term tentatively as "non-Akam parallel", eventhough "anithesis" is also a probable equivalent of *Puṟaṉ* in view of the fact that the themes of the respective *tiṇais* are contrastive, besides the form and techniques.

What the author of *Tolkāppiyam* means by yoking together the aspects of *Akam* and *Puṟam* through such contrast and comparison is, however, beyond our grasp at the present state of our knowledge.

**60. வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவின்
ஆதந்து ஓம்பல் மேவற்று ஆகும்.**

அரசனது ஆணையால் ஏவப்பெற்ற எல்லைப்புறப் பாசறை வீரர்கள் பகைவர் நாட்டினுள் நுழைந்து அவர்தம் ஆநிரைகளைக் களவாடித் தம் நாட்டுக்குள் கொணர்ந்து பாதுகாத்து வைத்திருத்தலைப் பாடுபொருளாக உடையது வெட்சித் திணையாகும்.

**61. படைஇயங்கு அரவம் பாக்கத்து விரிச்சி
புடைகெடப் போகிய செலவே புடைகெட
ஒற்றின் ஆகிய வேயே வேய்ப்புறம்
முற்றின் ஆகிய புறத்து இறை முற்றிய
ஊர்கொலை ஆகோள் பூசல் மாற்றே
நோயின்று உய்த்தல் நுவல்வழித் தோற்றம்
தந்துநிறை பாதீடு உண்டாட்டுக் கொடையென
வந்த ஈரேழ் வகையிற்று ஆகும்.**

1. பகைவர் நாட்டுப் பசுக்கூட்டங்களைக் கவர்ந்து வரச்செல்லும் படைவீரரின் இயக்கத்தினால் எழும் ஆரவார ஒலி;
2. வெட்சிமறவர் தம் ஊர்க்கண் நொதுமலர் கூறும் சொற்களைத் தமக்கேற்ற நல் நிமித்தமாகக் (விரிச்சி) கொள்ளுதல்.
3. தம்மொடு கலந்து நிற்கும் மாற்றரசரின் ஒற்றர்கள் அறியாதவாறு வெட்சி மறவர் செல்லுதல்;
4. மாற்றரசரின் ஒற்றர் அறியாதவாறு அவர்தம் ஆநிரை உள்ள நிலையைத் தம் ஒற்றரால் அறிந்த உளவு;
5. உளவால் அறிந்த இடத்தினைச் சூழ்ந்து தக்க தருணம் பார்த்துக் காத்திருத்தல்;
6. அவ்வாறு சூழப்பட்ட ஆநிரைக்கு உரிய பகைவீரரை அவர்கள் எதிர்த்த வழி அழித்தல்;
7. பகைவரின் பசுக்கூட்டங்களைக் கவர்ந்து கொள்ளுதல்;
8. கவர்ந்த ஆநிரையை மீட்கவரும் பகைவீரருடன் ஏற்படும் பூசலைத் தவிர்த்து மீளுதல்;
9. கவர்ந்த பசுக்கூட்டங்களுக்கு வருத்தம் நேராதவாறு கொண்டு வருதல்;
10. தம்மவர் புகழ்ந்தரைக்குமாறு நிரை கவர்ந்தார் திரும்பி வருதல்;
11. கவர்ந்த நிரையைத் தம் ஊரகத்துக் கொண்டு வந்து நிறுத்துதல்;
12. கொண்டுவந்த பசுக் கூட்டத்தைப் பங்கிடுதல்;
13. நிரைகவர்ந்து பாதீடு பெற்றோர் வெற்றி மகிழ்ச்சியால் உண்டு களித்தல்;
14. தாம் பெற்ற ஆநிரையைப் பிறர்க்கும் மகிழ்ந்து கொடுத்தல்

ஆகிய பதினான்கு துறைகளை உடையது வெட்சித்திணை.

60. Vēntuviṭu muṉaiñar Vēṟṟuppulak kaḷaviṉ
ātantu ōmpal mēvaṟṟu ākum.

The theme of veṭcit tiṇai is as follows:

The army of the king stationed at the border camps would, on orders from their king, cross the border, enter into the enemy's land, stealthily capture their cows, bring them to their own land and protect them well.

61. Paṭaiiyaṅku aravam pākkattu viricci
puṭaiketap pōkiya celavē puṭaiketa
oṟṟin ākiya vēyē vēyppuṟam
muṟṟiṉ ākiya puṟattuirai muṟṟiya
ūrkolai ākōḷ pūcal māṟṟē
nōyiṉṟu uyttal nuvalvaḻit tōṟṟam
tantuniṟai pātīṭu uṇṭāṭṭuk koṭaiyeṉa
vanta īrēḻ vakaiyiṟṟu ākum.

The theme of veṭcit tiṇai being lifting the cattle of one's enemy, it has the following fourteen aspects or sub themes:

1. the noise created by the movement of the territorial army;
2. Considering as a good omen the casual remarks of the neutral people in the hamlet;
3. marching of the army without the knowledge of the spies of the enemy infiltrated into their midst;
4. report of their spies regarding the positions of the cattle to be lifted, without being spied by the enemy.
5. to besieze the reported positions of the cattle and to lie in wait for an opportune moment to lift them;
6. destroying those who oppose lifting the cattle
7. lifting the cattle;
8. avoiding a formal battle with enemies who try to recover their cattle,by cleverly defusing the tension;
9. to bring the stolen cattle to their land without causing them any hardship;
10. returning home with enemy's cattle amidst the cheering crowds of their native land;
11. delivering the herds of cows to the authorities concerned;
12. sharing the cattle among all those concerned;
13. indulging in a feast of victory, and
14. distributing some cows freely to others not connected with the exploit.

**62. மறங்கடைக் கூட்டிய குடிநிலை சிறந்த**
**கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே.**

மறத்தொழிலில் மீதூர்ந்து நிற்கும் மறக்குடியின் சிறப்பைக் கூறுதலும், வெற்றிக்குச் சிறப்பாகிய கொற்றவையின் நிலையைக் கூறுதலும் குறிஞ்சித் திணைக்குப் புறனாகிய வெட்சியின்பாற்படும்.

**63. வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்**
**வெறியாட்டு அயர்ந்த காந்தளும்; உறுபகை**
**வேந்திடை தெரிதல் வேண்டி ஏந்துபுகழ்ப்**
**போந்தை வேம்பே ஆர் என வரூஉம்**
**மாபெருந் தானையர் மலைந்த பூவும்;**
**வாடா வள்ளி; வயவர் ஏத்திய**
**ஓடாக் கழல்நிலை உளப்பட ஓடா**
**உடல்வேந்து அடுக்கிய உன்ன நிலையும்;**
**மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பின்**
**(10) தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்;**
**ஆரமர் ஓட்டலும்; ஆபெயர்த்துத் தருதலும்;**
**சீர்சால் வேந்தன் சிறப்பெடுத்து உரைத்தலும்;**
**தலைத்தாள் நெடுமொழி தன்னொடு புணர்த்தலும்;**
**அனைக்குஉரி மரபினது கரந்தை; அன்றியும்**
**வருதார் தாங்கல்; வாள்வாய்த்துக் கவிழ்தல் என்று**
**இருவகைப் பட்ட பிள்ளை நிலையும்;**
**வாள்மலைந்து எழுந்தோனை மகிழ்ந்துபறை தூங்க**
**நாடு அவற்கு அருளிய பிள்ளை யாட்டும்;**
**காட்சி, க(ா)ல்கோள், நீர்ப்படை, நடுதல்**
**(20) சீர்த்தமரபின் பெரும்படை, வாழ்த்தல் என்று**
**இருமூன்று மரபின் கல்லொடு புணரச்**
**சொல்லப் பட்டஎழு மூன்று துறைத்தே.**

1. வெறியாடுதலில் சிறந்தவனாக அறியப்பட்ட, கேட்போர் விரும்பத்தக்க சொற்களைக் கூறும் வாயினனாகிய வேலன் தெய்வமுற்று ஆடுதலாகிய காந்தள் என்னும் மறநிலைக் கூத்தும்;

2-4 போரிடும் மறவர் தம்மிடையே வேறுபாடு தெரிதல் வேண்டிச் சூடிய பெரும் புகழை உடைய தத்தம் வேந்தர்களுக்கு உரிய பனை, வேம்பு, ஆத்தி என்னும் பூக்களின் பெயர்களால் வழங்கும் துறைகளும்;

5. மகளிர் ஆடும் வள்ளியென்னும் கூத்தும்;

6. வீரரால் புகழப்பட்ட கழல்நிலையும்;

62. maraṅkaṭaik kūṭṭiya kuṭinilai ciranta
korravai nilaiyum attiṇaip puranē.

To depict the exploits of the warrior clan and to hail the blessings of korravai, the goddess of victory also belong to veṭcit tiṇai, the non-Akam parallel to kuriñci.

63. veriyari cirappin vevvāy vēlan
veriyāṭṭu ayarnta kāntaḷum; urupakai
vēntiṭai terital vēṇṭi ēntupukalp
pōntai vēmpē ār ena varūum
māperun tānaiyar malainta pūvum;
vāṭā vaḷḷi; vayavar ēttiya
ōṭāk kalalnilai uḷappaṭa ōṭā
uṭalvēntu aṭukkiya unna nilaiyum;
māyōn mēya manperuñ cirappin
(10) tāvā viluppukalp pūvai nilaiyum;
āramar ōṭṭalum; āpeyarttut tarutalum;
cīrcāl vēntan cirappeṭuttu uraittalum;
talaittāḷ neṭumoli tannoṭu puṇarttalum;
anaikkuuri marapinatu karantai; anriyum
varutār tāṅkal; vāḷvāyttuk kaviltalenru
iruvakaip paṭṭa piḷḷai nilaiyum
vāḷmalaintu eluntōnai makilntuparai tūṅka
nāṭuavarku aruḷiya piḷḷai yāṭṭum
kāṭci, kālkōl, nīrppaṭai, naṭutal
(20) cīrtta marapin perumpaṭai vālttal enru
irumūnru marapin kalloṭu puṇarac
collap paṭṭa elumūnru turaittē.

veṭcittiṇai has, in addition, the following twenty one turai or sub-themes as per the tradition:

1. The dance of kāntaḷ by vēlan the possessed priest adorned with kāntaḷ flowers who is well known and therefore preferred for his foretellings;
2-4. Wearing of the flowers of palmyra, margosa and atti, the common mountain ebony by the respective huge armies of the three great kings for the purpose of identity and distinction;
5. the dance of *vaḷḷi* by women;
6. praising of the war anklets of the warrior

7. புறங்காட்டாது போரிடும் வேந்தனின் வெற்றி கருதி உன்ன மரத்தில் நிமித்தம் காணும் உன்னநிலையும்;
8. காத்தல் தொழிலால் மாயோனோடு பொருந்திய மன்னர்களின் பெருஞ்சிறப்பினையும் கெடாத சிறந்த புகழினையும் கூறும் பூவை நிலையும்; அன்றி மாயோனை ஒத்த பூவையின் மலர்ச்சியைப் புகழ்தலாகிய துறை எனினும் பொருந்தும்; இனி சிவன், திருமால், முருகன் என வேறு கடவுளரை நோக்கி உவமித்துப் புகழ்தலும் பூவைநிலையாகக் கொள்ளலாம்.
9. அரிய போரின்கண் வெட்சி மறவரைக் கரந்தை வீரர்கள் பொருது ஓடச் செய்தலும்;
10. வெட்சியார் கவர்ந்த நிரையை மீட்டலும்;
11. புகழ் மிக்க தம் வேந்தனுடைய வீரம், வென்றி ஆகியவற்றை எடுத்துக் கூறுதலும்;
12. தன்னுடைய வலிய போர் முயற்சியின் காரணமாக வஞ்சின மொழியைத் தன்மேலேற்றிக் கூறுதலும் ஆகிய அத்தனையும் கரந்தைக்குரிய மரபுகளாம். அன்றியும்;
13. எதிர்த்து வரும் கொடிப்படையினை முன்னின்று தடுத்தலும்;
14. பகைவர் வாளாற்பட்டு வீழ்தலும் ஆகிய இருவகைப்பட்ட பிள்ளைநிலையும்;
15. வாளாற்பட்டு வீழாமல் பொருது வெற்றி பெற்றோனுக்கு மகிழ்ச்சியால் பறைகள் ஒலிக்கத் தண்ணடை வழங்கிய பிள்ளையாட்டும்;[7]
16. வீரத்தொடு பொருது வீழ்ந்த வீரர்க்குக் கல்லெடுத்தற் பொருட்டு அதற்கேற்ற கல்லைத் தேர்ந்து காணுதலும்;

---

7 (அ) "அனைக்குரி மரபின் கரந்தை" என்னும் அடி இதனையடுத்து வருவதாகக் கொள்ளும் நச்சினார்க்கினியரின் பாடம் பொருத்தமாகக் தோன்றுகிறது.

(ஆ) பிள்ளையாட்டு என்னும் துறைக்கு வீரனுக்குத் துறக்கமாகிய நாட்டை அளிப்பது என்னும் இளம்பூரணரின் உரை பொருத்தமாகப்படவில்லை. வாட்போரில் வென்ற அரசிளங் குமரனை அந்நாட்டில் உள்ளார் கண்டு வந்து அவற்கு அரசுகொடுத்த பிள்ளைப் பருவத்தோனைக் கொண்டாடிய ஆட்டும் எனவரும் நச்சினார்க்கினியரின் உரையும் இவ்விடத்துப் பொருத்தமாகப்படவில்லை. ச.சோ.பாரதியார், பாலசுந்தரனார் ஆகியோரின் உரை இந்தச் சூத்திரச் சூழலுக்குப் பொருத்தமாகக் காணப்படலின், அதுவே மேலே தரப்பட்டுள்ளது.

7. invoking the unnam tree for omens regarding the outcome of the war in which the never fleeing king or his warriors are to take part;

8. praising the greatness and might of the kings who resemble Māyōn, the god of protection whose complexion is like that of pūvai, the bilberryflower; or prasing the kings as comparable to any god like civan, tirumāl, murukan, etc., or praising the puvai flowers as it resembles the god māyōn while in full bloom;

9. Karantai warriors driving the veṭci enemies back after fierce battle;

10. getting the cattle released;

11. extolling the exploits of their great king;

12. warrior taking vows in virtue of his own endeavours in battle; all these belong to karantai; moreover.

13. the two kinds of pillai nilai: blocking and resisting the opposing army

14. and falling a prey to their sword;

15. granting lands with a beat of gleeful drums to a warrior who emerged successfully from a fierce battle[8];

16. to identify a proper stone to erect as a memorial for the bravely fallen hero;

---

8. (a) The line fourteen of this cutra is taken as line eighteen by Naccinārkkiniyar and his reading seems to be the correct one.

(b) both the commentaries by Iḷampūraṇar and Naccinārkkiniyar on this sub theme namely, piḷḷaiyāttu do not suit the context. Those of S.S.Bharathiyar and Balasundaram seem to be the probable interpretation and hence it is glossed above as such.

17. அவ்வாறு கண்ட கல்லைக் கைக்கொள்ளுதலும். (கல்கோள்) அல்லது அக்கல்லை அமைத்தற்குரிய மேடை அமைத்தலும் (கால்கோள்);
18. அக்கல்லை நீராட்டித் தூய்மைப்படுத்தலும்;
19. வீரனது பெயர் அல்லது உருவம் பொறித்த கல்லை நடுதலும்;
20. நட்ட கல்லுக்குப் பெருமை பொருந்திய மரபின்படி பூசனை செய்தலும் அல்லது கோட்டம் அமைத்தலும்;
21. அக்கல்லைத் தெய்வத்தோடு ஒப்பக் கருதி வாழ்த்தி வழிபடுதலும் ஆகிய நடுகல் பற்றிய ஆறு துறைகளும் சேரச் சொல்லப்பட்ட துறைகள் மொத்தம் இருபத்தொன்றாகும்.

கரந்தைக்கெனத் தனித் திணையைத் தொல்காப்பியர் வகுக்க வில்லை. எனவே நிரை கவர்தல் தொடர்பான பதினான்கு துறைகளை முன்னர்க்கூறி, நிரைமீட்டல் தொடர்பான கரந்தைப் பொருண்மைக்குரிய துறைகளையும், புறத்திணை ஏழிற்கும் பொதுவான துறைகளையும் இச் சூத்திரத்துள் கூறுகிறார்.

64. வஞ்சி தானே முல்லையது புறனே
எஞ்சா மண்ணசை வேந்தனை வேந்தன்
அஞ்சுதகத் தலைச்சென்று அடல்குறித் தன்றே.

வஞ்சியென்னும் புறத்திணை முல்லை என்னும் அகத்திணைக்குப் புறனாகும். இது, மண்ணின் மீது நீங்காத வேட்கையினால் பிறர் மண்ணை அகப்படுத்தச்சென்ற வேந்தன்மீது அதற்குரிய வேந்தன் போர் தொடுத்து அவன் அஞ்சுமாறு அவன்மேற் சென்று வென்று அடக்கு தலைப் பொருளாக உடையது.

65. இயங்குபடை அரவம் எரிபரந்து எடுத்தல்
வயங்கல் எய்திய பெருமை யானும்
கொடுத்தல் எய்திய கொடைமை யானும்
அடுத்தூர்ந் அட்ட கொற்றத் தானும்
மாராயம் பெற்ற நெடுமொழி யானும்
பொருளின்று உய்த்த பேராண் பக்கமும்
வருவிசைப் புனலைக் கற்சிறை போல
ஒருவன் தாங்கிய பெருமை யானும்
பிண்டம் மேய பெருஞ்சோற்று நிலையும்
(10) வென்றோர் விளக்கமும் தோற்றோர் தேய்வும்
குன்றாச் சிறப்பின் கொற்ற வள்ளையும்
அழிபடைதட் டோர் தழிஞ்சியொடு தொகைஇக்
கழிபெருஞ் சிறப்பின் துறைபதின் மூன்றே.

17. to collect the stone or to prepare a pedestal for the stone;

18. to give a ceremonial bath to the stone;

19. to erect the stone with an engraving of the figure of the hero or the name and exploits of the hero;

20. to worship the herostone with appropriate offerings or to build a temple around it;

21. to pay homage to the memory of the hero.

Tolkāppiyar has not classified a separate tiṇai as Karantai. He subsumes therefore all the subthemes relating to Karantai under this cūtra.

64. vañci tāṉē mullaiyatu puṟaṉē
eñcā maṇṇacai vēntaṉai vēntaṉ
añcutakat talaiccenṟu aṭalkuṟit taṉṟē.

Vañcit tiṇai is the non-Akam parallel to mullait tiṇai. This theme (vañci) deals with the invasion of a neighbouring country whose greedy king had tried to annexe the land of the invader, and a terrible war resulting in a crushing defeat of the rival king.

65. iyaṅkupaṭai aravam eriparantu eṭuttal
vayaṅkal eytiya perumai yāṉum
koṭuttal eytiya koṭaimai yāṉum
aṭuttūrntu aṭṭa koṟṟat tāṉum
mārāyam peṟṟa neṭumoḻi yāṉum
poruḷinṟu uytta pērāṇ pakkamum
varuvicaip puṉalaik kaṟciṟai pōla
oruvan tāṅkiya perumai yāṉum
piṇṭam mēya peruñcoṟṟu nilaiyum
(10) veṉṟōr viḷakkamum tōṟṟōṟ tēyvum
kuṉṟāc ciṟappiṉ koṟṟa vaḷḷaiyum
aḻipaṭai taṭṭōr taḻiñciyoṭu tokaiik
kaḻiperuñ ciṟappiṉ tuṟaipatiṉ mūṉṟē.

1. பல்வகைப் படைகளும் இயங்குவதால் எழும் ஒலியும்.
2. பகைவரது ஊர்களை எரியூட்டி அழித்தலும்,
3. தானை வீரரின் செய்லதிறத்தால் வேந்தன் எய்தும் பெருமையும்,
4. வேந்தன் தன் தானை வீரர்க்கும் பிறர்க்கும் வழங்கும் கொடைப்பண்பும்,
5. பகைவீரர்களை நெருங்கிச் சென்று பொருது அழித்த வெற்றியும்.
6. வேந்தனால் பரிசும் விருதும் பெற்ற மிகுதியால் மறவர் கூறும் தற்புகழ்ச்சியும், பிறர்கூறும் மீப்புகழும்.
7. கொடிய பகைவராயினும் மதியாமற் சென்று போரிடும் பெருவீரமும்
8. விரைந்து பெருகிவரும் வெள்ளத்தை அசையாது தாங்கிநிற்கும் கல்லணை போலத் தன்னை எதிர்நோக்கி வரும் பெரும் படையினை அயராது தனியனாய்த் தடுத்து நின்று போரிடும் பெருமையும்,
9. மறவர்க்கு வேந்தன் உணவு உருண்டைகளை அளித்து மகிழ்விக்க விரும்புதலாகிய பெருஞ்சோற்று நிலையும்,
10. வெற்றி பெற்ற வேந்தன்மாட்டு உளதாய பெரும்புகழும்,
11. தோல்வியுற்றோர் மாட்டு உளதாய மெலிவும்,
12. தோற்ற கொற்றவன் அளிக்கும் திறைப்பொருள்களைப் பெறுதலாகிய குறைவற்ற வென்றிச் சிறப்பினையுடைய கொற்றவள்ளையும்,
13. பகைவர் எறிந்த கொடிய படைக்கருவிகளைத் துணிந்து தம்மேல் ஏற்று விழுப்புண்பட்டமறவர்களை வேந்தன் பெருமையோடு தழுவிப் பாராட்டுதலாகிய தழிஞ்சியும், என்று தொகுத்துக்கூறிய பதின்மூன்றும் வஞ்சித்திணையின் துறைகளாகும்.

Vañcit tiṇai has the following thirteen subthemes of great celebrity:

1. great noise caused by the movement of various segments (services) of the army;
2. destroying the hamlets and villages of the enemy by setting them on fire
3. the glory achieved by the king because of the heroic feats of his warriors;
4. munificence of the king in liberally rewarding his soldiers and others with gifts and prizes;
5. feats of valour shown by charging the soldiers of the enemy in close quarters and decimating them;
6. elated by the honour and rewards bestowed by the king, the soldiers praising themselves too much or being praised highly by others;
7. great heroism shown in fighting ferociously with the enemies, ignoring their strength and might as if of no consequence;
8. heroic valour shown by a warrior in resisting and containing a vast rushing army all by himself, like a rocky dam arresting the tumultuous rush of surging floods;
9. great martial feast hosted by the king to his warriors
10. rejoicing encomium paid to the victorious king;
11. graceful consolation and sympathy for a vanquished king;
12. the theme of koṟṟa vaḷḷai dealing with the acceptance of the tributes paid by the defeated king;
13. the theme of taḻiñci which deals with a king's care and concern for his soldiers maimed by the cruel weapons of the enemy, shown by his patronizing embrace and appreciation.

**66 உழிஞை தானே மருதத்துப் புறனே**
**முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும்**
**அனைநெறி மரபிற்று ஆகும் என்ப.**

உழிஞை என்னும் புறத்திணை மருதம் என்னும் அகத்திணைக்குப் புறனாகும். பகையரசனின் பாதுகாப்புமிக்க தலைமை சான்ற (கோட்டை, கொத்தளம், அரண்மனை, மதில் போன்றவை அடங்கிய) அரணத்தை முற்றுகையிடுதலும், கைப்பற்றுதலும் ஆகிய புறத்திணை நெறிகளை மரபாக உடையது உழிஞைத்திணை என்பர்.

**67. அதுவே தானும் இருநால் வகைத்தே.**[9]

உழிஞைத்திணை எட்டு வகையினை உடையது.

**68. கொள்ளார் தேஎம் குறித்த கொற்றமும்,**
**உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பும்,**
**தொல் எயிற்கு இவர்தலும், தோலது பெருக்கமும்,**
**அகத்தோன் செல்வமும், அன்றி முரணிய**
**புறத்தோன் அணங்கிய பக்கமும், திறற்பட**
**ஒருதான் மண்டிய குறுமையும், உடன்றோர்**
**வருபகை பேணார் ஆர்எயில் உளப்படச்**
**சொல்லப் பட்ட நாலிரு வகைத்தே.**

1. பகைவரது நாட்டை வென்றதாகக் கருதிக்கொள்ளும் பெருமிதமும்,
2. கருதியதை முடிக்கும் வேந்தனது சிறப்பும்,
3. பகைவரது பழமைசான்ற மதிலின் மீது படர்ந்து ஏறுதலும்,
4. அவ்வாறு ஏறுமிடத்துப் பகைவரின் அம்புமாரியைத் தடுத்துக் கொள்வதற்குத் தாங்கும் தோலாற் செய்த கிடுகு படையின் மிகுதியும்.

---

9 இத்தகைய அனுவாத சூத்திரம் வெட்சிமுதலிய பிற திணைகளுக்குக் கூறப்படாமையாலும், இதனால் பெறப்படும் தனித்ததோர் சிறப்பின்மையாலும், இதனை இடைச் செருகலாகக் கருதுவர் பி.சா.சு. சாஸ்திரியார் - தொல். பொருள். மொழி பெயர்ப்பு).

66. uḻiñai tāṉē marutattup puraṉē
mulu mutal araṇam muṟṟalum kōṭalum
aṉaineṟi marapiṟṟu ākum eṉpa.

uḻiñait tiṇai is the non-Akam parallel to marutat tiṇai. Besiezing and capturing the well fortified and perfected fortress of the enemy are, according to the experts, the conventional features of uḻiñait tiṇai.

67. atuvē tāṉum irunāl vakaittē.[10]

There are eight kinds of it.

68. koḷḷār tēem kuṟitta koṟṟamum,
uḷḷiyatu muṭikkum vēntaṉatu ciṟappum.
toleiṟṟu ivartalum, tōlatu perukkamum.
akattōṉ celvanum, aṉṟi muraṇiya
puṟattōn aṇaṅkiya pakkamum, tiṟaṟpaṭa
orutāṉ maṇṭiya kuṟumaiyum uṭaṉṟōr
varupakai pēṇār āreyil uḷappaṭac
collap paṭṭa nāliru vakaittē.

The following are the eight kinds mentioned or referred to

1. the majestic claim of the besieger even before the start of the attack that he had already conquered the land of enemy.
2. the greatness of the king in achieving his aim;
3. climbing over the ancient fort;
4. mass of leather shields worn by the soldiers of the besieger to ward off enemy's attack while climbing the fort.

---

10. "Since a similar cūtra is not found with reference to other tiṇais and since the expression nāl-iru- vakaittē is found in the next cūtra, it gives us room to suspect that this cūtra may be an interpolation". P.S.S. Sastri, Tol, Poruḷ. trans. cūtra no. 66.

5. முற்றுகையிடப்பட்ட மதிலின் உள்ளே இருக்கும் அரசனது வளமும்,
6. அன்றியும் முற்றுகையிட்ட அரசன் அகத்தரசனின் எதிர்ப்பால் வருந்திய நிலையும்,
7. உரனழியாது தான் ஒருவனேயாகிப் போரிடும் குற்றுழிஞையும் அல்லது திறல் அழிந்தவிடத்து மதிலின் புறத்தே போந்து தான் ஒருவனேயாகிப் போரிடும் சிறுமையும்,
8. முற்றுகையிட்டோனின் பகைவலியை மதியாமல் நிற்கும் கடத்தற்கரிய மதில் அரணின் சிறப்பும் உள்ளிட்டுக் கூறப்பட்ட எட்டு வகையினை உடையது உழிஞை.

இவற்றுள் முன்னைய நான்கும் முற்றுகையிடும் அரசனுக்கும் பின்னைய நான்கும் அரணுக்குள் இருக்கும் அரசனுக்கும் உரியன என்று இளம்பூரணரைத் தவிர ஏனைய உரையாசிரியர்கள் கருதுகின்றனர். இவை முறையே புறத்துழிஞை, அகத்துழிஞை என்று கூறப்படுகின்றன.

**69. குடையும் வாளும் நாள்கோள் அன்றி**
**மடையமை ஏணிமிசை மயக்கமும் கடைஇச்**
**சுற்றமர் ஒழிய வென்றுகைக் கொண்டு**
**முற்றிய முதிர்வும் அன்றி முற்றிய**
**அகத்தோன் வீழ்ந்த நொச்சியும் மற்றதன்**
**புறத்தோன் வீழ்ந்த புதுமை யானும்**
**நீர்ச்செரு வீழ்ந்த பாசியும் அதாஅன்று**
**ஊர்ச்செரு வீழ்ந்த மற்றதன் மறனும்**
**மதில்மிசைக்கு இவர்ந்த மேலோர் பக்கமும்**
**(10) இகல்மதிற் குடுமிகொண்ட மண்ணு மங்கலமும்[11]**
**வென்ற வாளின் மண்ணோடு ஒன்றத்**
**தொகைநிலை என்னுந் துறையொடு தொகைஇ**
**வகைநான் மூன்றே துறையென மொழிப.**

மேற்கூறிய எட்டு வகையோடு குடைநாட்கோள் முதலாகத் தொகைநிலை இறுதியாகக் கூறப்பட்டுள்ள விரி பன்னிரண்டும் உழிஞைத் திணைக்கு உரியன என்று கூறுவர்.[13] அவை பன்னிரண்டும் வருமாறு:

---

11. "அகமிசைக்கு இவர்ந்தோன் பக்கமும் இகல்மதில் குடுமி கொண்ட மண்ணுமங் கலமும்" என்று நச்சினார்க்கினியர் கொண்ட பாடம் நூற்பாவின் யாப்பமைதிக்கும் பொருளமைதிக்கும் பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது.

5. the inexhaustible resources of the besieged king;
6. loss and suffering inflicted upon the besieged;
7. the solo fight by the besieged outside the fort after its fall;
8. the invulnerability of the great fort which defies all attempts by the besieger.

All commentators, medieval and modern, except Iḷampūraṇar hold that the first four of the above relate to the besieger and the next four to the besieged.

69. kuṭaiyum vāḷum nāḷkōḷ an̲ri
maṭaiyamai ēṇimicai mayakkamum kaṭaiic
cur̲r̲amar ol̲iya ven̲r̲ukaik koṇṭu
mur̲r̲iya mutirvum an̲r̲i mur̲r̲ya
akattōn̲ vīl̲nta nocciyum mar̲r̲atan̲
pur̲attōn vīl̲nta putumai yān̲um
nīrcceru vīl̲nta pāciyum atāan̲r̲u
ūrcceru vīl̲nta mar̲r̲atan̲ mar̲an̲um
matilmicaikku ivarnta mēlōr pakkamum
(10) ikalmatir̲ kuṭumikoṇṭa maṇṇu maṅkalamum[12]
ven̲r̲a vāḷin̲ maṇṇōṭu on̲r̲at
tokainilai en̲n̲um turaiyotu tokaii
vakainān̲ mūn̲r̲ē tur̲aiyen̲a mol̲ipa.

The following twelve tur̲ais from kuṭaināl kōḷ through tokainilai are said to relate to uliñait tiṇai, in addition to the eight kinds described in the previous cūtra.[14]

---

12. The following reading of Naccin̲ārkkin̲iyar sounds more authentic in view of the metrical cadence and meaning of the verse:

**"akamicaikku ivarntōn̲ pakkamum ikalmatil kuṭumi koṇṭa maṇṇumaṅ kalamum".**

1-2. குடைநாள் - கோள், வாள்நாள்கோள்: அதாவது, நல்லதோர் முழுத்தத்தில் உழிஞையான் தன்கொற்றக் குடையையும் வெற்றி வாளையும் முன்னே செல்ல விடுதல்,

3. முற்றுகையிட்ட மதிலின்மேல் ஏணி சார்த்தி அதன்மேல் நின்று செய்யும் போர்களும்,

4. மதிலின் புறத்தே செய்யும்போர் விரைவில் முடிக என்று உறுதி பூண்டு நிகழ்த்தும் முற்றுகைப்போரும்,

5. சூழப்பட்ட மதிலின் உட்புறம் உள்ளோர் சினந்து செய்யும் மதில் காத்தலாகிய நொச்சிப்போரும்,

6. முற்றுகையிட்டிருக்கும் உழிஞைவீரர்கள் மதிலின் உட்புறம் பாய்ந்து செய்யும் வேட்கைப் போரும்,

7. மதிலையடுத்துள்ள நீர்க்கிடங்கில் குதித்து இருபாலாரும் எதிர்த்துப் போரிடும் பாசிநிலையும்,

8. அதுதவிர, நீர்க்கிடங்கினைக் கடந்து ஊரினுள் சென்று அவ்வூராரோடு நிகழ்த்தும் போராகிய பாசிமறனும்

9. மதிலைக் கைப்பற்றுவதற்காகப் பரந்து சென்ற வீரர்களின் பகுதியும்,

10. பகைவரின் மதிலைக் கைக்கொண்டதும் அவ் அரசனின் முடிக்கலம் கைக்கொண்ட பின்னர் எடுத்த மண்ணுமங்கலச் சிறப்பும்,

11. வென்றி தந்த தன்வாளினை நீராட்டி எடுத்த மண்ணு மங்கல விழாவும்,

12. பரிசளித்துச் சிறப்புச் செய்வதற்காக வெற்றிபெற்ற அரசனின் படைகளைத் திரட்டுதலாகிய தொகை நிலையும்; அல்லது மதிலிழந்து, முடியிழந்து சோர்ந்த நிலையில் மதிலினர் எல்லாம் முரண் அவிந்து தொக்கு நின்று வென்றோனைச் சென்றடையும் தொகைநிலையும்

என உழிஞைத் திணைக்குரிய துறைகள் பன்னிரண்டாகும் என்பர்.

---

13. முன்னைய நூற்பாவில் (68) தொல்காப்பியர் தம் கருத்துப்படி உழிஞைத்திணையின் வகைகளைக் கூறுகிறார். இந்த நூற்பாவில் (69) தம்முன்னோர் கருத்துப்படி உழிஞைத்திணையை வகைப்படுத்துகிறார் எனக் கூறும் பி.சா.சு. சாஸ்திரியாரின் கருத்து பொருத்தமாகத் தோன்றவில்லை. வகைத்தே என்றும் துறை என்றும் பிரித்துக் கூறும் பாங்கினையும், தொல்காப்பியர் கூறும் இலக்கணக் கருத்துகளுள், "இவை தொல்காப்பியர் கோட்பாடு, இவை அவருக்கு முன்னைய இலக்கணிகளின் கோட்பாடு" என்று தெளிவாகப் பிரித்துணர இயலாத பாங்கினையும் நோக்கினால், சாஸ்திரியாரின் விளக்கம் மிகையானது என்பது தெளிவாகப் புலப்படும்.

1. Sending the royal umbrella in an auspicious hour before he begins the besiege,
2. sending the royal sword in an auspicious hour before he begins the besiege,
3. the battles fought by the armies of both the besieger and the besieged while the former ascend on the ladders over the fort.
4. the besieger's determination to capture the fort sooner resulting in a fierce battle,
5. the defensive spirited attack by the besieged,
6. a renewed attack inside the fort by the besieging army,
7. the battle in the moat called pacinilai,
8. the battle called pacimaran fought by the besieging army within the town after crossing the moat,
9. the brave act of capturing the inner fort by the army of the besieger,
10. taking a ceremonial bath inside the fort of the defeated king as a mark of victory, or uncrowning the defeated king and crowning himself as the king of the conquered land,
11. celebrating the victor's sword by giving it a ceremonial wash,
12. gathering the victor's army together for offering suitable rewards or collecting the various columns of the defeated army for consolidation under the victor's command.

---

14. P.S. Sastri's distinction that in cūtra 68 Tolkāppiyar classifies uḻiñait tiṇai in accordance with his opinion and in this cūtra he classifies it according to his predecessors does not seem to be correct. Because it is not always easy for us to distinguish his original ideas from those of his tradition. Moreover he follows a method whereby first he speaks of the kinds of a tiṇai and then he lists the turais of the tiṇai. His use of distinct terms vākai and tuṟai in the above cūtras would make this point clear.

**70. தும்பை தானே நெய்தலது புறனே**
**மைந்துபொரு ளாக வந்த வேந்தனைச்**
**சென்றுதலை அழிக்குஞ் சிறப்பிற் றென்ப.**

தும்பை என்னும் புறத்திணை நெய்தல் என்னும் அகத்திணைக்குப் புறனாக அமையும். அது தன் வலிமை காரணமாகப் போர்செய்யவந்த அரசனை எதிர்த்து நின்று அவனுடைய தலைமை உணர்வை அழித்தொழிக்கும் சிறப்பினை உடையது என்பர்.

**71. கணையும் வேலும் துணையுற மொய்த்தலின்**
**சென்ற உயிரின் நின்ற யாக்கை**
**இருநிலம் தீண்டா அருநிலை வகையோடு**
**இருபாற் பட்ட ஒருசிறப் பின்றே.**

பகைவீரரின் எண்ணற்ற அம்புகளும் வேல்களும் நெருக்கமாகத் தைத்திருக்கின்ற காரணத்தால் உயிர்பிரிந்துசென்ற நிலையில் உள்ள உடலானது நிலத்தின்மேல் வீழாமல் நின்ற நிலையில் நிற்கும் அரியதொரு சிறப்பு இருபாற்பட்ட வீரர்க்கும் உரியதாகும்.

இரண்டிரண்டு கூறுகளாக அமையும் பிற திணைகளைப் போலன்றி, தும்பைத்திணை (தும்பை மறம்) போரில் ஈடுபடும் இரு திறத்து வீரர்களின் அரிய வீரநிலைகளை இருவர்க்கும் பொதுவான வையாகக் கூறிச் சிறப்பிக்கும் இயல்பினது. தும்பைத் திணையின் சிறப்பியல்பினை இந்த நூற்பா விளக்குகிறது.[15]

---

15. தும்பைத்திணையின் சிறப்புத்தன்மை, இளம்பூரணரின் நுதற்பொருள் விளக்கம், இளவழகனாரின் குறிப்புரை ஆகியவற்றின் அடிப்படையில் இந்தச் சூத்திரத்திற்குச் சூத்திரம் கிடந்தவாறே பொருள் கொள்ளப்பட்டுள்ளது.

"இருபாற்பட்ட" என்னும் தொடரை 'வகை' என்பதனோடு கொண்டு கூட்டி உரையாசிரியர்கள் பொருள் காண்கின்றனர். இளம்பூரணரின் உரைப்பகுதியில் காணப்படும் நுதற்பொருள் விளக்கமும் அதனையடுத்து வரும் உரையும் தம்முள் மாறுபடுகின்றன. தற்போதுள்ள இளம்பூரணரின் பொருளதிகார உரை பல இடங்களில் சிதைவுற்று மீட்டுருவாக்கம் செய்யப்பட்டுள்ளது என்பதற்கு இதுவும் ஒரு சான்றாக அமைகிறது.

70. tumpai tāṉē neytalatu puṟaṉē
maintuporu ḷāka vanta vēntaṉaic
ceṉṟutalai aḻikkuñ ciṟappiṟ ṟeṉpa.

Tumpait tiṇai is the non-Akam parallel to Neytal tiṇai. It has the great theme of destroying the pride and person of the king who invades his country on account of his over estimation of his martial power.

71. kaṇaiyum vēlum tuṇaiyuṟa moyttaliṉ
ceṉṟa uyiriṉ niṉṟa yākkai
irunilam tīṇṭā arunilai vakaiyōṭu
irupāṟ paṭṭa oruciṟap piṉṟē.

Stuck fast with showers of arrows and spears, the life-departed body of a soldier continues to stand in a fighting stance without falling (onto the ground). Such a rare feat of heroism is applicable to or observable with both sides of the army.[16]

16. The above meaning, differing from that of the commentators in general, is arrived at on the bases of (a) the general purport of Tumpait tiṇai to celebrate the heroic acts of the soldiers on both sides of the army, (b) Iḷampūrṇar's note on the special feature of Tumpait tiṇai, (c) Iḷavaḻakaṉār's note on this cūtra and (d) the natural syntactic order of the verse without resorting to transposition of words and phrases as is the case with the commentators.

72. தானை, யானை, குதிரை என்ற
நோனார் உட்கும் மூவகை நிலையும்,
வேல்மிகு வேந்தனை மொய்த்தவழி ஒருவன்
தான்மீண்டு எறிந்த தார்நிலை, அன்றியும்
இருவர் தலைவர் தபுதிப் பக்கமும்,
ஒருவன் ஒருவனை உடைபடை புக்குக்
கூழை தாங்கிய பெருமையும், படையறுத்துப்
பாழி கொள்ளும் ஏமத் தானும்,
களிறெறிந்து எதிர்ந்தோர் பாடும், களிற்றொடு
(10) பட்ட வேந்தனை அட்ட வேந்தன்
வாளோர் ஆடும் அமலையும், வாள்வாய்த்து
இருபெரு வேந்தர் தாமும் சுற்றமும்
ஒருவரும் ஒழியாத் தொகைநிலைக் கண்ணும்
செருவகத்து இறைவன் வீழ்வுறச் சினைஇ
ஒருவனை மண்டிய நல்லிசை நிலையும்
பல்படை ஒருவற்கு உடைதலின் மற்றவன்
ஒள்வாள் வீசிய நூழிலும் உளப்படப்
புல்லித் தோன்றும் பன்னிரு துறைத்தே.

1–3. பகைவர்கள் அஞ்சத்தக்க போர்த்திறம் கொண்ட தானை வீரர்கள், யானைவீரர்கள், குதிரை வீரர்கள் என்னும் மூவகை வீரநிலையும்,

4. வேற்படை கொண்டு போர்செய்யும் வேந்தனை மாற்றார்படை சூழ்ந்து கொண்டவிடத்து, அவ்வேந்தனின் தார்ப்படைத் தலைவன் தன் இடம் விட்டுப் பெயர்ந்து அவர்களை எதிர்த்து அழித்தலாகிய தார்நிலையும்,

5. தத்தம் வேந்தர்க்காக அவரொடு சேர்ந்து பொருதலேயன்றித், தார்த் தலைவர்கள் இருவரும் தம்முள் பொருது அழியும் நிலையும்,

6. அவ் இருவருள் ஒருவன் தன் படையை நிலை குலையச் செய்தவிடத்து அது குலையாதவாறு கூழைப்படையெனக் (பின்னணிப்படை) காத்தும், எதிர்த்தலைவன் அஞ்சியொடுங்குமாறு எதிர்த்தும் நிற்கும் தறுகண்மையாகிய பெருமிதமும்.[17]

---

17. "கூழைதாங்கிய பெருமையும்" என்பது இளம்பூரணர் கொண்ட பாடம். "கூழைதாங்கிய எருமையும்" என்பது நச்சினார்க்கினியர் முதலானோர் கொண்ட பாடம். சிதையாது எதிர் நின்று தாங்கித் தடுக்கும் தலைவனின் தறுகண்மைக்கு உவமையாக எருமையைக் கொண்டு இத்துறையை எருமை மறம் என்று அவர்கள் கருதுவர்.

72. tāṉai yāṉai kutirai eṉṟa
nōṉār uṭkum mūvakai nilaiyum
vēlmiku vēntaṉai moyttavaḻi oruvaṉ
tāṉmīṇṭu eṟinta tārnilai aṉṟiyum
iruvar talaivar taputip pakkamum
oruvaṉ oruvaṉai uṭaipaṭai pukkuk
kūḻai tāṅkiya perumaiyum paṭaiyaṟuttup
pāḻi koḷḷum ēmat tāṉum
kaḷiṟeṟintu etirntōr pāṭum kaḷiṟṟoṭu
(10) paṭṭa vēntaṉai aṭṭa vēntaṉ
vāḷōr āṭum amalaiyum vāḷvāyttu
iruperu vēntar tāmum cuṟṟamum
oruvarum oḻiyāt tokainilaik kaṇṇum
ceruvakattu iṟaivaṉ vīḻvuṟac ciṉaii
oruvaṉai manṭiya nallicai nilaiyum
palpaṭai oruvaṟku uṭaitaliṉ maṟṟavaṉ
oḷvaḷ vīciya nūḻilum uḷappaṭap
pullit tōṉṟum paṉṉiru tuṟaittē.

Tumpait tiṇai which celebrates the martial feats of the various columns of the army on either side, consists of the following twelve tuṟais or subthemes:

1-3. The three kinds of formidable exploits shown by the infantry, elephantry and the cavalry,

4. The fury of a general who on seeing his king adept in spear fight being surrounded by the enemy's soldiers, leaves his charge, turns towards them and puts them to rout,

5. Apart from guarding their respective kings, the commanders of both the sides enter into personal combats and die fighting each other,

6. The undeterred heroism of a general who seeing his army in distress and disarray, rushes towards it as if from the reserve column and reinforces it to the enemy's dismay.[18]

18. Iḷampūraṇar's text reads as "kūḻai tāṅkiya perumal" whereas Nacciṉārkkiṉiyar's reads as, "kūḻai tāṅkiya erumai", meaning that the general resisted the surging army of the enemy and supported his disarrayed army as a buffalo. Consequently this tuṟai came to be called "erumai maṟam," buffalo combat.

7. படைக்கருவிகளைத் துரந்தபின்னர், வேறு கருவிகளின்றித் தன் மெய்வலியால் (உடல்வலிமையால்) பகைவரை எதிர்த்து நின்று போர்புரியும் ஏமமும்,[19]

8. தம் மேல்வரும் யானையை எதிர்த்துநின்று போர்புரியும் மறவர் நிலையும் அல்லது அழிவும்,

9. களிறுஊர்ந்து வந்துபொருது அழிந்து வேந்தனை அவனை வீழ்த்திய வேந்தனின் வீரர்கள் சூழ்ந்து நின்று புகழ்ந்து பாடுதலும் ஆர்ப்பரித்து ஆடுதலும்,

10. வாட்போர்முற்றிய நிலையில் போர்மேற்கொண்ட இரண்டு பெரிய அரசர்களும், அவர்களுடைய சுற்றமாகிய படைவீரர்களும் ஒருவர் தவறாமல் எல்லோரும் இறந்துபட்ட தொகை நிலையும்,

11. போரில் தன் அரசன் வீழ்ந்துபட அதுகண்டு சினமுற்ற படைத் தலைவன் வீரன் ஒருவனை நெருங்கிப் பொருத நற்புகழ் மிக்க நிலையும்,

12. எதிர்த்துநின்ற பல திறப்படைகளும் ஒருவனை எதிர்த்து நிற்க இயலாமல் உடைந்து ஓடும் நிலையில் அவன் ஒருவனே தன் ஒள்ளிய வாளை எறிந்து பலரையும் கொன்று குவிக்கும் நூழில் என்னும் துறையும் உள்ளிட்டுத் தும்பைப் பொருண்மையோடு பொருந்தித் தோன்றும் பன்னிரண்டு துறைகளை உடையது தும்பைத் திணையாகும்.

---

19. இதில் வரும் ஏமம் என்னும் சொல் இவ்விடத்தில் என்னபொருளில் கையாளப்பட்டுள்ளது என்று தெளிவாகப் புலப்படவில்லை. 'மயக்கம்' என்று நச்சினார்க்கினியரும், 'பாதுகாவல்' என்று ச.சோ. பாரதியாரும் பொருள் காண்கின்றனர். தொல்காப்பியத்தில் ஏமம் என்னும் சொல் ஆறிடங்களில் (பொருள். 40, 53, 72, 77, 109, 190) பயின்றுள்ளது. இளம்பூரணர் ஓரிடத்தில் மட்டும் (சூ.77) ஓம்புதல் என்ற பொருள்கூறிப் பிற இடங்களில் பொருள் கூறாது ஏமம் என்றே குறிப்பிடுகிறார். நச்சினார்க்கினியர் பதியெழுவறியா (40), மருந்துபிறிதில்லா (53), மயக்கம் (72) யாமம், காப்பு (77), பாதுகாவல் (109), ஏமம் (190) என்று பல பொருள் கூறுகிறார். ஓரிடத்தே மருந்து பிறிதில்லா (53) என்றும் ஏனைய இடங்களில் பாதுகாவல் என்றும் பாரதியார் பொருள் காண்கிறார். ஓரிடத்தே மயக்கம் (72) என்றும் பிற இடங்களில் பாதுகாவல் என்றும் பாலசுந்தரனார் பொருள் கொள்கிறார். பிற இடங்களில் எல்லாம் பாதுகாவல் என்று பொருள்கூறும் இளவழகனார் ஓரிடத்தில் (72) போர்க்களிப்பு என்று பொருள் காண்கிறார். இளம்பூரணரை ஒட்டி மேலே ஏமம் என்றே பொருள் கொள்ளப்படுகிறது.

7. The heroic feat of fighting the enemy with one's physical prowess, after having served all the weapons on the enemy,[20]

8. The warrior's spirit of fighting fearlessly with the elephants that charge them in the battle field and eventually their death,

9. Singing a eulogy and dancing in glee around the body of a fallen king riding an elephant, by the warriors of the victorious king who killed his rival in the fight.

10. The turai "tokainilai" which signifies the death and destruction of the warriors and their kings in toto on either side towrds the end of their fight with swords,

11. The praiseworthy act of a commander who, having seen his king dead in the battle, ferociously attacks the enemies in retaliation,

12. The tuṟai "nūḻil" celebrates the extraordinary feat of heroism of a warrior who, having terrfied into retreat several columns of the enemy's army, slaughters many a warrior with his brilliant sword.

---

20. It is not clear in exactly what sense the term ēmam is used in this cūtra. Iḷampūraṇar simply repeats the same in his gloss, while Naccinārkkiniyar glosses it as "mayakkam", meaning fighting and others as 'kāval', meaning safeguard or security. The term ēmam occurs in six places in the third Book of Tolkāppiyam (40, 53, 72, 77,109 and 190). Iḷampūraṇar glosses it as safeguard or ward off in one place (77) and just repeats the word elsewhere. Naccinārkkiniyar offers several meanings: a town so selfreliant that no one leaves it for want of anything (40), remediless (53), close fighting (72) safeguard, security (77, 109) and just emem (190). S.S. Bharatiyār interprets as remediless (53) and security and safeguard (40, 72, 77, 109, 190). Balasundaram and Iḷavaḻakaṉār take the term to mean boxing and rejoicing in martial feats, respectively in 72 and safeguard or security in all other places. Iḷavaḻakaṉār's gloss is followed in the above translation.

**73 வாகை தானே பாலையது புறனே**
**தாவில் கொள்கைத் தத்தம் கூற்றைப்**
**பாகுபட மிகுதிப் படுத்தல் என்ப.**

வாகை என்னும் புறத்திணை பாலை என்னும் அகத்திணைக்குப் புறனாகும். கேடில்லாத கோட்பாடுகளை உடைய தொழிலுக்கு உரியவர்கள் தத்தம் துறைகளிற் சிறந்து நிற்கும் நிலையை உயர்த்திக் கூறுதலாகிய இலக்கணநெறியினை உடையது வாகைத்திணை என்று கூறுவர்.

இவ்வாறு மேம்படப் புகழ்ந்து கூறுதலாகிய இயல்பு தம்மைத் தாமே புகழ்ந்து கூறுதலும் தம்மைப் பிறர் புகழ்ந்து கூறுதலும் ஆகிய இருவகையாகவும், ஒருவரை உறழ்ச்சியின்றி அவரளவில் புகழ்ந்து கூறுதல், ஒருவரைப் பிறரோடு உறழ்ந்தும், ஒப்பிட்டும் காட்டிப் புகழ்ந்து கூறுதல் ஆகிய இருவகையாகவும் வெளிப்படும்.

**74. அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்**
**ஐவகை மரபின் அரசர் பக்கமும்**
**இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்**
**மறுவில் செய்தி மூவகைக் காலமும்**
**நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்**
**நாலிரு வழக்கின் தாபதப் பக்கமும்**
**பாலறி மரபின் பொருநர் கண்ணும்**
**அனைநிலை வகையோடு ஆங்கெழு வகையால்**
**தொகைநிலை பெற்றது என்மனார் புலவர்.**

1. ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் அறுவகை ஒழுக்கங்களை அல்லது தொழில்நிலைகளை உடைய பார்ப்பனக் கூறும்,

2. ஓதல், வேட்டல், ஈதல், படைவழங்குதல் (போரின்கண் படைக்கருவிகளை ஆளும்திறம்), குடியோம்புதல் என்னும் ஐவகைக் கடமைகளை உடைய அரசர் கூறும்,

3. ஓதல், வேட்டல், ஈதல், உழவு, வாணிகம், நிரையோம்பல் என்னும் அறுவகைக் கடமைகளை உடைய வணிகர் கூறும், உழவு, உழவொழிந்த பிற தொழில்கள், ஈதல், (விருந்தோம்பல்), பகடு புறந்தருதல் முதலாயின), ஓதல், வழிபாடு என்னும் அறுவகைக் கடமைகளை உடைய வேளாளர் கூறும் அடங்கிய ஏனோர் பகுதியும்,

73. vāikai tāṉē pālaiyatu puṟanē
tāvil koḷkait tattam kūṟṟaip
pākupaṭa mikutip paṭuttal eṉpa.

Vākait tiṇai is the non-Akam parallel to pālait tiṇai. The general theme of vākait tiṇai is to celebrate in glorious terms the eminence of persons excelling in their respective fields of flawless expertise.

Such tributes of glory may be paid in two ways: either the person eulogizes himself on his excellence or is parised by some one else on that score; or a person is praised on the merits of his own achievement, or he is extolled as excelling others by comparison and contrast.

74. aṟuvakaip paṭṭa pārppaṉap pakkamum
aivakai marapin aracar pakkamum
irumūṉṟu marapin ēṉōr pakkamum
maṟuvil ceyti mūvakaik kālamum
neṟiyiṉ āṟṟiya aṟivaṉ tēyamum
nāliru vaḻakkiṉ tāpatap pakkamum
pālaṟi marapiṉ porunar kaṇṇun,
aṉainilai vakaiyōṭu āṅkeḻu vakaiyāl
tokainilai peṟṟatu eṉmaṉār pulavar.

1. The eminence of "pārppār" in six kinds of duties such as education, teaching, performing sacrifices, causing others to perform sacrifices, liberality and receiving gifts.
(The name pārppār refers to the brahmin class. Antaṇar, Maṟaiyōr, and Aiyar are the other terms used in Tōlkappiyam to refer to the same group of people. This class is not an Aryan group. but a class of Tamil people with distinct cultural features incompatible with those of the Aryan group.)

2. Five kinds of duties characteristic of the ruling class: education, performing sacrifices, munificence, warfare and protecting the people.

3. Six kinds of occupation and duty engaged in by the merchant class: education, performing sacrifices, liberality, farming, business and looking after the cows.
Six kinds of duty and occupation engaged in by the agricultural class: farming, allied trades, hospitality, taking care of the oxen, education and receiving guests and elders with love and devotion.

4. மழை, பனி, வெயில் என்னும் மூன்றுவகைக் காலங்களுக்கும் (பருவங்களுக்கு) அடிப்படையான கோள்நிலைகளை முறைப்பட ஆராய்ந்து அவற்றின் பயன்களை எடுத்துக் கூறும் குற்றமற்ற தொழிலினை உடைய அறிவனது கூறும்,

5. எண்வகைத் துறவையும் யோகநெறிகளையும் உடையதாபதர் கூறும்,

6. வாட்போர், மற்போர் முதலிய போர்நெறிகளைக் கடமையாக உடைய பொருநர் கூறும்,

7. அதுபோன்று சொல், இசை, கூத்து, சூது போன்ற பிறவகைகளில் சிறந்து நிற்கும் கூறும்,

ஆகிய எழுவகை நிலைகளிலும் மேம்பட்ட கூறுகளைத் தொகை நிலைகளாகப் பாகுபடப் பெற்றது வாகைத்திணை என்று பொருளிலக்கணப் புலவர்கள் கூறுவர்.[21]

---

21. பெரும் கருத்துவேறுபாட்டிற்குரிய நூற்பாக்களுள் இதுவும் ஒன்று.

இளம்பூரணர் உரையைப் பெரும்பாலும் அடியொற்றி மேலே கண்ட உரைதரப்பட்டுள்ளது. பார்ப்பனப்பக்கம், அரசர்பக்கம், ஏனோர் பக்கம் என்னும் தொடர்களுக்கு நச்சினார்க்கினியர் தரும் விளக்கமும் காட்டுகளும் தொல்காப்பியர்காலத் தமிழ் மரபுகளுக்கு ஏற்றனவாகத் தோன்றவில்லை. வரம்பிகந்து வடவரொழுக்கத்தைத் தொல்காப்பியர் நூலுக்கு ஏற்றியுரைப்பது பண்பாட்டு வழுவாகத் தோன்றுகிறது. இனி, இவரை மறுத்து எழுந்த இக்கால உரைகாரர்களாகிய ச.சோ. பாரதியார், சோம. இளவரசு ஆகியோர் இந்த நூற்பாவுக்குக் காணும் புத்துரைகளும், எதிர்ப்புகளும் தமிழ்ப் பண்பாட்டின்மீது இவர்கள் கொண்ட பற்றையும் ஆர்வத்தையும் புலப்படுத்துகின்றன வாயினும், தொல்காப்பியரின் நூல்நெறியோடு முற்றிலும் பொருந்துவனவாகத் தோன்றவில்லை. பாலசுந்தரனாரின் காண்டிகையுரை பண்டைய உரையாசிரியர்களை ஓரளவு அடியொற்றி மற்றுமொரு புதிய விளக்கத்தைத் தருகிறது; பாரதியார் போன்றோரின் இக்காலப் புத்துரையை மறுத்து ஒதுக்குகிறது. இவர், "அனைநிலை" என்னும் தொடருக்குரிய வேறுபாடமாக "மனைநிலை" என்னும் தொடரைப் பயன்படுத்துகிறார். இதுவரை நடைபெற்றுள்ள பாடவேறுபாட்டு ஆய்வுகளில், இந்தப் புதுப்பாடம் குறிப்பிடப்பெறவில்லை. 'பொருநர் கண்ணு மனைநிலை' என்பதைக் 'கண்ணும் அனைநிலை' என உரையாசிரியர்கள் பிரிக்க, பாலசுந்தரனார் 'கண்ணூம் மனைநிலை' எனப்பிரித்துக் கொண்டு அதற்கேற்ற இலக்கியச் சான்றுகளைத் தருகிறார்.

4. To study the positions of the planets and other meteoric conditions in terms of their influence and effects on the threefold seasons, the summer, the rainy and the dewy and predict their influences on mankind, is the duty of the sages and astrologers.

5. The eminence of the ascetics in carrying out their eightfold functions in yoga and meditation.

6. The excellence of the warriors in carrying out their martial duties.

7. Excellence in other allied fields such as debates, music, drama, gambling and so on.

The expert poeticians say that vākait tiṇai shall have the above seven groups of duties and occupations to be celebrated in literature as peaks of achievements.[22]

---

22. This is one of the cūtras subjected to various conflicting interpretations. The above paraphrase is based upon the commentary of Iḷampūraṇar.

The Interpretations given by Naccin̲ārkkin̲iyar for the phrases "pārppan̲appakkm", "aracar pakkam" and "ēn̲ōr pakkam" are farfetched and smacks of his bias towards Aryan culture and are not maintainable in regard to the cultural ambience of Tolkāppiyam.

The modern commentators like S.S. Bharatiyār and Soma. Iḷavarasu in righteous reaction to the commentary of Naccin̲ārkkiniyar go to the other extreme and give and interpretation which is also mostly farfetched and irrelevant to the context of the text.

S. Balasundarnar offers yet another interpretation although he follows the medieval commentators very closely. His reading "man̲ainilai" for the existing reading "an̲ainilai" in the penultimate line is quite new but not supported by any other text or manuscript.

75. கூதிர் வேனில் என்றிரு பாசறைக்
காதலின் ஒன்றிக் கண்ணிய வகையினும்
ஏரோர் களவழி அன்றிக் களவழித்
தேரோர் தோற்றிய வென்றியும் தேரோர்
வென்ற கோமான் முன்தேர்க் குரவையும்
ஒன்றிய மரபின் பின்தேர்க் குரவையும்
பெரும்பகை தாங்கும் வேலி னானும
அரும்பகை தாங்கும் ஆற்ற லானும்
புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கமும்
(10) ஒல்லார் நாணப் பெரியவர்க்[23] கண்ணிச்
சொல்லிய வகையின் ஒன்றொடு புணர்த்துத்
தொல்லுயிர் வழங்கிய அவிப்பலியானும்
ஒல்லார் இடவயின் புல்லிய பாங்கினும்
பகட்டி னானும் ஆவி னானும்
துகள்தபு சிறப்பின் சான்றோர் பக்கமும்
கடிமனை நீத்த பாலின் கண்ணும்
எட்டுவகை நுதலிய அவையகத் தானும்
கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமை யானும்
இடையில் வண்புகழ்க் கொடைமை யானும்
(20) பிழைத்தோர்த் தாங்கும் காவ லானும்
பொருளொடு புணர்ந்த பக்கத் தானும்
அருளொடு புணர்ந்த அகற்சி யானும்
காமம் நீத்த பாலி னானுமென்று
இருபாற் பட்ட ஒன்பதின் துறைத்தே.

1. கூதிர்ப் பாசறை, வேனிற்பாசறை எனப் பெயர்பெற்ற இருவகைப் பாசறையிலும் தங்கிப் போர்மேற் கொண்ட பெருவிருப்பால் தன் மனைவிமாட்டுச் செல்லும் காதல் மனத்தை அடக்கிய வென்றியும்.

---

23. இந்த இடத்தில் மட்டும் வரும் பெரியவர் என்னும் சொல்வழக்கு (உயர்திணைப் பன்மைப் பொருளில்) தொல்காப்பியர் காலத்திற்கு உரியதாகக் காணப்படவில்லை. பெரியவர், பெரியோர் என்பதே அவர்கால வழக்காக இருந்திருக்கலாம். தொல்காப்பியத்திற்குப் பிற்பட்டதாகக் கருதப்படும் சங்க இலக்கியத்திலும் ஒரே ஒரு இடத்தில் மட்டும் (நற்.266) உயர்வுப்பன்மையாக இச்சொல் வழங்கப்பட்டுள்ளது. எனவே உரையாசிரியர்கள் கொண்டுள்ள பெரியவர் என்னும் பாடம் ஐயத்திற்கு உரியதாக உள்ளது.

75. kūtir vēṉil eṉṟiru pācaṟaik
kātaliṉ oṉṟik kaṇṇiya vakaiyiṉum
ērōr kaḷavaḻi aṉṟik kaḷavaḻit
tērōr tōṟṟiya veṉṟiyum tērōr
veṉṟa kōmāṉ muṉtērk kuravaiyum
oṉṟiya marapiṉ piṉtērk kuravaiyum
perumpakāi tāṅkum vēli ṉānum
arumpakai tāṅkum āṟṟa lāṉum'
pullā vāḻkkai vallāṇ pakkamum
(10) ollār nāṇap periyavark[24] kaṇṇic
colliya vakaiyin oṉṟoṭu puṇarttut
tolluyir vaḻaṅkiya avippali yāṉum
ollār iṭavayiṉ pulliya pāṇkinum
pakaṭṭi ṉāṉum avi nanum
tukaḷtapu ciṟappiṉ cāṉṟōr pakkamum
kaṭimaṉai nītta pāliṉ kaṇṇum
eṭṭuvakai nutaliya avaiyakat tāṉum
kaṭṭamai oḻukkattuk kaṇṇumai yāṉum
iṭaiyil vaṇpukaḻk koṭaimai yāṉum
(20) piḻaittōrt tāṅkum kava lāṉum
poruḷoṭu puṇarnta pakkat tāṉum
aruḷoṭu puṇarnta akaṟci yānum
kāmam nītta pāli ṉāṉumeṉṟu
irupāṟ paṭṭa oṉpatiṉ tuṟaittē.

Vākait tiṇai consists of eighteen tuṟais or subthemes which celebrate two kinds of heroism, the martial valour and the ethical excellence. The first nine subthemes relate to martial heroism and the next nine to ethical eminence.

1. exclusive concentration on war while staying in warcamps during winter and summer, without allowing his mind to think of his wife at home,

---

24. The noun Periyavar as a human plural is a lonely usage in Tolkappiyam. Even in Cankam literature which is supposed to be later, there is only a solitary occurrence (Nar:266) and that too used as a honorific plural. All the commentators, medieval and modern, have the same reading which sounds quite odd, lexically and linguistically as well.

2. போர்களத்தை ஏர்க்களமாக உருவகிப்பதும், போர்க்கள நிகழ்ச்சிகளை நேரிடையாகவும் உருவகமுகத்தான் களவேள்வியாகவும் வருணிப்பதும் ஆகிய போர்க்கள வென்றியும்,

3. தேர்வீரரை வென்றழித்த அரசனின் தேர்முன் அவனுடைய படைவீரர் ஆடும் குரவையும் அல்லது தேர்மீது வந்த அரசனையும் வீரர்களையும் கொன்று அழித்த அரசன் அவர்களுடைய தேரின்முன்நின்று ஆடும் முன்தேர்க் குரவைக்கூத்தும்,

4. வெற்றிபெற்ற அரசனது தேரின்பின்னால் அவனுடைய வீரர்களும், விறலியரும் அவன் புகழைப்பாடி ஆடும் பின்தேர்க் குரவைக்கூத்தும்,

5. பெரிய பகைப்படையைத் தடுத்து அழிக்கும் வேல்வென்றியும்,

6. பொருதற்கரிய பகைப்படையை எதிர்த்து நின்று அழிக்கும் ஆற்றலும்,

7. வளமற்ற எளியவாழ்க்கையை உடையவனாயினும் மறாது வழங்கும் ஆண்மகனது கொடை வென்றியும், அல்லது, சிறவாத இவ்வுலக வாழ்க்கையை மதியாமல் வானுலக வாழ்க்கையை விரும்பி அதன்பொருட்டு மேற்கொள்ளும் வலிய ஆண்மை மிக்க போர்த்தொழில் வென்றியும்,

8. பகைவர்கள் நாணும்படியாகப் பெரும் மறவர்களைக் குறித்து முன்பு சொன்ன வஞ்சின வகை இரண்டனுள் ஒன்றைத் தேர்ந்து தொன்று தொட்டு வருகின்ற உயிரை வழங்கிய அவிப்பலியும்,

9. பகைவர் நாட்டைக் கைக்கொண்டு உவந்த திறனும் அல்லது வாய்ப்பு நேர்ந்தபோது பகைவரை நட்பாக ஏற்றுக்கொண்ட பெருந்தகவும்,

10. எருதால் சிறப்புடைய சான்றோரின் பெருமையும்,ஆவால் சிறப்புறும் சான்றோரின் பெருமையும்; (வேளாண் மாந்தர், கோவலர் ஆகியோரது பெருமை)

11. பிறர்மனை நயவாத ஒழுக்க வென்றியும்.[25]

---

25. "கட்டில் நீத்தபால்" என்று பாடம் கொள்ளும் நச்சினார்க்கினியர் அரசுக் கட்டிலைத் துறக்கும் பெருமிதம் என்று பொருள் கொள்கிறார். இளவழகனாரும், பாரதியாரும் பாலசுந்தரமும் இவர் பாடத்தைக் கொள்கின்றனர். மர்ரே ராஜம் பதிப்பு இளம்பூரணர் பாடத்தைக் கொண்டுள்ளது. இரண்டில் எது சரியான பாடமாக இருக்கும் என்றுக்ஷ் துணிய இயலவில்லை.

2. Feats of valour in the battle field described as comparable to achievements in agricultural fields or described metaphoricaly as performing sacrifices,
3. the *kuravai* dance infront of the chariot of the victorious king by his soldiers, or a similar dance bythe king himself in front of the chariots of his slain enemies,
4. the *kuravai* dance behind the chariot of the conqueror by his soldiers and dancers, singing his victory over the enemy,
5. the glory of the spear that withstood the attack of the huge army,
6. the might of the warriors to oppose and contain the formidable enemy.
7. generosity in spite of one's limited resources, or determination to fight to the end without caring for one's evanescent life,
8. choosing to sacrifice one's life in keeping with his vows taken in honour of the great heroes and thus putting the enemies to shame,
9. seizure of enemy's land without war, or to make friends with one's enemy should there be an occasion to do so.
10. greatness of those who use bulls and those who use cows for their work or occupation (clebration of the eminence of the agricultural and the pastoral classes).
11. rectitude of a person who never covets other's wife[26]

---

26. Naccin̲ārkkin̲iyar has a different reading for this line as, "kaṭṭil nītta pālin̲ān̲um," meaning, abdicating the throne. Murray Rajam edition follows Iḷampuraṇar, while Iḷavazhakan̲ār, Bharatiyār and Balasundaram follow Naccin̲ārkkin̲iyar's reading. It is very difficult to decide between.

12. குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, நடுவு நிலைமை, அழுக்காறாமை, அவாவின்மை என்னும் எட்டுவகையிலும் சிறந்த அவையத்தாரின் சிறப்பும் அல்லது இத்தகைய சான்றோர் அவையால் மதிக்கப்பெறும் சிறப்பும்,[27]

13. அறநூல்கள் விதித்த ஒழுக்கத்தில் சிறந்து நிற்கும் ஒழுக்க வீரமும்,

14. வற்றாத புகழைத்தரும் ஈகைய இடர்வரினும் தொடர்ந்து செய்யும் கொடைவீரமும்,

15. தம்மாட்டுப் பிழைசெய்தோரைப் பொறுத்துக் காக்கும் கருணை மறமும்,

16. அறம்முதலாகிய மூன்றனுள் நடுவணதாகிய பொருட்பகுதியில் அவரவர் நிலைக்கேற்பச் சிறந்து விளங்கும் பெருமிதமும், மெய்ப்பொருள் உணர்ந்து மேம்பட்ட ஞானவீரமும்,

17. பகை, நொதுமல், நட்பு என்னும் முத்திறத்தார் மாட்டும், பிற உயிர்களிடத்தும் இயல்பாகக் காட்டும் அருளுடைமை முதலான பண்புகளால் சிறந்து நிற்கும் துறவறப்பெருமிதமும்,

18. யான், எனது என்னும் இருவகைப் பற்றுகளையும் நீத்த பேராண்மையும்

என இருவகைப்பட்ட பதினெட்டுத் துறைகளை உடையது வாகைத்திணை, மறப்பண்புகளால் வீறுபெற்றுநிற்கும் மறவாகையும், அறநெறியில் சிறந்துநிற்கும் அறவாகையும் என வாகைத் திணைக்குரிய துறைகள் இருவகைப்படும், முதல் ஒன்பது துறைகளும் மறவாகை. ஏனைய அறவாகை.

---

27. இங்கு வரும் எட்டுவகை என்பதற்கு எல்லா உரையாசிரியர்களும் இளம்பூரணரைப் பின்பற்றியே மேற்கண்டவாறு பொருள் காண்கின்றர். எனினும் எட்டு என்னும் தொகை எண் தொல்காப்பியர் காலத்திலேயே இந்த எட்டுப் பண்புகளைத் தான் குறித்ததா, ஓர் அவையத்திற்கு இந்த எட்டும் தான் சிறந்தன என்னும் ஒழுகலாற்று மரபு அவர் காலத்தேயே இருந்ததா என்று துணிய இயலவில்லை.

12. greatness of the assembly of eminent persons endowed with eight qualities, or greatness of a person acclaimed by such as assembly.[28]

13. virtuous conduct as prescribed by the scriptures,

14 virtue of munificence even in days of penury,

15. graceful mercy shown towards serious offenders,

16. excellence in performing one's social and economic duties, or one's attainment of spiritual enlightenment,

17. greatness of embracing the path of renunciation as a result of cultivating the virtues thereof,

18. heroic virtue of shedding irrevocably all kinds of desires.

---

28. The eight qualities are, heredity, education, virtuous conduct, truthfulness, purity, equity and devoid of envy and desires. All the commentators follow Iḷampūraṇar in interpreting the phrase *eṭṭuvakai*. We have no means of checking whether Tolkāpiyar meant these eight qualities or something else.

76 காஞ்சி தானே பெருந்திணைப் புறனே
பாங்கரும் சிறப்பின் பன்னெறி யானும்
நில்லா உலகம் புல்லிய நெறித்தே

காஞ்சி என்னும் புறத்திணை பெருந்திணை என்னும் அகத்திணைக்குப் புறனாக அமையும். ஒப்பற்ற சிறப்பினை உடைய காஞ்சித்திணை நிலையற்றனவாகிய பல்வேறு வாழ்க்கை நெறிகளை உடைய உலக இயல்போடு பொருந்தியதான நெறியை உடையது. அதாவது நிலையாமைப் பொருண்மையைப் பல்வேறு வாழ்க்கை நிலைகளின் அடிப்படையில் எடுத்துரைக்கும் இயல்பினது என்பதாம்.

77 மாற்றருங் கூற்றம் சாற்றிய பெருமையும்,
கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும்,
பண்புற வரூஉம் பகுதி நோக்கிப்
புண்கிழித்து முடியும் மறத்தி னானும்,
ஏமச் சுற்றம் இன்றிப் புண்ணோன்
பேஎய் ஓம்பிய பேஎய்ப் பக்கமும்,
இன்னன் என்று இரங்கிய மன்னனை யானும்,
இன்னது பிழைப்பின் இதுவா கியன்எனத்
துன்னருஞ் சிறப்பின் வஞ்சினத் தானும்,
(10) இன்னகை மனைவி பேஎய் புண்ணோன்
துன்னுதல் கடிந்த தொடாஅக் காஞ்சியும்,
நீத்த கணவன் தீர்த்த வேலின்
பெயர்த்த மனைவி ஆஞ்சி யானும்,
நிகர்த்து மேல்வந்த வேந்தனொடு முதுகுடி
மகட்பாடு அஞ்சிய மகட்பா லானும்,
முலையும் முகனும் சேர்த்திக் கொண்டோன்
தலையொடு முடிந்த நிலையொடு தொகைஇ
ஈரைந்து ஆகும் என்ப. பேரிசை
மாய்ந்த மகனைச் சுற்றிய சுற்றம்
(20) மாய்ந்த பூசல் மயக்கத் தானும்,
தாமே எய்திய தாங்கரும் பையுளும்,
கணவனொடு முடிந்த படர்ச்சி நோக்கிச்
செல்வோர் செப்பிய மூதா னந்தமும்,

76. kāñci tān̲e peruntiṇaip pur̲an̲ē
pāṅkaruṅ cir̲appin̲ pan̲n̲er̲i yān̲um
nillā ualakam pulliya ner̲ittē.

Kāñcit tiṇai is the non-Akam parallel to peruntiṇai. It has the unique theme of describing the evanescence of life as it is obtained in all the essential aspects of human life.

77. mār̲r̲aruṅ kūr̲r̲am cār̲r̲iya perumaiyum,
kal̲intōr ol̲intōrkku kāṭṭiya mutumaiyum,
paṇpur̲a varūum pakuti nōkkip
puṇkil̲ittu muṭiyum mar̲atti n̲ān̲um,
ēmac cur̲r̲am in̲r̲ip puṇṇōn̲
pēey ōmpiya pēeyp pakkamum,
in̲n̲an̲ en̲r̲u irankiya man̲n̲ai yān̲um,
in̲n̲atu pil̲aippin̲ ituvā kiyan̲en̲at
tun̲n̲aruṅ cir̲appin̲ vañcin̲at tān̲um,
(10) in̲n̲akai man̲aivi pēey puṇṇōn̲
tun̲n̲utal kaṭinta toṭāak kāñciyum,
nītta kaṇavan̲ tīrtta vēlin̲
peyartta man̲aivi āñci yān̲um,
nikarttu mēlvanta vēntan̲oṭu mutukuṭi
makaṭpāṭu añciya makaṭpā lān̲um,
mulaiyum mukan̲um cērttik koṇṭōn̲
talaiyoṭu muṭinta nilaiyoṭu tokaii
īraintu ākum en̲pa. pērical
māynta makan̲aic cur̲r̲iya cur̲r̲am
(20) māynta pūcal mayakkat tān̲um
tāmē eytiya tāṅkarum paiyuḷum,
kaṇavan̲oṭu muṭinta paṭarcci nōkkic
celvōr ceppiya mūtā n̲antamum,

நனிமிகு சுரத்திடைக் கணவனை இழந்து
தனிமகள் புலம்பிய முதுபா லையும்,
கழிந்தோர் தேஎத்துக் கழிபடர் உறீஇ
ஒழிந்தோர் புலம்பிய கையறு நிலையும்,
காதலி இழந்த தபுதார நிலையும்,
காதலன் இழந்த தாபத நிலையும்,
(30)நல்லோள் கணவனொடு நளியழல் புகீஇச்
சொல்லிடை இட்ட மாலை நிலையும்,
அரும்பெருஞ் சிறப்பின் புதல்வன் பயந்த
தாய்தப வரூஉம் தலைப்பெயல் நிலையும்,
மலர்தலை உலகத்து மரபுநன்கு அறியப்
பலர்செலச் செல்லாக் காடு வாழ்த்தொடு
நிறையருஞ் சிறப்பின் துறையிரண்டு உடைத்தே.

1. விலக்குதற்கு அரிய கூற்றத்தின் வலிமையை (யாக்கை நிலையாமையை) விளக்கும் பெருங்காஞ்சியும்,

2. இளமை தீர்ந்து முதுமையுற்றோர் இன்னும் இளமையாய் இருப்போர்க்கு இளமைநிலையாமையைத் தம்மையே காட்டி விளக்கும் முதுகாஞ்சியும்,

3. புகழ்விரும்பிப் பெற்றதாயினும், விழுப்புண்பட்ட உடம்புதானும் நிலையற்றதென ஓர்ந்து அப்புண்ணைக் கிழித்து மடியும் மறக்காஞ்சியும்,

4. பாதுகாக்கும் சுற்றத்தார் இல்லாமையால் புண்பட்டுக் கிடப் போனை யாமத்திலும் அருகிருந்து பேய் பாதகாத்தலைக் கூறும் பேய்க் காஞ்சியும்,

5. இன்ன இன்ன தன்மை யுடையோன் இறந்துபட்டனனே எனப் பிறர் இரங்கிக்கூறும் மன்னைக் காஞ்சியும்,

6. இன்னவாறு செய்வேன் என மொழிந்து அவ்வாறு செய்து முடிக்கேன் ஆயின், இன்னவாறு ஆகக் கடவேன் எனக்கூறும் வஞ்சினக் காஞ்சியும்,

7. இனிய நகையார்ந்த மனைவி புண்பட்டுக் கிடந்த தன் கணவனைப் பேய் நெருங்கித் தொடாதவாறு காத்துத் தானும் அவனைத் தொடாது நிற்கும் தொடாக் காஞ்சியும்,

nanimiku curattiṭaik kaṇavaṉai iḻantu
taṉimakaḷ pulampiya mutupā laiyum
kaḻintōr tēettuk kaḻipaṭar uṟil
oḻintōr pulampiya kaiyaṟu nilaiyum,
kātali iḻanta taputāra nilaiyum,
kātalaṉ iḻanta tāptta nilaiyum
(30) Nallōl kaṇavanoṭu naliyaḻal pukiic
colliṭai iṭṭa mālai nilaiyum,
arumperun cirappin putalvan paanta
taytapa varuum talaippeyal nilaiyum,
malartalai ulakattu marapunanku ariyap
palarcelac cellak katu valttotu
niṟaiyaruñ ciṟappiṉ tuṟaiyiraṇṭu uṭaittē.

Kāñcit tiṇai is said to have two equal sets of turai or subthemes. One according to Tolkāppiyar's tradition or his contemporary theorists; the other set according to Tolkāppiyar himself. The fact that Tolkāppiyar first enumerates the ten subthemes according to the tradition and then the other ten according to his own theory suggests that he accepts the tradition and follows it and that there would have been considerable distance from his tradition either in time or space which could have offered him sufficient data, literary and social, to formulate his own theory regarding various aspects of the theme of *kāñci* tiṇai which might not have been available to his tradition.

1. the subtheme of peruñ *kāñci* demonstrates the inevitability of death to all,
2. mutu *kāñ* : elderly people describe the evanescence of youth to the young, citing themselves,
3. maṟak *kāñci*: about a warrior who kills himself by tearing up his war-wounds even though they are earned as tokens of bravery,
4. pēyk *kāñci*: about the devils who tend the wounded warrior as there are none nearest and dearest to take care of him,
5. maṉṉaik *kāñci*: a dead king or a patron or a warrior being eulogised by bards and minstrels enumerating his deeds of virtue and valour,
6. vañciṉak *kāñci*: taking a vow to become such and such, if one were to fail to do or accomplish certain tasks proclaimed by him to undertake,
7. toṭāk *kāñci*: the passionate wife of a wounded warrior guarding him against the devils touch and herself abstaining from embracing him,

8. தன்னைக் கைம்பெண்ணாக்கித் தன்கணவனின் உயிர் பிரிவதற்குக் காரணமாயிருந்த வேலினாலே தன்னுயிரையும் உடம்பிலிருந்து பெயர்த்துக்கொண்ட மனைவியைக் கண்டோர் அஞ்சிய ஆஞ்சிக் காஞ்சியும்,
9. தம் மகளை மணங்கொள்ளப் படையொடு வந்த வேந்தனுக்குத் தொல்குடியிற் பிறந்த தம் மகளை மணம்முடிக்க அஞ்சிய தொல்குடியினர் அவனோடு போரிடும் மகட்பாற் காஞ்சியும்,
10. இறந்துபட்ட தன் கணவனின் தலையைத் தன் மார்பினும் முகத்தினும் அணைத்து மனைவியும் இறந்த நிலையொடு கூடிப் பத்தாகும் என்பர் சிலர்.
11. பெரும் புகழுடையவனாய் மாய்ந்துபட்ட மறவன் ஒருவனைச் சுற்றி அவனது சுற்றத்தார் அவன் மாய்ந்தமைக்கு இரங்கி அழுத மயக்கமும்,
12. தாம் அடைந்த பொறுத்தற்கரிய துன்பத்தினைக் கூறும் நிலையும்,[29]
13. கணவன் இறந்ததும் அவனொடு தானும் இறந்து பட்ட மனைவியின் இறப்பைக் கண்டோர் பிறர்க்கு உணர்த்திய மூதானந்தமும் (பெருமிதம் மிக்க சாக்காடு),
14. கொடிய சுரத்தின்கண் தன் கணவனை இழந்து தனியளாய் தலைமகள் வருந்தி அழுத முதுபாலையும் (பெரும்பிரிவு),
15. இறந்தோரைக் குறித்து அவரொடு தொடர்புடையார் மிகவும் வருந்தி இரங்கிப் புலம்பும் கையறு நிலையும்,
16. மனைவியை இழந்த கணவனது தபுதார நிலையும்,
17. கணவனை இழந்த மனைவியின் கைம்மை நோற்று உழலும் தாபத நிலையும்,

---

29. "தாமே ஏங்கிய" என்னும் பாடங்கொண்ட நச்சினார்க்கினியர் இதற்கு முன்னர் உள்ள துறையோடு தொடர்பு படுத்தி, "சுற்றத்தாருமின்றி மனைவியர் தத்தம் கொழுநரைத் தழீஇயிருந்து அழுதது கண்டோர் பொறுத்தற்கரிய நோய்" என்று பொருள் கொள்கிறார். முன்னும் பின்னும் வரும் துறைகள் கணவனை இழந்த பெண்களைப் பற்றியனவாதலின், நச்சினார்க்கினியர் கருத்து இவ்விடத்தே பொருத்தமாகப்படுகிறது. இளம்பூரணரும் பிறரும் இதனை, ஆடவர் மீது ஏற்றியுரைக்கின்றனர். இருவகையான கருத்துகளுக்கும் சங்கப் பாடல்கள் சான்றாகக் காட்டப்படுகின்றன.

8. *āñcik kāñci*: people staring at a wife who killed herself with the spear which, thrown by the enemies, killed her husband and caused her the misery of widowhood,

9. *makaṭpār kāñci*: people of ancient clan fearing to give their daughters in marriage to the invading king and rising against the king for a fatal battle,

10. Some grammarians hold that with the pitiable state of a wife dying by clasping the head of her slain husband against her chest and face, the number of subthemes pertaining to kāñcit tiṇai is ten.

11. great din and confusion caused by the close relatives of a dead warrior of great repute,

12. wives and mothers of dead warriors expressing their agonies and sorrows,[30]

13. *mūtāṉantam*: Onlookers appreciating the wife who instantaneously dies on seeing her husband dead,

14. *mutupālai*: Wife bewailing the death of her husband on the way through the arid tract,

15. *kaiyaṟu nilai*: lamenting the death of great warriors and other significant persons, by those who knew them for long,

16. *taputāra nilai*: lamentable condition of the bereaved husband,

17. *tāpata nilai*: pitiable state of the widow,

---

30. Naccinarkkiṉiyar has an alternate reading, 'ẽnkiya' for 'eytiya' in line 21 and interprets this subtheme as relating to wives and mothers of the dead warrior. In view of the fact that both the preceding and following subthemes relate to the bereaved women, his interpretation sounds to be nearer the central run of the theme. Iḷampūraṇar and others take it to mean grief striken warriors over their misfortunes outside war. Literary evidences support both the interpretations.

18. மாய்ந்த கணவனொடு மனைவி செறிந்த ஈம நெருப்பில் புகுமிடத்து இடையிட்டுத் தடுத்தோர்க்குக் கூறும் சொல் நிலையும்,

19. அரும்பெருஞ் சிறப்பினையுடைய மகனைப்பெற்ற தாய் அவன்பொருது மடிந்தமை அறிந்து அவனொடு சேர்ந்து மடியத் துணியும் நிலையும்,

20. அகன்ற இடத்தையுடைய இவ் உலகத்தின் வரலாற்று முறை மையினை யாவரும் நன்கு உணரத்தக்க வகையில், இதன்கண் தோன்றினாரெல்லாம் மாய்ந்தொழியத் தான்மட்டும் மாயாது நிற்கும் புறங்காட்டினை வாழ்த்தும் காடு வாழ்த்தாகிய துறையோடு, ஒப்பற்ற சிறப்பினை உடைய காஞ்சித்திணை இருவகைத் துறைகளை உடையதாகும்.

"மாற்றருங் கூற்றம் சாற்றிய பெருமை முதலாகத் தலையொடு முடிந்த நிலையொடு கூடக் காஞ்சித் திணையின் துறைகள் பத்து என்று கூறுவர்," இப் பகுதியைப் பிறன்கோள் கூற்றாகத் தொல்காப்பியர் கூறுகிறார். அவற்றை உடம்பட்ட ஆசிரியர் பூசல் மயக்கம் முதலாகக் காடு வாழ்த்து ஈறாக வரும் வேறு பத்துத் துறைகளையும் தம்கோளாகக் கூறி, ஆகக் காஞ்சித் திணை இருவகைத் துறைகளை உடையது என்று பெற வைக்கிறார்.[31]

**78. பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே**
**நாடும் காலை நாலிரண்டு உடைத்தே.**

பாடாண் திணைப் பகுதி கைக்கிளை என்னும் அகத்திணைக்குப் புறனாகும். ஆராயும் காலத்து அது எட்டு வகையினை உடைத்து.

---

31. ஏனைய திணைகளுக்குத் துறைகளைத் தொகை கொடுத்து, "ஈரேழ் துறைத்தே, எழு மூன்று துறைத்தே, துறை பதின்மூன்றே, நால்மூன்றே துறை, பன்னிரு துறைத்தே, ஒன்பதின் துறைத்தே" என்று கூறும் தொல்காப்பியர் இங்குமட்டும், 'துறையிரண்டு உடைத்தே' எனக் கூறுவதால் இதனை விளக்குவதில் உரைகாரர்களிடையே கருத்து வேறுபாடு தோன்றலாயிற்று, பிற திணைகளின் துறைச் சூத்திரங்களின் முடிபிற்கும் இச்சூத்திரத்தின் முடிபிற்கும் வேறுபாடு காணப்படுவதால், இச்சூத்திரத்தின் இறுதிப் பகுதி சிதைந்திருக்கலாம் எனக் கருதும் ச.சோ. பாரதியாரின் ஐயம் ஏற்கத் தக்கதே.

18. words of dissent expressed by the wife to those who dissuaded her from leaping onto the funeral pyre of her husband,
19. the brave decision of a mother to die with her glorious son who had a valiant death,
20. *kāṭu vāḻttu*: glorifying the cremation ground / graveyard as the only deathless entity in the wide world suggesting that everything else is subject to death and decay; thus Kāñcit tiṇai has two sets of subthemes.[32]

78. pāṭāṇ pakuti kaikkiḷaip puṟanē
nāṭum kālai nāliranṭu uṭaittē.

Pāṭan tiṇai is the non-Akam parallel to kaikkiḷait tiṇai. It is of eight kinds, when examined carefully.

32. In contrast to his method of giving the specific number of subthemes to tiṇais, veṭci through vākai, Tolkāppiyar ends this cūtra saying, "it has two tuṟai". Though it could be glossed as two sets of tuṟai as the commentators do, S.S. Bharatiyār's conjecture as to a probable corruption in the text towards the end seems to be sustainable.

எட்டு வகையாவன: கடவுள் வாழ்த்துவகை, வாழ்த்தியல் வகை, மங்கலவகை, செவியறிவுறுத்தல், ஆற்றுப்படைவகை, பரிசில் துறை வகை, கைக்கிளை வகை, வசைவகை என்பன.[33]

**79. அமரர்கண் முடியும் அறுவகை யானும்**
**புரைதீர் காமம் புல்லிய வகையினும்**
**ஒன்றன் பகுதி ஒன்றும் என்ப.**

அமரர்கண் முடியும் கொடிநிலை, கந்தழி, வள்ளி, புலவராற்றுப்படை, புகழ்தல், பரவல் என்னும் ஆறனுள்ளும், குற்றம் தீர்ந்த காமத்தைப் பொருந்தியவகையிலும் ஒரு கூற்றின் பகுதி பாடாண் திணையாதற்குப் பொருந்தும். அதாவது, கொடிநிலை முதலிய ஆறும் கடவுளைப் புகழ்தலன்றிப் பாட்டுடைத் தலைவனைச் சார்ந்து வருவனவும், காமப்பகுதியில் இயற்பெயர்ச்சுட்டி வருவனவும் பாடாண் திணைப் பொருளாகும் என்பது கருத்து.[35]

**80. வழக்கியல் மருங்கின் வகைபட நிலைஇப்**
**பரவலும் புகழ்ச்சியும் கருதிய பாங்கினும்**
**முன்னோர் கூறிய குறிப்பினும் செந்துறை**
**வண்ணப் பகுதி வரைவின்று ஆங்கே.**

---

33. இச்சூத்திரத்துள் வரும் 'நாலிரண்டு' என்பதற்கு எட்டு வகை என்று இளம்பூரணம் உள்ளிட்ட எல்லா உரைகளும் கூறுகின்றன. ஆயினும் எட்டு என்னும் எண்ணிக்கையை விளக்குமிடத்து ஒவ்வொரு உரையும் ஒன்றையொன்று மறுத்து வெவ்வேறு வகைகளைத் தருகிறது. மேலே தரப்பட்டவை இளம்பூரணர் கூறுவன. வஞ்சி முதலாகக் காஞ்சியீறாக உள்ள திணைகளின் முதற் சூத்திரங்கள் அவ்வத் திணைகளின் பொருண்மையைக் கூறிப்பின்னர் அவற்றின் வகையும், துறையும் இத்துணை என்றும், பின்னர் அவ்வகைகளையும் துறைகளையும் இன்ன இன்ன என்றும் விரித்துக் கூறுகின்றன. வெட்சித் திணையின் பெயரும் வகையும் முதலில் கூறப்பட்டுப் பின்னர் அவ்வகைகள் இன்ன என்று விரித்துக் கூறப்படுகின்றன. ஆனால் பாடாண் திணை இன்ன பொருண்மைத்து என்பதும் கூறப்படவில்லை. நாலிரண்டு என்பன யாவை என்பதும் தெளிவாகக் கூறப்படவில்லை. எனவே நாலிரண்டாவன இன்ன எனத் தெளிவாக ஐயத்திற இடமின்றி உணர்ந்து கொள்ள இயலாத நிலை ஏற்பட்டுள்ளது.

35. 'அமரர்', அறுவகை என்னும் இரு சொற்களும் இங்குக் கருத்து வேறுபாட்டிற்கு இடந்தருவனவாக அமைந்துள்ளன. அமரர் என்பதற்குக் கடவுளர் என இளம்பூரணரும் வீரர் எனச் ச.சோ. பாரதியாரும், சிவலிங்கனாரும், பாலசுந்தரனாரும் பொருள் காண்கின்றனர். மேலே தரப்பட்டுள்ளது இளம்பூரணர் கருத்து. இதற்குரிய இலக்கியச் சான்றுகளை இளம்பூரணர் தரவில்லை. இடைக்காலத்தெழுந்த சிற்றிலக்கிய வகைகளை உட்கொண்டதாக இவர் உரையின் பெரும் பகுதி காணப்படுகிறது. மேலும் இவர்காட்டும் கொடி நிலை முதலாய ஆறும் பின்னர் வரும் நூற்பாக்களில் தனித்தனியே விளக்கப்படுகின்றன. வீரர்கள் எனப் பொருள் கொள்வோர் அறுவகை என்பதற்கு ஆறுவகைப் பாடாண் எனக் கொண்டு வெட்சி முதல் காஞ்சி ஈறாகிய ஆறு புறத்திணைகளுள் புகழ்தற்பொருட்டாக வரும் பகுதிகளைச் சான்று காட்டுகின்றனர். தொல்காப்பியம் மானுடம் பற்றிய ஒழுகலாறுகளைப் பண்டைய இலக்கிய மரபின்படி கூறும் இலக்கணமாதலின், பாரதியார் முதலானோர் கூறும் உரை பொருத்தமாகப்படுகிறது. நச்சினார்க்கினியர் உரை தொல்காப்பியர் காலத் தமிழ் மரபோடு ஒன்றிப்போகாமை வெளிப்படை.

The eight kinds are: praise to God, praise to kings and patrons, celebration of auspicious occasions, advice and admonition, guiding the bards and minstrels to a promising patron, rewards to bards and minstrels, aspects of kaikkiḷai and rebuke.[34]

79. amararkaṇ muṭiyum aṟuvakai yāṉum
puraitīr kāmam pulliya vakaiyiṉum
oṉṟaṉ pakuti oṉṟum eṉpa.

Of the six kinds of literary compositions on gods such as koṭinilai, kantaḻi, vaḷḷi, pulavarāṟṟuppaṭai, pukaḻtal and paraval, and of the compositions dealing with the akam love, such of the portions which relate to (human) titular heroes belong to the theme of pāṭāṇ.[36]

80. vaḻakkiyal maruṅkiṉ vakaipaṭa nilaiip
paravalum pukaḻcciyum karutiya pāṅkiṉum
muṉṉōr kūṟiya kuṟippiṉum centuṟai
vaṇṇap pakuti varaiviṉṟu āṅkē.

---

34. There is hardly any agreement among the commentators and critics as to what the eight kinds are. The above eight are according to Iḷampūraṇar. The cūtras pertaining to all the six from vetci through kāñcit tinai, first define them in terms of their themes and then give the number of kinds and subthemes and in the subsequent cūtras enumerate them in detail. But the cūtras relaing to pāṭāṇ do neither define the theme nor enumerate the eight kinds in detail, a deviation from the method followed in regard to the earlier tinais. Hence the irreconcilable differences of opinion among the commentators, not only with regard to this cūtra and but also with regard to several that follow dealing with pāṭāṇ. Thus it remains a crux.

36. The terms 'amarar' and 'aruvakai' are interpreted differently by different commentators. Iḷampūraṇar whose interpretation is given above, takes them to mean 'gods' and 'six kinds' as given above. He does not cite literary texts as illustrations to elucidate his views. His interpretation might have been suggested by medieval texts which answer to his descriptions. Moreover, the six kinds detailed by him are treated separately by Tolkāppiyar in the succeeding cūtras.

S.S. Bharatiyar, Sivalinganar and Balasundaram take the term "amarar' to mean warriors and "aṟuvakai' to mean the appropriate aspects of the earlier six tinais in so far as they constitute the praise of the warriors, and cite literary evidences from cankam works wherever available. Nacciṉārkkiṉiyar's interpretation is simply beside the point. Tolkāppiyam being a treatise on the poetical conventions of the ancient Tamils and since both Akam and Puram theories relate to the idealised aspects of human life, the interpretations provided by Bharatiyār and others sound to be more relevant to the context.

பாடாண் பொருண்மையைப் புலனெறி வழக்கிற்கேற்ப வகைப்படுத்திப் பாடுமிடத்து முன்னின்று பரவலும், புகழ்ச்சியும் பற்றிக் கூறமிடத்தும், முன்னோர் கூறிய குறிப்பில் பாடுமிடத்தும் செந்துறை வண்ணத்தில் பாடுவது கடியப்படாது. அதாவது, கடவுளரைப் புகழ்ந்துபாடும் தேவபாணியும், காமம் பற்றிப் பாடும் பாட்டும் பாடாண் பொருளில் பாடப்படும் பொழுது செந்துறைப் பாட்டிற்குரிய செய்யுள் வடிவில் பாடுவது கடியப்படுதல் இல்லை. எல்லாச் செய்யுளும் இதற்குப் பொருந்தும் என்பது கருத்து. (பாடாண் பொருள் இல்லாதவிடத்து செந்துறை வண்ணமாகப் பாடப் பெறுதல் மரபு).[37]

**81. காமப் பகுதி கடவுளும் வரையார்
ஏனோர் பாங்கினும் என்மனார் புலவர்.**

கடவுளர் மாட்டும் மானிடர் மாட்டும் காமம் பொருளாகப் பாடப்பெறும் மரபு பாடாண்திணைக்குரியது என்று கூறுவர் புலவர். அதாவது கடவுளர் மாட்டுத் தெய்வப் பெண்டிரும் மானுடப்பெண்டிரும் காதல் கொள்வதாகப் பாடுதல் பாடாண்திணையைச் சேர்ந்த தாகும் என்பது கருத்து.

37. இச்சூத்திரத்தில் வரும் 'முன்னோர் கூறிய குறிப்பு', 'செந்துறை வண்ணம்' என்னும் தொடர்களுக்குப் பொருள் கொள்வதில் உரையாசிரியர்களிடையே கருத்துவேறுபாடு காணப்படுகிறது. 'முன்னோர் கூறிய குறிப்பு' என்பதற்கு 'அகப்பொருள் பாடும் பாட்டு' என்று இளம்பூரணரும், "அறம் பொருளின்பங்களின் கூறுபாடு தோன்ற முன்னுள்ளோர் கூறிய குறிப்புப் பொருள்" என்று நச்சினார்க்கினியரும், "அறநெறி முறைமையாக முன்னோர் கூறிய உறுதிப்பொருள்" என்று பாலசுந்தரனாரும்," பரவலும் புகழ்தலும் அல்லாப் பிற துறைகள்" என்று ச.சோ. பாரதியாரும் பொருள் காண்கின்றனர்.

'செந்துறை வண்ணம்' என்பதற்குச் செந்துறைப்பாட்டு என இளம்பூரணரும், "உலகினுள் இயற்கை வகையான் இயன்ற மக்களைப் பாடுதல்" என நச்சினார்க்கினியரும், 'இசைத்தமிழ்ப் பாட்டுவகை' எனச் ச.சோ. பாரதியாரும், "உயர்வு நவிற் சியின்றிப் பட்டாங்குக் கூறும் முறைமை" எனப் பாலசுந்தரனாரும் பொருள் காண்கின்றனர். வண்ணம் என்பதற்கு இசைக்கூறு எனப் பாரதியாரும், வண்ணித்துக் கூறுதல் எனப் பாலசுந்தரனாரும் பொருள் கொள்வர். நால்வகைச் சாதிப் பிரிவுகள் எனப் பொருள் கொள்ளும் நச்சினார்க்கினியர் கருத்து சூத்திரப் பொருளோடு பொருந்தாமை வெளிப்படை.

"பிற திணைகளிற் போலப் பாடாணிலும் இயற்பாக்கள் பெரிதும் வழங்கும். இங்குக் குறித்த சில பாடாண் வகைகளுக்கு மட்டும் இயற்பாக்களே யன்றி இசைப்பா வண்ணக்கூறுகளும் வந்து பயில்வதும் உண்டு" என்னும் ச.சோ. பாரதியாரின் உரை இச்சூத்திரத்திற்குப் பெரிதும் பொருந்திவரக் காணலாம். மேலே தரப்பட்டுள்ள இளம் பூரணரின் உரையோடு பெரும்பாலும் இது ஒட்டிச் செல்வதையும் காணலாம்.

In accordance with the poetic conventions, the themes of praising, in person (ode) and in absence, and of love may be composed in any poetic form, not excluding the centurai vaṇṇam.[38]

81. kāmap pakuti kaṭavuḷum varaiyār
ēṉōr pāṅkiṉum eṉmaṉār pulavar.

To sing of female deities and earthy women to be in love with gods is not forbidden, say the grammarians. That is to say, to portray she - gods and women as in love with gods is also, according to the tradition, considered as a subtheme of *pāṭāṇ tiṇai.*

38. The phrases, 'muṉṉōr kūṟiya kuṟippu' and 'Centuṟai Vaṇṇam' are interpreted in various ways. Ilampuranar takes the former to mean akam poetry, Naccinarkkiniyar to mean the theme of tirivarga followed by Balasundaram and S.S. Bharatiyār to mean themes other than two kinds of praising.

Centuṟai Vaṇṇam' is interpreted as 'centuṟaip pāttu' by Iḷampūraṇar, "to sing of persons as they are found in this world" by Nacciṉārkkiṉiyar, 'a kind of poetry set to music' by S.S. Bharatiyār and as 'to sing of persons without exaggeration by balasundaram.

'Vaṇṇam' is interpreted as 'a kind of musical composition' by S.S. Bharatiyār, 'to describe' by Balasundaram and as 'four kinds of castes' by Nacciṉārkkiṉiyar. It is obvious that Nacciṉārkkiṉiyar's interpretation is farfetched and irrelevant to the context.

"*Pāṭāṇ tiṇai* is, like the earlier tiṇais generally composed as *iyaṟpā*, that is, verses without being set to music. The above mentioned subthemes of *pāṭāṇ* may, however, be composed either as *iyaṟpā* or as *icaippā*, that is, verses set to music," This interpretation by Bharatiyār, generally agreeing with that of Iḷampūraṇar, gos very well with the text.

**82. குழவி மருங்கினும் கிழவ தாகும்**

மிகவும் இளையோர் மாட்டுக் காமம் நிகழ்வதாகப் பாடுதலும் பாடாண்திணைக்கு உரியதாகும்.[39]

**83. ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப வழக்கொடு சிவணிய வகைமை யான.**

அரசனும் அவனை ஒத்தாரும் ஊரின்கண் உலாவருதலும் பாடாண் திணைக்குரிய பொருளாகும் என்று கூறுவர். அங்ஙனம் பாடுமிடத்துச் சான்றோர் தம் புலனெறி வழக்கோடும், உலக வழக் கோடும் பொருந்திய வகையில் பாடப்பெறும்.[41]

---

39. இளம்பூரணர் முதலான பல உரையாசிரியர்கள் இச்சூத்திரத்திற்கு ஏறக்குறைய மேற்கண்டவாறே பொருள் கொள்கின்றனர். நச்சினார்க்கினியர் மட்டும் பிள்ளைத் தமிழ் இலக்கிய வகைக்கு அடிப்படையானதாக இச்சூத்திரத்தைக் கருதி பொருளுரைப்பர். இக்கருத்து வரலாற்று வழுவுடையதென்பது வெளிப்படை.

"காமப்பகுதி கடவுளும் வரையார்" என்னும் சூத்திரத்தையடுத்து வருவதால் இளம்பூரணர் முதலானோர் இவ்வாறு பொருள் கொள்ள நேர்ந்திருக்கலாம். சங்கச் சான்றுகள் இல்லாமையால் பிற்கால இலக்கியங்களைச் சான்றாக இவர்கள் காட்டுகின்றனர். பாரதியாரோ கலித்தொகைப் பாடல் ஒன்றையே இப்புறத்திணைக்குச் சான்றாகக் காட்டுகிறார். கைக்கிளைப் பொருண்மையுடைய அப்பாடலை இவர் புறத்திணையாகக் கொள்வது எவ்வளவு தூரம் தொல்காப்பியர் நெறிக்குப் பொருந்தும் என்பது ஐயத்திற்குரியது.

'அரசர், மறவர், தெய்வம் போன்ற பெரியவர்களைப் புகழ்தலும், பரவுதலும் செய்தலைப் போன்று, சிறிய குழந்தைகளையும் அவற்றின் சிறப்பியல்புகளைப் புகழ்ந்து பாடுதலும் பாடாண் திணைக்கு உரியதாகும்' என்று பொருள் கொள்வது பொருத்தமாக இருக்கலாமோ என்று இம் மொழிபெயர்ப்பாளர் கருதுகிறார். "படைப்புப் பல படைத்து" எனத் தொடங்கும் பாண்டியன் அறிவுடை நம்பியின் புறப்பாட்டை (188) இதற்குரிய சங்கச் சான்றாகக் காட்டலாம். புறநானூற்றுக்குத் திணை, துறை வகுத்தோர் பெரும்பான்மையும் பிற்கால நூலாகிய புறப்பொருள் வெண்பா மாலையை அடிப்படையாகக் கொண்ட காரணத்தால் இப் புறப்பாட்டு பொதுவியல் திணைக்குரியதாகக் குறித்தனர்போலும். தொல்காப்பியர் பொதுவியல் என்று ஒரு திணையைக் கூறவில்லை என்பதும் இங்குக் கருதத் தக்கது. புறப்பொருள் வெண்பா மாலை ஓர் இலக்கண நூலன்று. ஓர் எடுத்துக்காட்டு இலக்கியம் (தஞ்சை வாணன் கோவையைப் போன்று) என்பதும் இங்குச் சிந்திக்கத் தக்கது.

41. இச்சூத்திரத்திற்கு இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் கொள்ளும் பொருள் தொல்காப்பியர் கால வழக்கொடு பொருந்துவனவாகத் தெரியவில்லை. சிவலிங்கனாரின் கருத்தை அடியொற்றி மேலே கண்ட உரை தரப்பட்டுள்ளது. தலைமக்களின் ஊர்ச் சிறப்பும் குடிப்பிறப்பும் பற்றிக் கூறுவதும்பாடாண் எனப் பாரதியார் கொள்ளும் பொருளும் பொருத்தமாகவே தோன்றுகிறது.

82. kuḻavi maruṅkiṉum kiḻava tākum.

Portrayal of adults to be in love with children is also a subtheme of *pāṭāṇ tiṇai.*[40]

83. ūroṭu toṟṟamum urritteṉa moḻipa
valakkoṭu civaṇiya vakaimai yāṉa.

To glorify the king and other dignitaries as they go in procession along the streets is also subtheme of *pāṭāṇ tiṇai*. Such portrayal should, however, conform to the conventions of life and letters.[42]

---

40. Most of the commentators interpret this cūtra as above. Naccīṉārkkiṉiyar alone takes it to herals a new genre 'piḷḷait tamiḻ' and interprets accordingly. It is simply anachronistic.

The occurence of this cūtra immediately after the previous one might have suggested to the commentators the theme of love. They are, however, unable to provide illustrations from cankam or contemporary literature and hence draw ilustrations from later works, S.S. Bharatiyār cities an illustration from *Kalittokai* which is an anthology of *Akam* poems. It passes one's comprehension how an Akam poem could serve as an illustration for a puṟam theme.

This translator prefers the following interpretation: "to sing of the attributes of or the chracteristic pleasures afforded by the children is also an appropriate subtheme of *pāṭāṇ tiṇai*". A poem in purananuru (188) by pantiyan Arivutai Nampi may be cited as an illustration for this theme. The colophon provided to this poem assigns this to potuviyat tinai of which Tolkappiyar says nothing. Since the anonymous compilers of purananuru have followed a later work called purapporul venpa malai or some other work for identifying the tinais, one need not be guided by such colophons. It is beyond our comprehension why Tolkappiyam was not followed in this regard and also why the medieval commentators have drawn heavily on this later work for classification of purattinai and for illustrations as well. It may be noted that this later work is not a grammar or a treatise, but an illustrative piece of poetry for some other treatise, like tañcaivāṉaṇ kōvai.

42. The commentaries on this cutra by Iḷampūraṇar and Naccīṉārkkiṉiyar are based on medieval literary practice and hence anachronistic. The above gloss is given on the basis of Sivaliṅganar's interpretation. The interpretation by S.S. Bharatiyar that "to sing of the glory of heredity and the country of the heroes and worthy women also beongs to *pāṭāṇ tiṇai*" is also relevant to the context.

**84. மெய்ப்பெயர் மருங்கின் வைத்தனர் வழியே.**

தலைமக்களின் இயற்பெயர்களைக் கூறி வாழ்த்து, பரவல் முதலான பொருண்மைகளைப் பாடுதலைப் பாடாண்திணையின் மரபாகக் கொண்டனர் முன்னோர். காமம் பொருளாக வரும் பாடாண் திணைக்கும் இது பொருந்தும்.

**85. கொடிநிலை கந்தழி வள்ளி என்ற**
**வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்**
**கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே.**

குற்றமற்ற சிறப்பினை உடைய முதலனவாகிய கொடிநிலை, கந்தழி, வள்ளி என்றமூன்றும் கடவுள் வாழ்த்தைச் சார்ந்து வரும்.[43]

**86. கொற்ற வள்ளை ஓரிடத் தான.**

கொற்ற வள்ளை ஒரோவழி பாடாண்திணைப் பொருளாகும். வஞ்சித் திணைக்குரிய வள்ளைப் பாட்டு கடவுள் வாழ்த்தொடு பொருந்தி வருமிடத்துப் பாடாண்திணைக்கும் உரியதாகும் என்பது கருத்து.

**87. கொடுப்போர் ஏத்திக் கொடாஅர்ப் பழித்தலும்**
**அடுத்து ஊர்ந்து ஏத்திய இயல்மொழி வாழ்த்தும்**
**சேய்வரல் வருத்தம் வீட வாயில்**

---

43. இந்நூற்பாவில் வரும் கொடிநிலை. கந்தழி, வள்ளி என்ற மூன்றுக்கும் பொருள் காண்பதில் உரையாசிரியர்கள் பெரிதும் வேறுபடுகின்றனர். யாருடைய உரை இவ்விடத்திற்குப் பொருத்தமானது என்று துணிய இயலவில்லை. நச்சினார்க்கினியரின் உரை பொருந்தவில்லை என்பது மட்டும் வெளிப்படை. பாரதியார் 'கந்தழி' என்னும் பாடத்தைக் 'காந்தள்' என மாற்றிக் கொண்டு உரை காண்கிறார்.

இம்மூன்றனுள் "கொடி நிலை, கந்தழி" என்பன இரண்டும் தொல்காப்பியத்தில் இந்த நூற்பாவில் மட்டும் வந்துள்ளன. வள்ளி என்பது இங்கும், 65, 92 ஆகிய நூற்பாக்களிலும் வந்து முறையே கூத்து (65) மலர் (92) என்ற பொருள்களில் வழங்குகிறது. இந்நூற்பாவில் வள்ளி என்ன பொருளில் வழங்குகிறது எனத் துணிய இயலவில்லை. மேலும் "கடவுள் வாழ்த்து" என்னும் தொடர் தொல்காப்பியத்துள் வேறெங்கும் வழங்கவில்லை. உரையாசிரியர்கள் காட்டும் இலக்கியச் சான்றுகளும் இந்த நூற்பாவின் உண்மைப் பொருளை உணர்ந்து கொள்ள உதவுமாறு இல்லை. இளம்பூரணர் காட்டும் இரண்டு பாடல்கள் பு.வெ. மாலைக்கு உரியனவாயினும் புறத்திணைப் பொருளோடு பொருந்திவரக் காணலாம்.

84. meyppeyar maruṅkiṉ vaittaṉar vaḻiyē.

Tradition allows the use of proper names for persons glorified in *pāṭāṇtiṇai*, irrespective of their being gods or human or of the themes whether of love or of *puṟam*.

85. koṭinilai kantaḻi vaḷḷi eṉṟa
vaṭuniṅku ciṟappiṉ mutalaṉa mūṉṟum
kaṭavuḷ vāḻttoṭu kaṇṇiya varumē.

The three namely koṭinilai, kantaḻi and vaḷḷi which do not have defects of any sort would occur along with the theme of praise of god.[44]

86. koṟṟa vaḷḷai ōriṭat tāṉa.

When praise of god is intended koṟṟa vaḷḷai, a folklore form sung in praise of kings and warriors as a theme of vañci may also become a theme of pāṭāṇ.

87. koṭuppōr ēttik koṭāarp paḻittalum
aṭuttuūrntu ēttiya iyalmoḻi vāḻttum
cēyvaral varuttam vīṭa vāyil

44. commentators differ very widely in interpreting the three terms and hence it is very difficult to decide on any one of them. Though Iḷampūranar does not give the gloss for these terms, his two illustrative poems drawn from a later work seem to be relevant to the context, while Naccinārkkiṉiyar's interpretation is farfetched, Bharatiyār changes the reading *kantaḻi* into *kantaḷ* to suit his own interpretation.

Of these three terms, *koṭinilai* and *kantaḻi* do not occur anywhere else in Tolkāppiyam. *Vaḷḷi* occurs in three places including the present cūtra. In other places it clearly means dance (65) and flower (92). But its meaning in this cūtra is not clear. Moreover, the term *kaṭavuḷ vāḻttu* does not occur anywhere else in Tolkāppiyam. The illustrative poems cited by the commentators, except Iḷampūraṇar, do not help us to resolve the crux.

காவலர்க்கு உரைத்த கடைநிலை யானும்
கண்படை கண்ணிய கண்படை நிலையும்
கபிலை கண்ணிய வேள்வி நிலையும்
வேலை நோக்கிய விளக்கு நிலையும்
வாயுறை வாழ்த்தும் செவியறி வுறூஉவும்
ஆவயின் வரும் புறநிலை வாழ்த்தும்
(10) கைக்கிளை வகையோடு உளப்படத்தொகைஇத்
தொக்க நான்கும் உளவென மொழிப.

1. கொடுப்போரைப் புகழ்தலும், கொடாதவர்களைப் பழித்துரைத்தலும்,
2. அரசனை அடுத்து அவனது இயற்கையையும் வென்றியையும் சிறப்பித்துப் பாடும் இயன்மொழி வாழ்த்தும்,
3. சேய்மையிலிருந்து வருவதால் ஏற்பட்ட வருத்தம் நீங்குமாறு வாயில் காவலர்க்குத் தம் வருகையை அரசனுக்குக் கூறுமாறு உரைத்த கடைநிலையும்,
4. அரசன் இனிது துயின்ற நிலையைக் கூறுதலும் அல்லது துயிலுமாறு வேண்டிப்பாடுதலும்,
5. காராம் பசுக்களைக் கொடையாகத் தருதலைப் பாடுதலும்,
6. விளக்கினை ஏதுவாகக் காட்டி வேலின் வெற்றியைப் பாடுதலும் அல்லது விளக்கினைக் காட்டி அரசனின் செங்கோல் வளையாத சிறப்பினைப் பாடுதலும்,
7. வேம்பும் கடுவும் போன்ற சொற்களால் வாழ்க்கைக்கு எப்போதும் பயன்படும் அறிவுரைகளைக் கூறும் வாயுறை வாழ்த்தும்,
8. உயர்ந்தோர் மாட்டு எவ்வாறு பணிந்துநின்று அறிவுரை பெற்று ஒழுகவேண்டும் என்று விளக்கும் செவியறிவுறூஉவும்,
9. வழிபடு தெய்வம் காக்க, பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து வாழ்க என்று கூறும் புறநிலைவாழ்த்தும்,
10. அகத்திணை மரபினின்று வேறுபட்டுவரும் கைக்கிளையுடன் சேர்த்துத் தொகைப்படுத்திய நான்கும் மேலனவும் பாடாண் திணைக்குரிய துறைகளாகும் என்று கூறுவர்.

kāvalark kuraitta kaṭainilai yān̲um
kaṅpaṭai kaṇṇiya kaṇpaṭai nilaiyum
kapilai kaṇṇiya vēḷvi nilaiyum
vēlai nōkkiya viḷakku nilaiyum
vāyur̲ai vāl̲ttum ceviyar̲i vur̲ūuvum
āvayin̲ varūum pur̲anilai vāl̲ttum
(10) kaikkiḷai vakaiyōṭu uḷappaṭat tokaiit
tokka nān̲kum uḷaven̲a mol̲ipa

1. to praise those who liberally give and to blame those who do not,
2. *iyan̲mol̲i vāl̲ttu* whereby the king is praised for his goodnaturedness and victory over others,
3. *kaṭainilai*, a subtheme wherein the bards or minstrels request the sentry at the gate to inform the king about their arrival after a wearisome journey from afar,
4. to sing the king to bed or describe his peaceful sleep,
5. to sing the gift of brown cows,
6. to praise the spear by comparing the image of a lamp. or to praise the sceptre of the king as steady and straight as the flame of a lamp,
7. *vāyur̲ai vāl̲ttu*, a subtheme describing the admonition given to the king by the wise in the path of virtues of permanent value,
8. *ceviyar̲i vur̲ūu*, a subtheme giving instructions as to how one should behave with elders while receiving their advice and guidance,
9. *pur̲anilai vāl̲ttu* a subtheme wherein the wise bless the king or others with long, prosperous, and blameless life under the divine protection of the gods of their following,
10. the fourth subtheme *kaikkiḷai* which is different from the Akam kaikkiḷai and those that preceded them are said to belong to *pāṭāṇ tiṇai*.

88. தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்
சூதர் ஏத்திய துயில்எடை நிலையும்
கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்
சென்று பயன் எதிரச் சொன்ன பக்கமும்
சிறந்த நாளினிற் செற்றம் நீக்கிப்
பிறந்த நாள்வயின் பெருமங்கலமும்
சிறந்த சீர்த்தி மண்ணுமங் கலமும்
(10) நடைமிகுத்து ஏத்திய குடைநிழல் மரபும்
மாணார்ச் சுட்டிய வாள்மங் கலமும்
மன்எயில் அழித்த மண்ணுமங் கலமும்
பரிசில் கடைஇய கடைக்கூட்டு நிலையும்
பெற்ற பின்னரும் பெருவளன் ஏத்தி
நடைவயின் தோன்றிய இருவகை விடையும்
அச்சமும் உவகையும் எச்சம் இன்றி
நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்
காலம் கண்ணிய ஓம்படை உளப்பட
ஞாலத்து வரூஉம் நடக்கையது குறிப்பின்
(20) காலம் மூன்றொடு கண்ணிய வருமே.

1. துயிர்வோர்க்குக் (துயிலும் அரசர்க்கு) குற்றமற்ற நற்புகழ் பெருகவேண்டிச் சூதர் பாடும் துயிலெடை நிலையும்,[45]

2. கூத்தர், பாணர், பொருநர், விறலி ஆகியோர் வள்ளல்களிடத்துத் தனித்தனியே தாம்பெற்ற பெரும் பரிசுப்பொருள்களோடு தத்தம் இருப்பிடம் நோக்கித் திரும்பி வரும்பொழுது வழியில் எதிர்ப்பட்ட கூத்தர் முதலானவர்கள் மிகவும் வறியநிலையில் இருப்பதைக் கண்டு, தாம் சந்தித்த வள்ளல்களைப் பற்றிப்புகழ்ந்து கூறி அவர்கள் அளித்த பரிசுப்பொருள்களையும் அவர்கட்குக்காட்டி, "நீங்களும் இவ் வள்ளல்களைக் கண்டு ஆடுதல், பாடுதல் முதலியன செய்து பெரும்பரிசுகளைப் பெற்று மகிழ்வீராக" என்று கூறி ஆற்றுப்படுத்தும் ஆற்றுப்படைநிலையும்,[47]

---

45. இத்துறைப் பொருளே பிற்காலத்தே கடவுளர் சார்ந்த திருப்பள்ளி எழுச்சியாகவும், அதன் பின்னர் நாட்டைத் துயிலெழுப்பும் திருப்பள்ளி எழுச்சியாகவும் மலர்ந்து புதியதொரு இலக்கிய வகையாகவே பரிணமித்தது என்று கருதலாம். அரசன், தெய்வம், பொது மக்கள் எனப் பாடுபொருளில் காலந்தோறும் ஏற்பட்டுள்ள மாற்றம் சிந்திக்கத்தக்கது.

47. இத்துறைப் பொருள் ஆற்றுப்படை என்னும் பெயரில் முதலில் நெடும் பாடல்களாகவும், பிற்காலத்தே தனித்ததொரு சிற்றிலக்கிய வகையாகவும் வளர்ச்சி பெற்றுத் தொடர்ந்து வழக்கில் இருந்து வருகிறது.

88. tāvil nallicai karutiya kiṭantōrkkuc
cūtar ēttiya tuyileṭai nilaiyum
kūttarum pāṇarum porunarum viṟaliyum
āṟṟiṭaik kāṭci uṟaḻat tōṉṟi
peṟṟa peruvaḷam peṟāarkku aṟivuṟīc
cēṉṟupayaṉ etirac coṉṉa pakkamum
ciṟanta nāḷiniṟ ceṟṟam nīkkip
piṟanta nāḷvayiṉ perumaṅ kalamum
ciṟanta cīrtti maṇṇumaṅ kalamum
(10) naṭaimikuttu ēttiya kuṭainiḻal marapum
māṇārc cuṭṭiya vāḷmaṅ kalamum
maṉeyil aḻitta maṇṇumaṅ kalamum
paricil kaṭaliiya kaṭaikkūṭṭu nilaiyim
peṟṟa piṉṉarum peruvaḷaṉ ētti
naṭaivayiṉ tōṉṟiya iruvakai viṭaiyum
accamum uvakaiyum eccam iṉṟi
nāḷum puḷḷum piṟavaṟṟiṉ nimittamum
kaḷam kanniya ōmpaṭai uḷappaṭa
ñālattu varūum naṭakkaiyatu kuṟippiṉ
(20) kālam mūnotu kaṇṇiya varumē.

The following subthemes (tuṟai) also belong to pāṭāṇ tiṇai:

1. Bards singing the praise of the king in the morning to wake him up from his sleep,[46]

2. āṟṟuppaṭai, a subtheme which describes the dancers, the bards, the actors and the dancing women who had received sumptuous rewards from a king or a patron meeting, on their way back, other dancers, bards, etc., in utter poverty and directing them to the same king or patron for receiving similar fabulous gifts.[48]

46. This subtheme later developed into a minor form of literature in Tamil, namely 'tiruppaḷḷi yeḻu cci', replacing the king by gods during the Middle Ages and by the nation representing the common people in the Twentieth Century, indicating shifts of ideologies in terms of social power and patronage the king- god- the common man.

48. This subtheme also later developed into a minor form of literature in Tamil, namely āṟṟuppaṭai, during the Middle Ages and as a minor genre continues to be in use. As in the case of the previous tūṟai, here also changes have been made in terms of the patron and the receiver of gifts as well.

3. போர்காலத்துப் புகழ்ந்துபாடிய செற்றம்போன்ற பண்புகளை விடுத்து, அரசனின் பிறந்த நாளன்று அவனுடைய அருளாண்மைப் பண்புகளைப் புகழ்ந்து பாடும் பெருமங்கலமும்,

4. சிறப்புமிக்க புகழினை உடைய முடிசூட்டு விழாவினை ஆண்டு தோறும் கொண்டாடுமிடத்துப் பாடிப் புகழும், புண்ணிய நீராடுதலாகிய மண்ணு மங்கலமும்,

5. அரசனது ஒழுக்கச் சிறப்பினையும் தண்ணளியையும் குடையின் மேலேற்றிப் புகழும் குடைநிலை வாழ்த்தும்,

6. பகை அரசன், பகை மறவர் முதலானோரின் வீரத்தை அவர்தம் வாளின் மேல் ஏற்றிப் பாடும் விழாவாகிய வாள்மங்கலமும்,

7. நிலைபேறுடையதாகக் கருதப்பட்ட பகைவரது மதிலைக் கைப்பற்றி அழித்த வெற்றியினைப் பாடும் தூய்நீராடும் விழாவாகிய மண்ணுமங்கலமும்,

8. வள்ளல்களிடத்தே செல்லும் கூத்தர்முதலானோர் தமக்குப் பரிசில் வழங்குமாறு கூறும் பரிசில் கடாநிலையும்,

9. பரிசில் பெற்றபின்னரும் தாம் பெற்ற பரிசில்களின் வளப்பத்தினைப் புகழ்ந்து வள்ளல்களிடமிருநது பிரிந்து செல்லும் இருவகையான விடைபெறுதலும், (இருவகையாவன: அரசன் அல்லது வள்ளல் விடைகொடுப்பப் பிரிந்து செல்லுதலும், போதல் வேண்டும் எனத் தாமே கூறி விடைபெற்றுச் செல்லுதலும்)

10. நாளும் கோளும், புள்ளும், பிற நிமித்தங்களும் காரணமாக நன்மை புலப்படின் மகிழ்ந்தும், தீங்கு புலப்படின் அஞ்சியும் காலநிலைகளுக்கேற்ப அரசனுக்கு ஏதம் விளைவாதிருக்கக் கருதி உரைக்கும் ஓம்படை வாழ்த்தும் உட்பட

மேற்கூறிய துறைகளும், முக்காலத்துக்கும் ஏற்ப உலகியல் நடைமுறையில் திரிந்தும், புதியனவாகவும் தோன்றும் வழக்காறுகளை ஒட்டிவரும் பொருள்களும் பாடாண்திணைக்கு உரியனவாகும்.[49]

---

49. நூற்பா 87,88 ஆகிய இரண்டும் பாடாண் திணைக்குரிய துறைகளைக் கூறுகின்றன. துறைகளை மட்டும் இரண்டு நூற்பாக்களாகப் பிரித்துக் கூறப்பட்டதன் காரணம் புலப்படவில்லை. சில உரையாசிரியர்கள் தரும் விளக்கங்கள் முற்றிலும் பொருந்துவனவாக இல்லை. மேலும் மேற்சுட்டிய இரண்டு நூற்பாக்களிலும் துறைகளுக்குத் தொகைகொடுத்துக் கூறப்படவில்லை. அடிக்குறிப்பு 31ஐக் காண்க.

3. perumaṅkalam a subtheme about singing the benign qualities of a king on his birthday, without referring to his ferocious feats of war,
4. *maṇṇumaṅkalam*, a subtheme about hailing the king as the greatest and the noblest, on his coronation day and about the auspicious ceremony of bathing him with holy waters,
5. *kuṭainilai vāḻttu*, a subtheme praising the royal umbrella as providing mercy and shelter to all the subjects,
6. *vāḷmaṅkalam*, a subtheme praising the sword of the rival king or his warrior signifying his prowess in the battle,
7. maṇṇumaṅkalam: to celebrate the king's capture and ruining of the enemy's fort by bathing him with holy waters,
8. paricil katānilai: bards, dancers etc., approaching the king or a patron and praying him for rewards,
9. iruvakai viṭai: bards praising the king for his munificence in giving them fabulous rewards and taking leave of him either on their own or at the king's will,
10. *ōmpaṭai vāḻttu* a subtheme whereby the bards observing the positions and movements of heavenly bodies like the sun, the moon and the stars, the omens from the birds and the like, and perceiving their aspectual effects on the king, rejoice if they are beneficial and wish him well if they (the effects) foretell any doom or calamity,

These subthemes and such of those which may emerge anew in future as a result of changes in the social order owing to passage of time belong to the general theme of *pāṭāṇ tiṇai*.[50]

---

50. cūtras 87 and 88 enumerate the subthemes of *pāṭāṇ tiṇai*, without giving the total number of subthemes as in the case of earlier *tiṇais*. The reasons put forward by some commentators as to why the subthemes are given in two separate cūtras in contrast to the author's earlier method, do not seem to tell the whole truth. Authenticity of the text especially towards the end of these two cūtras is doubtful. See also footnote 32.

# BIBLIOGRAPHY


*சிவலிங்கனார், ஆ., (1991)*
**தொல்காப்பியம்-உரைவளம்-** *அகத்திணையியல்.*

*சிவலிங்கனார்,ஆ., (1996)*
**தொல்காப்பியம் - உரைவளம்** - *புறத்திணையியல், சென்னை: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.*

**தமிழ்நெறி விளக்கம்** *(ப.ஆ.), உ.வே. சாமிநாதையர் (1947) சென்னை: உ.வே.சா. நூல்நிலைய வெளியீடு.*

**தொல்காப்பியம்** *(ப.ஆ.), இளவழகனார் (1967) சென்னை: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்.*

**தொல்காப்பியம்-பொருளதிகாரம்-இளம்பூரணம்.** *சென்னை: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1953.*

**தொல்காப்பியம்** *(மூலம்) (பதிப்பு), மர்ரே. எஸ். ராஜம் (1957) சென்னை.*

**தொல்காப்பிய மூலம்-பாட வேறுபாடுகள்** *(ப.ஆ.), கே.எம். வேங்கடராமையா, ச.வே. சுப்பிரமணியன், ப.வெ. நாகராசன் (1996) திருவனந்தபுரம்: பன்னாட்டுத் திராவிட மொழியியல் கழகம்.*

**பழந்தமிழ் நூற்சொல்லடைவு** பகுதி I *(1967)*, II *(1968)*, பகுதி III *(1970). பாண்டிச்சேரி : பிரஞ்சு இந்தியக் கலைக்கழகம்.*

*பாலசுந்தரம், ச., (1989)* **தொல்காப்பியம் ஆராய்ச்சிக் காண்டிகையுரை** *பொருளதிகாரம்- அகத்திணையியல் & புறத்திணையியல். தாமரை வெளியீட்டகம்.*

**Chambers 21st Century Dictionary**, New Delhi: Allied Chambers (India) Ltd., 1997.

**Concise Oxford Dictionary of Current English**, Ninth Edition Oxford: Oxford University Press, rpt. 1998 (1995).

**Concise Oxford Thesaurus**, A Dictionary Synonyms, Oxford: Oxford University Press, rpt. 1997 (1995)

Ilakkuvanar, S. (1963) **Tolkāppiyam in English with Critical Studies,** Madurai:, Kuralneri Publishing House.

Indra Manuel, 1997 **Literary Theories in Tamil** (with special feference to Tolkappiyam) Pondicherry: Pondicherry Institute of Linguistics and Culture.

**Oxford Advanced Learner's Encyclopedic Dictionary**, Oxford: Oxford University Press, 1993.

Selvamony, Nirmal, 1989, **Tolkāppiyam: akattinai iyal** (translated into English) Nagarcoil: Sobitham

Subramanya Sastri, P.S. (1950) **Tolkappiyam - Porul - Atikaram** - Tamil Poetics Part I Akattinai iyal - Purattinai iyal, Madras, The Kuppuswami Sastri Reserch Institute.

Tamil Lexicon Vols. I-VII Madras: University of Madras, 1924-1938.

Varadaraja Iyer, E.S. rpt. 1987 (1948) **Tolkāppiyam - Porulatikaram** (Translated into English) Annamalai Nagar, Annamalai University.

## பொருளகராதி*



---

* தொல்காப்பிய நூற்பாக்கள், அவற்றிற்குரிய கருத்துரை மற்றும் அடிக்குறிப்புகளிற் காணப்பெறும் இன்றியமையாத பெயர்கள், கருத்தீடுகள், அடிக்கருத்துகள் ஆகியன இந்தப் பொருளகராதியில் இடம்பெற்றுள்ளன.

# SUBJECT INDEX *



---

* Names and themes included in this index relate to the text and the interpretation as well.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

## சென்னை - 600 113

### அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| வ.உ.சி. பன்முகப் பார்வை | 25.00 |
| தமிழில் பிறதுறைக் கோட்பாட்டாய்வுகள் வரலாறும் மதிப்பீடும் | 25.00 |
| தமிழ்க்கடல் இராய. சொக்கலிங்கம் | 30.00 |
| தமிழிலக்கியத்தில் மனித நேயம் | 115.00 |
| திருக்குறளில் பொதுநிலை உத்திகள் | 30.00 |
| தமிழ் உரைநடையும் கிறித்தவர் பங்களிப்பும் | 20.00 |
| சித்தாந்தச் செல்வர் க. வெள்ளைவாரணனார் | 25.00 |
| மகாவித்துவான் ரா. ராகவையங்கார் | 30.00 |
| திருவாவடுதுறைப் புராணம் | 250.00 |
| காஞ்சிபுரம் கி.பி. 6-ஆம் நூற்றாண்டிற்கு முன் | 65.00 |
| பெரியபுராணம் - திருமுறைகளின் கவசம் | 55.00 |
| சைவசித்தாந்தத்தில் ஆன்மக் கொள்கை | 65.00 |
| திராவிட இயக்க இதழ்கள் தொகுதி 1 | 60.00 |
| இதழாளர் பெரியார் | 160.00 |
| தமிழர் கண்ட தாவரவியல் | 40.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 1851-2000 | 180.00 |
| மௌனத்தின் அதிர்வுகளும் மொழியும் - பெண் | 40.00 |
| தமிழரின் மரபுச் செல்வங்கள் - அறிவியல், தொழில்நுட்பம் I | 90.00 |
| தமிழரின் மரபுச் செல்வங்கள் - அறிவியல், தொழில்நுட்பம் II | 100.00 |
| தமிழிலக்கிய வகைமையியல் தொகுதி-1 | 130.00 |
| தமிழிலக்கிய வகைமையியல் தொகுதி-2 | 115.00 |
| தமிழிலக்கிய வகைமையியல் தொகுதி-3 | 150.00 |
| ஏ.என். சிவராமனின் பத்திரிகை உலகம் | 30.00 |
| மக்கள் நேயச் சுயமரியாதை | 30.00 |
| வேதாத்திரியத்தில் சமூகவியல் இறையியல் சிந்தனைகள் | 130.00 |
| தமிழ் ஆய்வு இதழ்கள் | 50.00 |

---

556 - தொல்காப்பியப் பொருளதிகாரம் கருத்துரையும் மொழிபெயர்ப்பும் 50.00